ஸெப்டம்பர் 29 முதல்

தமிழ் நாடெங்கும்

நடைபெறுகிறது



ஸ்ரீ கிருஷ்ணா ப்ரொடக்ஷன்ஸ்

# சந்திரிகா

தமிழ்

டைரக்ஷன் வி.எஸ்.ராகவன்

## சந்திரிகா

மலையாளம் கேரளம் முழுவதும்

வெற்றிகரமாக நடைபெறுகிறது

ஸ்ரீ கிருஷ்ணா ப்ரொடக்ஷன்ஸ் 110 E. மவுண்ட்ரோட், மதராஸ்.




★

## கோ-ஆப்டெக்ஸ்
### கைத்தறி ஜவுளிகள்

பெரிதும் விரும்பப்படுவதின் காரணம் அவற்றின்

- ★ உயர் ரகம்
- ★ மோஸ்தர்
- ★ உழைப்பு
- ★ கெட்டிச் சாயம்
- ★ விலை

வேஷ்டிகள் - புடவைகள் - ஷர்ட்டிங் துவாலைகள் - மேஜை விரிப்புகள் அலங்கார ஜவுளி வகை-போர்வைகள் கைக்குட்டைகள் முதலியன

இந்த மாகாணத்திலுள்ள எமது 63 எம்போரியங்களில் ஏதாவது ஒன்றிற்கு விஜயம் செய்து உங்களுக்கு வேண்டியதை வாங்கிக் கொள்ளுங்கள்

●

**மதராஸ் கைத்தறி நெசவாளர் மாகாண கூட்டுறவு சங்கம் லிட்.**

"ஹாலோவேஸ் கார்டன்ஸ்"

34, பாந்தியன் ரோடு, எழும்பூர்

சென்னை



# ஏழே நாட்களில் நீரழிவு வியாதி குணமாகும்!

★

எவ்வளவு நாட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான வீனஸ் சார்ம் வியாதியை முற்றிலும் குணமாக்கிவிடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல் சொரி சிரங்கு ஆகிய இவைகளே இவ் வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். வீனஸ் சார்ம் ஆயிரக் கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்.

★

**50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0**

(தபால் செலவு இலவசம்)

★

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**

# திருமணம்



**ஆண்டாளம்மாள் - வரதராஜுலு ராஜு**

திருவாரூர்—விஜயபுரம் கே. டி. ஆர். வாசனைத் திரவிய உற்பத்திசாலை அதிபரும், ஹரிஜன சேவா சங்கத் தலைவரும், தஞ்சை மாவட்டக் கழக உறுப்பினருமாகிய ஸ்ரீ கே. டி. ஆர். கோபாலகிருஷ்ண ராஜு அவர்களின் ஜேஷ்ட புத்திரி சௌபாக்கியவதி ஆண்டாளம்மாளுக்கும், அரிமளம் ஸ்ரீ வி. வ. மாணிக்க ராஜு அவர்களின் ஜேஷ்ட புத்திரனும், கலைமணி கூட்டாசிரியருமான செஞ்சீவி வரதராஜுலுக்கும் 14—9—50 அன்று மணமகள் இல்லத்தில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது.

நாட்டின் பல பாகங்களிலிருந்து பிரபலஸ்தர்களும், நண்பர்களும், உறவினர்களும் விஜயம் செய்தனர். திருமண வைபவத்தின்போது சென்னை பிரதமர் ஸ்ரீ பி. எஸ். குமாரசாமி ராஜா, மராமத்து இலாகா மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்சலம், உணவு மந்திரி ஸ்ரீ ரோச் விக்டோரியா, மத்திய சர்க்கார் ரயில்வே உதவி மந்திரி ஸ்ரீ சந்தானம், "ஹிந்து" ஆசிரியர் ஸ்ரீ கே. சீனுவாசன், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கே. காமராஜ், சட்டசபை சபா நாயகர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை, சர். ஆர். எஸ். சர்மா, "தினசரி" ஆசிரியர் ஸ்ரீ சொக்கலிங்கம், ஜூபிடர் ஸ்ரீ சோமு, டைரக்டர் ஸ்ரீ சாமி, பல எழுத்தாளர்கள், மற்றும் நண்பர்கள் வியாபாரிகளிடமிருந்தும் பல ஆசிச் செய்திகளும் பரிசுகளும் வந்தன.

நன்கு அலங்கரிக்கப்பட்ட, பிரமாண்டமான பந்தலில் ஸ்ரீமதி என். ஸி. வசந்த கோகிலம் கோஷ்டியாரால் உயர்தர இன்னிசை நடைபெற்றது.




மலர் 10 இதழ் 9 } அக்டோபர் 1 { விக்ருதி ஞ புரட்டாசி 15



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




# பாரிஜாதம்

கண்ணைக்கவரும் காட்சிகள்
மனதை உருக்கும் பாட்டுகள்
மாசற்ற ஹாஸ்ய கட்டங்கள்
ஜிலு, ஜிலுப்பான நடனங்கள்
நிறைந்தது

**தீபாவளி அன்று வெளிவருகிறது!**

**லாவண்யா பிக்சர்ஸ் லிமிடெட் · எழும்பூர், மதராஸ்.8.**



# கல்கி

மலர் 10 இதழ் 9


## என்ன செய்தி?

# காங்கிரசும் கண்ட்ரோலும்

**நா**ஸிக் நகரில் பிரம்மாண்டமான முன் ஏற்பாடுகளுடன் ஆரம்பமான 56-வது காங்கிரஸ் மகாசபை இரண்டே தினங்களில் அலறிப் புடைத்துக்கொண்டு நடந்து முடிந்து விட்டது! அவ்வளவுக்கு க்ஷேமந்தான் என்று சொல்ல வேண்டியதில்லையல்லவா? விஷயாலோசனைக் கமிட்டியில் முடிவான தீர்மானங்களை மளமளவென்று காங்கிரஸில் பிரேரேபித்தார்கள். சவுக்கினால் அடித்து ஜட்கா வண்டிக் குதிரையை விரட்டுவதுபோல் விரட்டினார்கள். தீர்மானங்கள் ஓரேயடியாக மிரண்டுபோய், "இதோ நிறைவேறுகிறோம்; நிறைவேறி விட்டோம்!" என்று சரணாகதி பாடிக்கொண்டு நிறைவேறின.

காங்கிரஸில் நிறைவேறிய தீர்மானங்கள் எல்லாம் ஜவாஹர்லால்ஜியின் கருத்தின்படி தயாரிக்கப்பட்டவையாகும். அவை அவ்வளவு துரிதமாக நிறைவேறியதிலிருந்து ஒரு விஷயம் வெட்ட வெளிச்சமாயிற்று. அதாவது நாஸிக்கில் கூடிய மற்றக் காங்கிரஸ் தலைவர்களோ, காங்கிரஸ் பிரதிநிதிகளோ, வெளிப்படையாக ஜவாஹர்லாலுடன் விரோதித்துக்கொள்ளத் தயாராயில்லை யென்பதேயாகும். காந்தி மகான் காங்கிரஸுக்குள் இருந்தாலும் காங்கிரஸுக்குப் புறம்பாக இருந்தாலும் தேசமக்களின் ஒப்பற்ற தலைவராக எப்படி விளங்கினாரோ, அப்படி இன்று ஜவாஹர்லால் விளங்குகிறார். அவரை ஏடாகூடமாக எதிர்த்துக் காங்கிரஸிலிருந்து அப்புறப்படுத்தி விட்டால், பிறகு காங்கிரஸின் பெயரைச் சொல்லிக் கொண்டு நாட்டில் தலைகாட்ட முடியாது. வேறு எந்த விதத்திலும் நாட்டில் செல்வாக்குப் பெறவும் முடியாது. ஆகையால் வரப்போகும் சட்டசபைகள், மந்திரி சபைகளைக் கைப்பற்றுவதற்கெல்லாம் ஜவாஹர்லாலின் செல்வாக்கு அவசியம் தேவை. அவர் என்ன வேணுமானாலும் தீர்மானங் கொண்டுவந்து நிறைவேற்றிக் கொள்ளட்டும்; திவ்யமாய் இரண்டு கைகளையும் தூக்குகிறோம். சட்டசபைகளைக் கைப்பற்றும் மகத்தான நோக்கத்துக்காக என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார்! ஜவாஹர்லால் தீர்மானங்களுக்குக் கை தூக்குவதுதானா கஷ்டமான காரியம்?...

இப்படிப்பட்ட மனோபாவத்துடனேயே நாஸிக்கில் கூடிய காங்கிரஸ் பிரதிநிதிகள் பெரும்பாலோர் நடந்து கொண்டார்கள் என்பது ஒரு சம்பவத்திலிருந்து தெள்ளத் தெளிய வெளியாயிற்று.

"கண்ட்ரோல் முறை நாட்டின் நலத்துக்கு அவசியமானது" என்ற கருத்தைக் கொண்ட ஒரு தீர்மானம் காங்கிரஸில் விவாதத்துக்கு வந்தது. அதைப் பற்றி யாரோ ஒரு சில அபூர்வப் பிரதிநிதிகள் ஆட்சேபத்தைக் கிளப்பினார்கள். இந்த ஒரு விஷயத்தைப் பற்றித்தான் காங்கிரஸில் அபிப்பிராய பேதம் என்பது தலைகாட்டியது. ஆட்சேபித்தவர்கள் வற்புறுத்தியபடியால் வோட்டு எடுக்கும்படியான அவசியமும் ஏற்பட்டுவிட்டது. உடனே ஜவாஹர்லாலுக்கு ஆள்மேல் ஆள்விட்டு அழைத்து வந்தார்கள். அவர் வராவிட்டால் தீர்மானம் 'ஹோ கயா' ஆகிவிடும் என்று பயமாகி விட்டது. ஜவாஹரும் வந்தார். கண்ட்ரோலை ஆதரித்துப் பேசினார். வோட்டு எடுக்கப்பட்டது. சாதகமாக 190 பிரதிநிதிகளும் பாதகமாக 117 பிரதிநிதிகளும் வோட்டு அளித்தார்கள். தீர்மானம் நிறைவேறியது. காரியக் கமிட்டியின் மானம் பிழைத்தது. தேசத்தில் ஒரு தர்மசங்கடமான நிலைமை ஏற்படாமல் போயிற்று.

இதில் முக்கியமான விசேஷம் என்னவென்றால், இந்த முக்கியமான தீர்மானத்தின்பேரில் மொத்தம் வோட்டு செய்த காங்கிரஸ் பிரதிநிதிகள் 307 பேர்தான்!

அப்போது அவ்வளவு பேர்தான் காங்கிரஸில் இருந்தார்கள். மற்றப் பிரதிநிதிகள் எல்லாரும் எங்கே போனார்கள்? ஏன் போனார்கள்? என்ன செய்யப் போனார்கள்? பந்தலில் இருந்து தீர்மானத்துக்கு வோட்டு செய்வதைக் காட்டிலும் முக்கியமான வேலை அவர்களுக்கு என்ன இருக்கக் கூடும்? இதற்குத்தானா இவ்வளவு கஷ்டப்பட்டு, கிராம பஞ்சாயத்துத் தேர்தல் முதற்கொண்டு பிரம்மப் பிரயத்தனம் செய்து, பல முறைகளையும் கையாண்டு, காங்கிரஸ் பிரதிநிதிகள் ஆனார்கள்?...... உண்மை என்ன வென்பதை நேயர்கள் ஊகித்தறியலாம். காங்கிரஸ் பிரதிநிதிகளுக்குக் காங்கிரஸில் வரும் தீர்மானங்களைப் பற்றி யாதொரு கவலையும் இல்லை. அடுத்த சட்டசபைத் தேர்தலைப் பற்றித்தான் அவர்களுக்குக் கவலை! காங்கிரஸில் என்ன தீர்மானம் வந்தால் என்ன? அல்லது போனால்தான் என்ன?

கண்ட்ரோல் அவசியம் என்று ஜவாஹர்லால் சொல்லிவிட்டார்; காங்கிரஸும் ஒப்புக்கொண்டது; நாமும் ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். ஒப்புக் கொள்ளாவிட்டால் யார் விடுகிறார்கள்? ஆனாலும் ஒரே ஒரு விஷயத்தை இங்கே நாம் குறிப்பிட்டே தீரவேண்டும். "கண்ட்ரோல்கள் பொதுஜன க்ஷேமத்துக்கு அவசியம்" என்று நம் மாபெரும் தலைவர்களும் மந்திரிகளும் சொல்கிறார்கள். அப்படியிருக்கப் பொது ஜனங்கள் கண்ட்ரோல்களை ஏன் வெறுக்க வேண்டும்? தங்களுக்கு நன்மை எது என்பதைத் தெரிந்து கொள்ள நம் ஜனங்களுக்குச் சக்தி இல்லையா?

காரணம் இதுதான்: கண்ட்ரோல்களினால் ஏற்படும் நன்மைகள் சந்தேகத்துக்கு இடம். ஆனால் அவற்றினால் ஏற்படும் சங்கடங்கள் பிரத்யட்ச அநுபவம்.

ஏற்கெனவே பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் அதிகாரவர்க்கத்தினர் செய்த அமுல்களைக் காட்டிலும் இன்றைய தினம் அதிகாரவர்க்கத்தின் அமுல்கள் அதிகக் கொடுமையாயிருக்கின்றன. அத்தகைய கொடுமை செய்யக்கூடிய அதிகாரங்களை உத்தியோக வர்க்கத்துக்குக் கண்ட்ரோல் விதிகள் கொடுத்திருக்கின்றன.

ஆதலின், பொது ஜனங்கள் தங்கள் காலையும் கையையும் கட்டி அதிகார வர்க்கத்திடம் தங்களைக் காங்கிரஸ் ஒப்புவித்து விட்டதாகவே எண்ணுகிறார்கள். முக்கியமாக, கிராமவாசிகள் இவ்விதம் எண்ணித் துயரப்படுகிறார்கள்.

எனவே, கனம் ஹரி கிருஷ்ண மேதாப் போன்றவர்கள் "கண்ட்ரோல்களை நடத்துவதில் பொதுஜனங்கள் ஒத்துழைக்க வரவேண்டும்" என்று வேண்டிக் கொள்வது அர்த்தமற்ற அதிகப் பிரசங்கமாகவே கிராமவாசிகளுக்குத் தோன்றுகிறது.

"ஐயா! புண்ணியவான்களே! எங்களைத்தான் காலையும் கையையும் கட்டி அதிகார வர்க்கத்திடம் ஒப்புவித்து விட்டீர்களே? பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் உத்தியோகஸ்தர்களுக்கு நடுங்கியதைக் காட்டிலும் இப்போது அதிகம் நடுங்கிச் சாகிறோமே! நாங்கள் ஒத்துழைப்பது வேறு கேடா?" என்று பாமர ஜனங்கள் கேட்கிறார்கள்.

இந்த மாதிரி ஜனங்கள் முறையிடுவது ஜவாஹர்லால்ஜீ போன்ற மாபெருந் தலைவர்களின் காதில் விழுவதில்லை. நம்முடைய காங்கிரஸ் பிரதிநிதிகள் மக்களின் முறையீட்டைத் தலைவர்களுக்கு எடுத்துச் சொல்லலாம். ஆனால் இதற்கெல்லாம் அவர்களுக்கு எங்கே அவகாசம் இருக்கிறது? எந்தத் தீர்மானம் எப்படிப் போனால் அவர்களுக்கு என்ன?

கண்ட்ரோல் முறைகள் பொதுஜன க்ஷேமத்துக்கு அவசியமானவை என்பதைப் பொதுமக்கள் ஒப்புக் கொள்ள வேண்டுமானால், "பொது ஜனங்களே! ஒத்துழையுங்கள்!" என்று பல்லவி பாடுவதில் பயனில்லை. அதிகார வர்க்கத்தைப் பொதுஜனங்களுடன் ஒத்துழைக்கும்படி நமது தலைவர்களும் மந்திரிகளும் கேட்டுக் கொள்ளவேண்டும். கண்ட்ரோல்களின் பெயரால் அதிகாரிகள் மக்களை ஹிம்சைப் படுத்துவதை நிறுத்தச் செய்யவேண்டும். அதிகார வர்க்கத்தினர் பழைய பிரிட்டிஷ் ஆட்சியின் வாசனைகளை மறந்து பொது மக்களின் ஊழியர்களாக நடந்து கொண்டால்தான், கண்ட்ரோல்முறையின் நன்மைகளைப் பொது ஜனங்கள் உணர முடியும்.

## சுவாமி சிவானந்தர் விஜயம்

தென்னிந்தியாவில் திருநெல்வேலி ஜில்லாவில் அவதரித்து, இமயமலைச் சாரலில் ரிஷிகேசத்தில் ஆசிரமம் ஸ்தாபித்து, பல வருஷங்களாகப் பாரமார்த்திகத் துறையில் இணையற்ற சேவை செய்து வருகிறார் சுவாமி சிவானந்த சரஸ்வதி.

அருட்பெரும் ஜோதியும் தனிப் பெருங் கருணையுமான பரம் பொருளின் தத்துவத்தை, தெய்வ நெறியை, தமது சன்மார்க்க உபதேச வாயிலாகச் சுவாமிஜீ அகில இந்தியாவிலும் பரப்பி வருகிறார். அந்தப் பெரியார் சென்னை நகரத்துக்கு செப்டம்பர் மீ 30-ந் தேதி விஜயம் செய்கிறார். தென்னிந்திய யாத்திரையைத் தொடங்கியிருக்கும் சுவாமிஜீயை வரவேற்றுத் தரிசனம் செய்து, ஆத்மாநுபூதிச் செல்வத்தை அடையத் தமிழ் மக்களுக்கு இது ஓர் அரிய சந்தர்ப்பம் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.



வீழும் மாந்தர் தமைக்காத்த வித்தகன் காந்தி அமரனையே
வாழும் வாழ்வில் ஒருநாளும் மறவோம் மறவோம் மறவோமே!
(அக்டோபர் இரண்டாம் தேதி: காந்தி மகான் ஜெயந்தி)

# கண்டிப்பு!




கோதுமை வாங்குவதற்காக இந்தியசர்க்கார் அமெரிக்காவுக்குச் சில நிபுணர்கள அனுப்பியிருக்கிறார்கள். —பத்திரிகைச் செய்தி.

# ஒரு கண்ணில் வெண்ணெய்! ஒரு கண்ணில் சுண்ணாம்பு!

"நான் சொல்லுகிறபடி நீங்கள் செய்ய வேண்டும்; ஆனால் நான் செய்கிறபடி நீங்கள் செய்யக் கூடாது" என்று ஓர் உபன்யாசகர் உபதேசித்ததாகச் சொல்வது உண்டு.

இன்று உலக நாடுகளுக்கு ஜன நாயக தர்மத்தை உபதேசிக்கும் வல்லரசுகளின் வண்டவாளமும் இத்தகையதாகவே இருக்கிறது.

காஷ்மீரில் பாகிஸ்தான் என்ன செய்ததோ, அதே காரியத்தைத் தான் வடக்கு கொரியா தெற்கு கொரியாவில் செய்திருக்கிறது.

ஆனால், காஷ்மீர் பிரச்னையை வருஷக் கணக்கில் முடிவு செய்ய மனம் இல்லாத அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகள், ஒரு சில மணி நேரத்தில் கொரியா போருக்கு யார் பொறுப்பாளி என்பதை நிர்ணயித்து விட்டன.

எந்த அடிப்படையில் இஸ்ரேல் சர்க்கார் ஏற்பட்டதோ அதே அடிப்படையில் தான் கம்யூனிஸ்டு சீன சர்க்காரும் ஏற்பட்டது. அதாவது யுத்தம் செய்து வெற்றி பெற்றே அந்த அரசாங்கங்கள் அமைக்கப்பட்டன.

எனினும், இஸ்ரேல் சர்க்கார் ஏற்பட்ட ஒரு வார காலத்துக்குள் அதை அங்கீகரித்த அமெரிக்கா, சீன சர்க்கார் ஏற்பட்டுப் பல மாதங்களாகியும் அதை அங்கீகரிக்க மறுக்கிறது.

இவ்வாறாக ஒரு கண்ணில் வெண்ணெய், ஒரு கண்ணில் சுண்ணாம்பு என்ற கொள்கை மேவி நிற்பதால்தான் ஐ. நா. சபையின் நிலைமை பலவீனம் அடைந்து வருகிறது.

மிகுந்த மனக் கொதிப்புக்கும் வாதப் பிரதி வாதங்களுக்கும் இடமாக இருந்த இஸ்ரேல் சர்க்கார் இரண்டு வருஷங்களுக்கு முன் ஜனனமான உடனே அதற்கு அமெரிக்கா முதலிய வல்லரசுகள் சர்வதேச மகா சபையில் ஸ்தானம் அளித்தன.

ஆனால் அதே வல்லரசுகள் மாபெரும் சீன சர்க்கார் ஏற்பட்டுப் பல மாதங்களாகியும் அதற்கு அந்தச் சபையிலே ஸ்தானம் அளிக்க மறுத்துவருகின்றன.

அவ்வளவு அவசரமாக விழுந்தடித்துக் கொண்டு இஸ்ரேல் சர்க்காரை அங்கீகரிக்கா விட்டால் குடி முழுகிப் போய்விடாது; சர்வ தேசச் சட்டத்துக்கும் சமாதானத்துக்கும் ஆபத்து எதுவும் ஏற்பட்டு விடாது.

ஆனால் சீன சர்க்கார் விஷயம் முற்றிலும் வேறாகும்.

உலக மகா சபையில் சட்டபூர்வமான சீன சர்க்காருக்கு ஸ்தானம் அளிக்க மறுப்பது சர்வதேசச் சட்டத்துக்கு முரணானது. அவ்விதம் மறுப்பது உலக சமாதானத்துக்கும் முட்டுக்கட்டையாக நிற்கின்றது.

"சீன தேசத்தில் ஓர் அடி பூமிகூட இல்லாத சியாங் சர்க்காருக்கு உலக சபையில் ஸ்தானம் இருப்பதும், சீனா முழுவதையும் நிர்வகித்து வரும் சர்க்காருக்கு ஸ்தானம் அளிக்க மறுப்பதும் இயற்கைக்கு முற்றிலும் விரோதமான காரியம்" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு நாஸிக்கில் நடந்த காங்கிரஸ் மகாசபையிலே குறிப்பிட்டார்.

சீன சர்க்காரை அங்கீகரித்து அதற்கு ஐக்கிய நாடுகள் சபையில் ஸ்தானம் அளிக்க வேண்டும் என்று இந்தியா மேற்படி சபையில் கொண்டு வந்த தீர்மானம் தோல்வியுற்றதிலிருந்து வல்லரசுகளின் விபரீதமும் ஐ. நா. சபையின் அழிச்சாட்டியமும் எவ்வாறு இருந்து வருகின்றன என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

எனினும் இந்தியாவின் தீர்மானத்துக்குச் சாதகமாகப் பதினாறு வோட்டுகளும் பாதகமாக முப்பத்து மூன்று வோட்டுகளும் கிடைத்திருக்கின்றன. இதிலிருந்து இந்தியாவின் அபிப்பிராயத்துக்கு உலக நாடுகளிடையே நாளுக்கு நாள் அதிக ஆதரவு ஏற்பட்டு வருவது தெளிவாகின்றது.

* * *

வடக்கு கொரியா கோர யுத்தம் புரிந்து தெற்கு கொரியாவின் பெரும் பகுதியையும் ஆக்கிரமித்துக் கொண்டது. ஆனால் இப்போது அமெரிக்கத் துருப்புகள் ஆவேசத்துடன் போர் செய்து தென் கொரியா தலைநகரை மறுபடியும் கைப்பற்றிவிட்டன.

இறுதியாக வெற்றி தோல்வி எவருக்காயினும் தற்போதைய பயங்கரமான யுத்தத்தினால் கொரியா அழிவது நிச்சயம். அழிந்த கொரியா தேசம் மீண்டும் எழுந்து நிற்க இன்னும் எத்தனை ஆண்டுகள் செல்லுமோ!

அதாவது அந்த தேசத்தில் உண்மையான ஜனநாயகத்தை ஸ்தாபிப்பதற்காக அத்தேசத்தை நாசம் செய்யும்

கைங்கர்யம் இப்போது மும்முரமாக நடந்து வருகிறது!

கொரியா தேசத்தில் ஆரம்பமாகியுள்ள போர் மற்ற இடங்களில் பரவி உலக யுத்தமாக மாறிவிடாமல் தடுப்பதற்காகத் நாம் செய்த முயற்சி ஓரளவு பலனைக் கொடுத்திருக்கிறது என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியிருப்பதைக் கேட்க உலக மக்கள் மகிழ்ச்சி அடைவார்கள்.

தற்போதுள்ள நிலையில் ஒரு தேசத்திலோ அல்லது உலகத்திலோ போர் ஏற்படாமல் தடுக்க முயற்சிப்போர் தான் உலக மக்களின் உண்மையான நண்பர்கள் ஆவர்.

சர்வதேச சமாதானத்துக்காக ஏற்பட்டுள்ள உலக மகாசபையில் நாற்பத்தைந்து கோடி மக்களை ஆட்சி புரியும் ஒரு சர்க்காருக்கு ஸ்தானம் இல்லை என்று கூறுவோரை உலக சமாதானத்தில் உண்மையான நாட்டம் கொண்டவர்கள் என்று சொல்ல முடியுமா?

“சீன சர்க்காரை அங்கீகரிக்க மறுப்பது உலக சமாதானத்துக்கு உலை வைப்பதாக முடியும். இந்தப் பிரச்னையை ஒட்டி சூழ்நிலை இப்போது அமைதியாக இருக்கிறது. எனினும் இதே நிலைமை அதிக காலம் நீடித்து இராது” என்று இந்தியா பிரதிநிதி ஐ. நா. சபையிலே எச்சரித்திருப்பதை வல்லரசுகள் கவனித்துத் தங்களுடைய பிடிவாதத்தைக் கைவிட வேண்டும்.

* * *

அரசியல் நீதியும் ஜனநாயக தர்மமும் எக்கேடு கெட்டுப்போனால் என்ன? தனிவ ராஜதந்திரமும் சமய சஞ்சீவித்தனமும்தான் இந்த உலகிலே கைமேல் பலனைக் கொடுக்கும் என்று பாரதநாடு கருதியிருந்தால், அது சில மாதங்களுக்கு முன்னமேயே புதிய சீன சர்க்காரை அங்கீகரித்திராது; இஸ்ரேல் சர்க்காரைப் பல மாதங்களுக்கு முன்பே அங்கீகரித்திருக்கும்.

இந்த இரண்டு காரியத்தையும் இந்திய சர்க்கார் செய்யாததிலிருந்து, அவர்கள் சுய நலனைக் காட்டிலும் அரசியல் தர்மத்திலே அதிக நாட்டம் கொண்டிருக்கிறார்கள் என்பதை உலகம் அறிந்து கொள்ளும்.

சீன சர்க்காரைப் பிரிட்டன் முதலிய வல்லரசுகள் அங்கீகரிப்பதற்கு முன்பே இந்தியா அங்கீகரித்து விட்டது.

இஸ்ரேல் சர்க்காரைப் பல மாதங்களுக்கு முன் ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன் முதலிய வல்லரசுகள் உள்பட நாற்பது நாடுகள் அங்கீகரித்தும்கூட இந்தியா இதுவரையில் அங்கீகரிக்கவில்லை.

ஆனால் இதுவரையில் இஸ்ரேல் சர்க்காரை அங்கீகரிக்க மறுத்து வந்த இந்திய சர்க்கார் இப்போது மாத்திரம் அதை அங்கீகரிக்க முன் வந்தது ஏன் என்று கேட்கலாம்.

1. இன்று இஸ்ரேல் சர்க்காரை இரண்டு முஸ்லிம் நாடுகள் உள்பட நாற்பது தேசங்களுக்கு மேல் அங்கீகரித்திருக்கின்றன.

2. இஸ்ரேல் சர்க்காரின் ஜன்ம விரோதிகளாக இருந்த அராபிய நாடுகள்கூட இப்போது அந்தச் சர்க்காரை எதிர்க்கவில்லை. அது ஒரு வழியாக முடிந்துபோன விஷயம் என்று கருத ஆரம்பித்திருக்கிறார்கள்.

3. பல முக்கியப் பிரச்னைகளை ஒட்டியும் ஐக்கிய நாடுகள் சபையில் இந்திய சர்க்காருக்கும் இஸ்ரேல் சர்க்காருக்கும் நல்லுறவும் ஏகோபித்த அபிப்பிராயமும் இருந்து வருகின்றன.

இவைதான் இந்தியா இஸ்ரேலை அங்கீகரித்திருப்பதற்கு முக்கிய காரணங்கள் ஆகும்.

எனினும் மேற்படி சர்க்காரை அங்கீகரித்துள்ள இந்திய சர்க்கார் ஜெருசலத்தின் எதிர்கால அந்தஸ்து, இஸ்ரேலின் எல்லைகள் இவைகளையொட்டித் தங்களுக்கும் இஸ்ரேல் சர்க்காருக்கும் உள்ள அபிப்பிராய பேதத்தை வற்புறுத்தியிருக்கிறார்கள்.

இஸ்ரேலைத் தாங்கள் அங்கீகரித்ததின் காரணமாக இந்தியாவுக்கும் அரபு நாடுகளுக்கும் உள்ள நல்லுறவு எவ்விதத்திலும் பாதிக்கப்பட மாட்டாது என்றும் உறுதி கூறியிருக்கிறார்கள்.

ஆதிக்க ஆசையும் சொந்த விருப்பு வெறுப்பும் வல்லரசுகளை ஆட்டி வைக்கின்றன: வல்லரசுகளோவெனில் ஐக்கிய நாடுகள் சபையைத் தங்கள் இஷ்டப்படி ஆட்டிவைக்கின்றன.

இந்த நிலையில் இந்தியா வல்லரசுகளின் தவறையும் ஐ. நா. சபையின் தவறையும் தைரியத்துடனும் உறுதியுடனும் சுட்டிக் காட்டி வருகிறது. உண்மையான அரசியல் தர்மத்தையும் நீதி நெறியையும் அடிப்படையாகக் கொண்ட கொள்கையை வகுப்பதற்கு உதவி புரிந்து வருகிறது.

இது உலக மக்களின் ஆதரவுக்கும் பாராட்டுதலுக்கும் உகந்த மகத்தான கைங்கர்யம் அல்லவா?



தமிழ்ச் சினிமா வானத்தில் ஒளி வீசும் நட்சத்திரமாக விளங்கும் ஸ்ரீமதி டி. ஆர். ராஜகுமாரி தமது பெயரை வைத்துத் தியாகராஜ நகரில் ஒரு அழகிய சினிமாத் தியேட்டரை நிறுவியிருக்கிறார். இந்தத் தியேட்டரின் திறப்பு விழா சென்ற செப்டம்பர் மாதம் 22-ந் தேதி சிறப்பாக நடைபெற்றது. திறப்பு விழாவுக்கு ஸ்ரீ புல்லா ரெட்டி தலைமை வகித்தார். "திரைப் படச் சக்கரவர்த்தி" என்று ஸ்ரீமதி டி. ஆர். ராஜகுமாரியினால் பாராட்டப் பெற்ற ஸ்ரீ எஸ். எஸ். வாஸன் தியேட்டரைத் திறந்து வைத்தார். இந்த இனிய வைபவத்தில் ஸ்ரீமதி டி. ஆர். ராஜகுமாரி தமக்கு இயற்கையான முக மலர்ச்சியுடன் விளங்குவதைப் படத்தில் காணலாம்.

## நீங்கள் உங்கள் பற்களை
## இன்று மக்ளீன் செய்தீர்களா?

"உங்கள் பெராக்ஸைட் பற்
பசையை ஒரு மாதத்திற்கு
முன் நான் உபயோகிக்கத்
தொடங்கினேன். அது ரொ
ம்ப நன்றாயிருப்பதை அறி
ந்தேன். என் பற்கள் விகா
ரமாகக் கறைபடிந்திரு
ந்தன; ஆனல் உங்கள்
பற்பசையை உபயோகி
ப்பது முதல் அவை வெ
ள்ளை வெளேரென்றாகி
விட்டன."



மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது.

வாயைச் சுத்திகரித்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
வெண்மை
தருகிறது.

உங்களுக்கு சிறந்ததோர் பற் பசை வேண்டுமானல், மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகியுங்கள். மக்ளீன்ஸ் ஒன்றில்தான் பற்களை வெள்ளையாக்கக் கூடிய பெராக்ஸைட் இருக்கிறது. இதன் பிரத்யேகமான தயாரிப்பு முறையினால் பல் கெடுவதைத் தடுக்க உதவுகிறது, வாயில் ஊறும் நீரை மிதப்படுத்தி, கறைகளைப் போக்கி, பற்களைப் பளபளப்பாகவும் வெளுப்பாகவும் ஆக்கி, சுவாசத்திற்கு பெப்பர்மெண்டின் நறுமணத்தைத் தருகிறது.

இன்றே மக்ளீன்ஸ்
வாங்குங்கள்!




MTX-6TM

# கலைவாணிக்கு அர்ப்பணம்

○ ● ○

"போற்றி போற்றி ஓராயிரம் போற்றி நின்
பொன்னடிக்குப் பல்லாயிரம் போற்றிகாண்"

என்று மகாகவி சுப்பிரமண்ய பாரதியார் புதுமைப் பெண்ணைப் போற்றி வரவேற்றார். மேலும் அந்தப் புதுமைப் பெண் தனது 'நறிய பொன்மலர் மென் சிறு வாயினால்' கூறியதாகப் பாரதியார் பாடியதாவது:—

"ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கி இவ் வையம் தழைக்குமாம்
பூணு நல்லறத் தோடிங்கு பெண்ணுருப்
போந்து நிற்பது தாய்சிவ சக்தியாம்
நாணும் அச்சமும் நாய்கட்கு வேண்டுமாம்
ஞான நல்லறம் வீர சுதந்திரம்
பேணும் நற்குடிப் பெண்டிர் ஒழுக்கமாம்
பெண்மைத் தெய்வத்தின் பேச்சுகள் கேட்டீரோ!"

இவ்வாறெல்லாம் ஆண் பிள்ளைகளுக்குச் சரிசமானமாக நின்று, ஏன், ஒருபடி முன்னால் சென்று நின்றுகூட, அறம் வளர்க்கும் புதுமைப் பெண்கள் இப்போது நம் புண்ணிய பூமியில் தோன்றி வருகிறார்கள். அத்தகைய புதுமைப் பெண்களைத் தயாரித்து சமூகப் பணி செய்ய அனுப்பும் ஸ்தாபனங்கள் பலவும் இருக்கின்றன. அவற்றில் தலை சிறந்த ஒரு ஸ்தாபனம் மயிலாப்பூரில் உள்ள லேடி சிவஸ்வாமி ஐயர் பெண்கள் உயர்தரப் பள்ளியாகும்.

இந்த ஸ்தாபனம் தோன்றித் தொண்ணூறு ஆண்டுகள் ஆகின்றன என்று சொன்னால் நமக்கு வியப்பாகவே இருக்கும். எனினும் பத்து வருஷத்துக்கு முன்னால் வரையில் இந்தத் தொண்ணூறு வயதுப் பாட்டியின் குடும்பம் சிறிதாகத்தா னிருந்தது. சென்ற பத்து ஆண்டில் இந்தப் பாட்டியின் பேரப் பெண்கள் பெருகி ஆயிரக் கணக்கிற்கு வந்திருக்கிறார்கள்! ஆயிரத்து நானூறு பெண் குழந்தைகள் இப்போது இப் பள்ளிக்கூடத்தில் படித்து வருகிறார்கள்! கூரை போட்ட குடிசையில் வாழ்ந்திருந்த குடும்பம் இப்போது மூன்று மெத்தை மாளிகையில் வாழ்ந்து வருகிறது! இதெல்லாம் எவ்வளவோ மகிழ்ச்சிக்குரிய முன்னேற்றம் அல்லவா! ஆனால் இத்தகைய முன்னேற்றத்துக்குக் காரணங்கள் என்ன வென்பதையும் நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயர் என்று நேயர்கள் கேள்விப்பட்டிருப்பார்கள். இவர் பெரிய தர்மப் பிரபு என்று பெயர் வாங்கிய இல்லை. ஏனெனில், வந்தவர்கள் போனவர்களுக்கெல்லாம் இவர் வாரிக் கொடுப்பது கிடையாது. பெரிய உத்தியோகங்கள் பல வகித்தார். சம்பாதித்த பொருளில் ஒரு பெரும் பகுதியைத் தாம் பிறந்த ஊராகிய திருக்காட்டுப் பள்ளியிலுள்ள உயர்தரப் பள்ளிக்கூடத்துக்கு உதவினார். மிச்சமிருந்த சொத்து ஒரு பெரிய வீடுதான். இந்தப் பெரிய வீட்டில் தன்னந் தனிக் கிழவராகிய தாம் வசித்திருக்கையில், நூற்றுக் கணக்கான பெண் குழந்தைகள் கூரைக் குடிசையின் கீழ் படித்துக் கொண்டிருந்த காட்சி இவருக்கு வேதனை தந்தது. உடனே தமது வீட்டை விற்றார். விற்ற பணத்தை அப்படியே மயிலாப்பூர் பெண்கள் பள்ளிக்கூடத்துக்கு அளித்தார். தம்முடைய ஜீவனத்துக்காக வைத்துக் கொண்டிருந்த பணமும் தமக்குப் பிறகு அப் பள்ளிக்கூடத்துக்கே என்றார். பின்னர், அடிக்கடி, "நான் உயிரோடிருப்பது இந்தப் பள்ளிக்கூட வளர்ச்சிக்குத் தடையாயிருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

இப்படிப்பட்ட உத்தமருடைய மகத்தான உதவியைப் பாராட்டுவதற்காக மயிலாப்பூர் தேசியப் பெண்கள் பள்ளிக்கூடத்துக்கு "லேடி சிவஸ்வாமி ஐயர் பெண்கள் உயர்தரப் பள்ளிக்கூடம்" என்று பெயர் இட்டார்கள்.

ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயருடைய தயாளத்துக்கு இப் பள்ளிக்கூடம் பாத்திரமான அதே சமயத்தில், இன்னொரு அதிர்ஷ்டம் இந்த ஸ்தாபனத்தைத் தேடி வந்தது. அது, ஸ்ரீமதி செல்லம்மாள், எம். ஏ., எல். டி., என்னும் பெண்மணி இப் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியைப் பதவியை ஏற்றுக்கொண்டதுதான்.

* * *

ஸ்ரீமதி செல்லம்மாள் குழந்தைப் பிராயத்தில் தாய் தந்தையரை இழந்தவர். வாழ்க்கையில் மேலும் பல துயரங்களுக்கு உள்ளானவர். அதிர்ஷ்டவசமாக அவருடைய உறவினர் அவரைப் படிக்க வைத்தார்கள். வாழ்க்கைத் துயரங்களை மறப்பதற்குச் சிறந்த மார்க்கம் தொண்டு செய்வதே என்று கண்டார். நெடுநாளைக்கு முன்பே சகோதரி சுப்புலக்ஷ்மி அம்மாள் காட்டிய வழியை இவரும் கைக்கொண்டார். திருச்சி ஹோலி கிராஸ் பெண்கள் கலாசாலையில் பேராசிரியர் வேலை பார்த்தார். அதைக் காட்டிலும் இளம் பெண் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பதே அதிக உற்சாகத்துக்குரியது என்று மயிலாப்பூர் பெண்கள் உயர்தரப் பள்ளிக்கூடத்துக்கு வந்து சேர்ந்தார். இவர் இந்தப் பள்ளிக்கூடத்துத் தலைமை ஆசிரியராகிப் பத்து வருஷம் பூர்த்தியாயிற்று. இந்தக் காலத்திற்குள் பெண்கள் பள்ளிக்கூடம் எப்படி நடத்த வேண்டும் என்பதற்கு உதாரணமாகும்படி இந்த ஸ்தாபனத்தைச் செய்திருக்கிறார். அவருடன் தொண்டாற்றும் சுமார் ஐம்பது ஆசிரியைகளும் அவரிடம் அளவற்ற அபிமானம் காட்டி வருகிறார்கள். படிக்கும் பெண் குழந்தைகளுக்கோ தலைமை ஆசி



சென்ற வருஷத்தில் எஸ். எஸ். எல். சி. வகுப்பில் படித்துத் தேறிய குமாரி எஸ். கல்பக சுந்தரி. தமிழ், சங்கீதம், நடிப்புத் திறன் முதலிய பல துறைகளில் இம் மாணவிக்கு விசேஷப் பரிசுகள் கிடைத்தன.

ரியை யென்றும் கேட்க வேண்டியதில்லை. அவ்வளவு பெண் குழந்தைகளும் தலைமை ஆசிரியைக்குச் செல்லப் பெண்கள்தான்!

ஸ்ரீமதி செல்லம்மாளின் தலைமையில் படிக்கும் பெண்களுக்குப் பள்ளிக்கூடப் பாடங்கள் மட்டுமே போதிக்கப் படுவதில்லை. பரீட்சை தேறும் வித்தை மட்டும் கற்பிக்கப்படுவதில்லை. இந்த வித்தையோடு வாழ்க்கையில் பயன்படக் கூடிய பல கலைகளும் போதிக்கப் படுகின்றன.

ஏழைப் பெண்கள் நூறு பேருக்கு மத்தியான சாப்பாடு பள்ளிக்கூடத்தில் அளிக்கப்படுகிறது. இதற்காகச் சமையல் செய்யும் இடத்தில் மாணவிகள் சமையல் கலை கற்றுக் கொள்ள வசதி இருக்கிறது.

சங்கடமான சமையல் மட்டுமல்ல; சங்கீதம், நடனம் முதலிய கலைகளும் இப் பள்ளியில் கற்பிக்கப்படுகின்றன. இப்போது நாட்டில் புத்துயிர் பெற்று வரும் நாடகக் கலையையும் இந்த ஸ்தாபனம் நன்கு வளர்த்திருக்கிறது.

* * *

சென்ற செப்டம்பர் மாதம் 16-ம் தேதி ரஸிக ரஞ்சனி சபை ஹாலில் இந்தப் பள்ளிக்கூடத்துப் பெண்கள் "கர்ணன் மோக்ஷம்" என்னும் நாடகத்தை நடத்தினார்கள். இந்த விஷயத்தை நாடகத்துக்குரியதாகத் தேர்ந்தெடுத்ததே ஒரு பெருமை. உலக மகா இதிகாசங்களில் கர்ணனுக்கு இணை கர்ணன்தான். பிறந்தது தேவர்—அரசர் குலத்தில். வளர்ந்தது ரதசாரதி இல்லத்தில். எனெனிதனை துரியோதன மகாராஜன். பாண்டவர்களுக்கு முன்னவன் தான் என்றும் தெரிந்து விட்டது. இதனால் தர்ம சங்கடங்கள் பல நேரிட்டன. எத்தனை சங்கடம் வந்தாலும் தர்மத்தை மட்டும் விடவில்லை. யுத்த அரங்கத்தில் வீராதி வீரன்! கொடை அரங்கத்தில் அதைக் காட்டிலும் பெரிய வீரன். தம்பிகளைக் கொல்வதில்லை என்று தாய்க்கு வரம் கொடுத்தான். பிறக்கும் போதே வந்த கவச குண்டலங்களைத் தானம் கொடுத்தான். யுத்த களத்தில் புதைந்த தேரை எடுக்கும் நிலையில், தன் புண்ணியத்தை எல்லாம் கொடுத்தான். அம்பைப் பிடுங்கி இரத்தத்தை விட்டுத் தாரை வார்த்துக் கொடுத்தான். கர்ணனுக்கு இணை கர்ணனேதான்!

அத்தகைய இலட்சிய வீரனுடைய கதையை அழகாக நாடகமாக்கிப் பெண் குழந்தைகள் நன்றாக நடித்தார்கள். நாடகத்தை எழுதிக் கொடுத்த ஆசிரியர் கண்ணபிரான் பிள்ளை மனமகிழும்படி முத்து முத்தாகக் குழந்தைகள் பேசினார்கள்; மதுரமாகப் பாடினார்கள்.

கண்ணனாகவும், அர்ச்சுனனாகவும், கர்ணனாகவும், பீஷ்மராகவும் நடித்த குழந்தைகளைச் சிறப்பாகச் சொல்லிப் பாராட்ட வேண்டும். கைதேர்ந்த நாடக சபைகளைப் போல் காட்சி ஜோடனைகளும் செய்திருந்தார்கள்.

கதகளி முறையில் அமைந்திருந்த யுத்த நடனம் அபாரம். இந்தக் குழந்தைகள் ஆடிய யுத்த நடனத்தைப் பார்த்து விட்டால், ஏன், யுத்தத்தின் பேரிலேயே நமக்கு ஆசை உண்டாகி விடலாம்!

லேடி வெல்லாமி ஐயர் பெண்கள் பள்ளிக்கூடம் இப்போது மூன்று மெத்தைக் கட்டிடத்தில் இருப்பதாகச் சொன்னேன். ஆனால் பள்ளிக்கூடக் கட்டிடத்தில் ஒரு பகுதிதான் பூர்த்தியாகி யிருக்கிறது. அதிலும், மேல் மெத்தைகளுக்குப் போகும் மச்சுப் படிகளுக்கு இன்னும் தளவரிசை போட்டாகவில்லை!

பள்ளிக்கூடம் மேன்மையுற இன்னும் எவ்வளவோ செய்ய வேண்டியதாயிருக்கிறது.

உலக இதிகாசங்களில் ஒரு கர்ணன்தான் இருக்க முடியும். ஸர் பி. எஸ். சிவஸ்வாமி ஐயரைப் போல் சொத்து முழுவதையும் கலைவாணிக்கு அர்ப்பணம் செய்யக் கூடியவர்களும் ஒரு சிலர்தான் இருக்க முடியும். ஆனால் பலர் பெரு வெள்ளமாகும்படியான உதவி எல்லாரும் செய்யலாம். என்ன விதத்தில் உதவி செய்யலாம் என்று தெரிந்து கொள்ள விரும்பினால், குருகுல தர்ம ஆசார்ய ஸ்ரீ கே. ரங்கசாமி அய்யங்கார் பி. ஏ., பி. எல்., எல். டி., அவர்களுக்கு எழுதிக்கொள்ளவும். ஆம்; ஹிந்து இயாலாஜிகல் ஹைஸ்கூலில் புகழ்பெற்ற மாஜி தலைமை ஆசிரியர்தான் இப்போது இந்தப் பெண்கள் பள்ளிக்கூடத்தின் காரியதரிசியாக இருந்து தொண்டு புரிந்து வருகிறார்.

"கர்ணன் மோக்ஷம்" நாடகத்தில் கோபதேசக் காட்சியையும், தலைமை ஆசிரியை ஸ்ரீமதி செல்லம்மாள் எம். ஏ., எல்.டி., அவர்களையும், பள்ளிக்கூடத்தின் இலட்சிய சின்னத்தையும் இந்த இதழ் அட்டைப் படத்தில் காணலாம்

# இலங்கையில் ஒரு வாரம்

## கல்கி

### 6

வாஸ் கோடி காமா என்னும் பெயர் கொண்ட கப்பல் தலைவனைப் பற்றி எப்போதோ சரித்திரப் புத்தகத்தில் படித்திருப்பதாக ஞாபகம். அந்தத் தடியன் இப்போது என் முன் எதிர்ப்பட்டால் அவன் கன்னத்தில் நாலு அறை கொடுத்து விட்டு மறு காரியம் பார்ப்பேன். ஆனால் அவன் இறந்து தொலைந்து போய் விட்டான்! இறந்து போனவர்களின் விஷயத்தில் அஹிம்சையைக் கைக் கொள்ளுவது அவசியமில்லை யென்பது என்னுடைய கொள்கை. உயிரோடிருப்பவர்களிடம் அவசியம் அஹிம்சா தர்மத்தை அனுசரிக்க வேண்டியதுதான். ஏனெனில் நாம் அவர்களுடைய கன்னத்தில் நாலு அறை கொடுப்பதற்கு முன்னால் அவர்களும் நம்மோடு ஒத்துழைப்பது என்று தீர்மானித்து விடக் கூடும். இறந்து போனவர்களின் விஷயத்தில் அத்தகைய கவலை இல்லை. ஆகையால் வாஸ்கோடி காமா மட்டும் இப்போது நம் முன்னால் வந்தால் அவன் கன்னத்தில் நாலு அறை கொடுக்கத் தயங்க வேண்டியதில்லை

ஐரோப்பாவில் உள்ளவர்கள் கீழ் நாட்டுக்கு வருவதற்கு முதன் முதலில் அந்த வாஸ் கோடி காமாதான் வழி காட்டினான். அவன் ஒரு போர்ச்சுகீயன். அவனைத் தொடர்ந்து வந்த போர்ச்சுகீயர்கள் இலங்கையில் சில பகுதிகளைக் கைப்பற்றி ஆண்டு வந்தார்கள். அப்பப்பா! அவர்கள் ஆண்ட காலத்தில் யாழ்ப்பாணத்தார்கள் பட்ட அவதிகள் கொஞ்சநஞ்சமல்ல. போர்ச்சுக்கல் நாட்டார் கொடுமைக்கும் குரூரத்துக்கும் பெயர் போனவர்கள். இப்போதுகூட இந்திய தேசத்தில் ஒரு சாண் அகலமுள்ள கோவாவில் உட்கார்ந்து கொண்டு அவர்கள் என்னபாடு படுத்துகிறார்கள், பாருங்கள்! இருநூறு முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் கேட்க வேண்டுமா? பற்பல கொடுமைகள் செய்து ஹிந்து மதத்தாரைக் கிறிஸ்தவ மதத்தைத் தழுவத் தூண்டினார்கள். போர்ச்சுகீய ஆட்சியின் போது யாழ்ப்பாணத்து மக்கள் இலை போட்டுச் சாப்பிடப் பயப்படுவார்களாம்! ஏனெனில் வாசலில் எச்சில் இலை விழுந்தால், அந்த வீட்டார் ஹிந்துக்கள் என்று ஊகித்துக் கொண்டு போர்ச்சுகீய அதிகாரிகள் வீட்டுக்குள் புகுந்து அதிக்கிரமம் செய்வார்களாம். இதன் காரணமாக அந்த நாளில் யாழ்ப்பாணத்தார் இலை போட்டுச் சாப்பிடுவதைக் கைவிட்டுத் தட்டில் சாப்பிடத் தொடங்கினார்கள். ஆனால் ஹிந்து மதப் பற்றை அவர்கள் இழந்துவிடவில்லை. ஹிந்துமத பக்தி காரணமாக அமாவாசையன்று மட்டும் இலையில் சாப்பிட்டு விட்டு எச்சில் இலையைக் கூரை முகப்பில் செருகி விடுவார்களாம்! நாளடைவில் அது ஒரு குருட்டு மத சம்பிரதாயமாகி, இன்றும் யாழ்ப்பாணத்து வைதிக குடும்பங்களில் அமாவாசையன்று எச்சில் இலையைக் கூரை முகப்பில் செருகும் வழக்கம் நடைபெற்று வருகிறது!

கொஞ்சம் யோசித்துப் பார்க்கும்போது வீட்டு வாசலில் எச்சில் இலையைப்போடும் வழக்கத்தைத் தடை செய்த போர்ச்சுகீயர்களும் ஒரு நல்ல காரியத்தைத்தான் செய்தார்களோ என்று தோன்றுகிறது. எதுவும் ஒரு நன்மைக்கே என்று தெரியாமலா நம் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்? ஆகையால் வாஸ்கோடி காமா போனால் போகிறான் என்று அவனை மன்னித்து, கன்னத்தில் அறையாமல் விட்டு விடுவோமாக!

* * *

சென்ற கட்டுரையின் இறுதியில் ஸ்ரீ ஹான்டி பேரின்பநாயகம் அவர்களின் கைத் தடியைப் பற்றிச் சொல்லியிருந்தேன். இந்த இதழில் அந்த மனிதரைப் பற்றியும் கொஞ்சம் சொல்லத்தான் வேண்டும். அவரை 'மனிதர்' என்று சொன்னேன்? அது அவ்வளவு பொருத்தமில்லைதான்! ஸ்ரீ 'ஹான்டி'யை ஒரு மனிதர் என்று சொல்லுவதைக் காட்டிலும் அவரை 'ஒரு ஸ்தாபனம்' என்று சொல்லுவது பொருத்தமாயிருக்கும்.

அவருடைய நீளமான பெயரில் 'ஹான்டி' (Handy) என்பது பழைய போர்ச்சுகீய ஆட்சியின் ஞாபகச் சின்னமாகும். போர்ச்சுகீய ஆட்சியில் கிறிஸ்துவர்களாக மாறிய குடும்பத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீ பேரின்ப நாயகம். ஆனால் தற்போது யாழ்ப்பாணத்தில் கிறிஸ்துவர்—ஹிந்துக்கள் என்ற வேற்றுமை அதிகம் கிடையாது. ஒரே குடும்பத்தில் அண்ணன் கிறிஸ்துவராயும் தம்பி ஹிந்துவாயும் இருப்பார்கள். ஆனால் எல்லாரும் தமிழர்கள்; தமிழ்ப் பண்பாடு உடையவர்கள்.



“ஈழகேசரி” ஆசிரியர் ஸ்ரீ ராஜ் அரியரத்தினம்

ஸ்ரீ ஹண்டி பேரின்ப நாயகமோ கிறிஸ்துவரும் அல்ல; ஹிந்துவும் அல்ல. அவருடைய மதம் காந்திய மதம்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் நான் யாழ்ப்பாணம் சென்றிருந்த போது ஸ்ரீ பேரின்ப நாயகம் அகில இலங்கை யுவர் காங்கிரஸின் காரியதரிசியாயிருந்தார். அப்போது அவர் யுவராகவும் இருந்தார். இன்றைக்குத் தலை நரைத்த முதியவராயிருக்கிறார். இந்த மாறுதலுக்குக் காரணமான இரண்டு நிகழ்ச்சிகள் ஒரே நாளில் ஒரே சமயத்தில் அவருடைய வாழ்க்கையில் நேரிட்டன என்று அறிந்தேன்.

ஸ்ரீ பேரின்ப நாயகம் தம் வாழ்க்கையில் இரண்டு பேரைக் காதலித்தார். அவர் காதலித்தவர்களில் ஒருவர் காந்திமகான்; இன்னொருவர் அவரது மனைவியார்.

1947-ம் ஆண்டு ஜனவரி மாதம் 30-ந் தேதி மாலை 6-மணிக்கு ஸ்ரீ பேரின்ப நாயகத்தின் அருமை மனைவி இறந்து போனார். இந்தப் பொறுக்க முடியாத துயரத்தில் அவர் ஆழ்ந்து தவித்துக் கொண்டிருந்த போது, நண்பர் ஒருவர் வந்தார். “உங்களுக்கு இன்னொரு பேரிடிபோன்ற செய்தி வந்திருக்கிறது!” என்றார். “அது எப்படி முடியும்? அது என்ன செய்தி?” என்று ஸ்ரீ பேரின்ப நாயகம் கேட்டார். அவருடைய மனைவி காலமான ஏறக்குறைய அதே நேரத்தில் காந்திமகான் சுட்டுக் கொல்லப்பட்டார் என்ற செய்தியை நண்பர் தெரிவித்தார். அன்று இரவே ஸ்ரீ பேரின்ப நாயகத்தின் வயதில் பத்து வயது கூடிவிட்டது என்று அவருடைய நண்பர்கள் தெரிவித்தார்கள்.

இதற்கிடையில் ஸ்ரீ பேரின்ப நாயகம் ஒரு தப்புக் காரியம் செய்தார். அதாவது இலங்கைச் சட்டசபைத் தேர்தலுக்கு நின்றார். சட்டசபைக்கு நின்றது தவறான காரியம் இல்லை. “காந்திய வாதி” என்று சொல்லிக்கொண்டு நின்றதுதான் தவறு. சிங்களவர்களின் கொடுமையிலிருந்து தமிழர்களைக் காப்பாற்றுவோம் என்றும், தமிழர்களுக்கு 100-க்கு 50 பிரதிநிதித்துவம் கேட்போம் என்றும், இல்லையேல் தனித் தமிழரசு ஸ்தாபிப்போம் என்றும் சொல்லிக்கொண்டு பிறர் நின்றார்கள். சண்டமாருதப் பிரசாரம் செய்தார்கள். இப்படிப்பட்ட சூழ் நிலையில் ஸ்ரீ பேரின்ப நாயகம் காந்தியத்தின் பெயரால் நின்றார். நிற்கலாம்; ஆனால் ஜயிக்க முடியுமா? சூறாவளியின் முன்னால் இளந்தென்றல் நிற்குமா? எனவே, தோற்றுப்போனார்.

இதனால் காந்தியத்தினிடம் அவருக்குப் பற்றுக் குறைந்து விடவில்லை. இன்று அகில இலங்கைக் காந்திய சேவா சங்கத்தின் தலைவராக இருக்கிறார். எது எப்படியானாலும் காந்தியக் கொள்கையை இலங்கையில் பரப்புவது என்று இந்தச் சங்கம் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறது. காந்திஜியின் மணி மொழிகள் அனைத்தையும் சிங்கள பாஷையில் மொழி பெயர்த்து வெளியிடுவதற்கு ஒரு பெரிய திட்டம் போட்டிருக்கிறது. இச்சங்கத்தின் காரியதரிசி மற்றொரு பரம காந்தி பக்தரான ஸ்ரீ சி. க. வேலாயுதம் பிள்ளை.

இலங்கைக்கும் சிறப்பாக யாழ்ப்பாணத்துக்கும் ஸ்ரீ பேரின்ப நாயகம் செய்திருக்கும் தொண்டுகளை அளவிட முடியாது. இலங்கைத் தீவுக்குக் காந்தி மகானையும் நேரு அவர்களையும் ராஜாஜியையும் வருவிப்பதற்கு மூல காரணமாயிருந்தவர் அவர்தான். ஏன்? நான் இம்முறை இலங்கை சென்றதற்குக்கூட முக்கியக் குற்றவாளி அவர்தான். “இங்கே பலர் உங்களுடைய சொற்பொழிவைக் கேட்க விரும்புகிறார்கள். நீங்கள் வருகிறீர்களா? அல்லது நாங்கள் புறப்பட்டு அங்கே வரட்டுமா?” என்று எழுதியிருந்தார். இப்போதைய தமிழ் நாட்டு உணவு நிலைமையில் நான் என்ன பதில் சொல்ல முடியும்? “நான் வருகிறேன்; நானே வருகிறேன்” என்று கதறிக்கொண்டு கிளம்பினேன்.

முதலில் பொதுத் தொண்டிலேயே வாழ்க்கையைச் செலவிட்டு வந்து, பிறகு சில காலம் வக்கில் தொழில் செய்த ஸ்ரீ பேரின்ப நாயகம், இப்போது பல கணபர்களின் விருப்பத்தின் பேரில் கொக்குவில் ஹிந்துக் கல்லூரி தலைமை ஆசிரியர் பதவியை ஏற்றிருக்கிறார். அவருடன் ஒத்துழைத்துப் பல ஆசிரியர்கள் தொண்டு புரிகிறார்கள். கொஞ்சம் இக்கட்டான நிலைமையை அடைந்திருந்த கொக்குவில் ஹிந்துக் கல்லூரி ஸ்ரீ பேரின்ப நாயகம் பொறுப்பு ஏற்ற பிறகு பெரிதும் முன்னேற்றம் அடைந்திருக்கிறது.

* * *

யாழ்ப்பாணத்திலே இடறி விழுந்தால், ஒரு ஆசிரியர் மேல் நாம் விழும்படியாக இருக்கும் என்று சொன்னேன் அல்லவா? அங்கே படிப்பும் அதிகம், பள்ளிக்கூடங்களும் அதிகம். இது மட்டுமல்ல. தமிழ் நாட்டில் ஒரு ஆசிரியர் மேல் நாம் இடறி விழுந்தால் அந்த ஆசிரியர் தெருவில் 'அப்பாடா!' என்று கீழே விழுவார். அநேகமாக அவர் அரைப் பட்டினிக்காரராகவும் மெலிந்த மனிதராகவும் இருப்பார். யாழ்ப்பாணத்தில் அப்படியில்லை. அங்கே ஆசிரியர்களுக்கு நல்ல சம்பளம். இந்தியாவில் உயர் நிலைப் பள்ளிகளில் (அதாவது ஹைஸ்கூல்களில்) ஆசிரியர்கள் 60 முதல் 120 வரை சம்பளம் பெறுகிறார்கள். தலைமை ஆசிரியர்களுக்கு 150 முதல் 250 வரை இருக்கலாம். யாழ்ப்பாணத்தில் நமது ஹைஸ்கூல்களையே 'காலேஜ்' என்கிறார்கள். ஆசிரியர்களுக்கு 200 முதல் 300 வரை கிடைக்கிறது. தலைமை ஆசிரியர்களுக்கோ 400 முதல் 600 வரை சம்பளம். இன்னொரு விசேஷம் என்னவென்றால், இலங்கையில் ஆரம்பப் பள்ளிக்கூடத்திலிருந்து கொழும்பு யுனிவர்ஸிடி வரையில் மாணவர்கள் சம்பளம் கொடுக்கவேண்டியதில்லை. உபாத்தியாயர்கள், பேராசிரியர்கள், எல்லாருடைய சம்பளங்களையும் இலங்கை அரசாங்கமே கொடுத்து வருகிறது. இதில் அதிசயம் ஒன்றுமில்லை. அரசாங்கத்துக்கு நல்ல வருமானம் கிடைத்து வருகிறபடியால், கல்வித் துறைக்குத் தாராளமாகப் பணம் செலவு செய்ய முடிகிறது.

* * *

யாழ்ப்பாணத்து ஆசிரியர்கள் நல்ல சம்பளம் பெறுவதோடுகூட, சமூக வாழ்க்கையில் நல்ல அந்தஸ்தும் பெற்றிருக்கிறார்கள். அரசியல் தொண்டிலும், கலைத் தொண்டிலும், இலக்கியத் தொண்டிலும் ஈடுபட்டு வேலை செய்கிறார்கள். பொது ஊழியத்தில் பற்றுக்கொண்ட ஆசிரியர்களில் வைத்தீசுவரக் கல்லூரியின் தலைமை ஆசிரியர் ஸ்ரீ அம்பிகை பாகன் ஒருவர். தோற்றத்தில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு எப்படி யிருந்தாரோ அப்படியே இவர் இன்றைக்கும் இளம் பிள்ளைத் தோற்றத்துடன் இருக்கிறார். பன்னிரண்டு வயதையும் எப்படித்தான் சாப்பிட்டு ஜீரணம் செய்து கொண்டாரோ, தெரியவில்லை. தோற்றத்தில் மாறுதல் இல்லாவிட்டாலும் அவருடைய வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. முன்னம் நான் பார்த்த போது கட்டைப் பிரம்மச்சாரியாக இருந்தார். ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் பற்றும் தொடர்பும் கொண்டிருந்தார். நமது மாஜி கல்வி அமைச்சர் திரு அவிநாசிலிங்கத்தைப் போல் இவரும் நித்தியப் பிரம்மச்சாரியாகவே இருந்து விடுவாரோ என்ற கவலை எனக்கு ஏற்பட்டது. இலங்கையில் சிங்களவரின் தொகை தாறுமாறாகப் பெருகிக் கொண்டிருக்கும் நிலைமையில், ஸ்ரீ அம்பிகை பாகனைப்போன்ற இளைஞர்கள் பிரம்மச்சாரிகளாகவே இருந்தால், இலங்கைத் தமிழர்களின் கதி என்ன ஆகிறது? ஆகவே, அச்சமயம், "பெண்ணைப் பெற்ற எந்த பாக்கியசாலியான தகப்பனார் ஸ்ரீ அம்பிகை பாகனை மருமகனாக அடையப் போகிறாரோ?" என்று எழுதி வைத்தேன்.



ஸ்ரீ நா. பொன்னையா "ஈழகேசரி" பத்திராதிபர்



ஸ்ரீ அம்பிகை பாகன்

இந்தக் கலியாண விளம்பரம் வெகு சீக்கிரத்திலேயே பலன் அளித்தது. பெண்ணைப் பெற்ற ஒரு பாக்கியசாலி இவரை மருமகராக அடைந்தார். இன்றைக்கு ஸ்ரீ அம்பிகைபாகன் தம் இல்லத்திலும் உள்ளத்திலும் ஒரு அம்பிகையைப் பெற்று இல்லறம் நடத்தி வருகிறார். அவருடைய வீட்டில் சின்னஞ்சிறு குழந்தைகள் மழலை பேசி ஓடியாடுகின்றன!

இந்தக் காட்சியைப் பார்த்து மகிழ்ந்தேன். உடனே, ஸ்ரீ இராஜ அரிய ரத்தினத்தின் ஞாபகம் வந்தது. அடாடா! இதோ ஒரு அருமையான இளைஞர் இன்னும் பிரம்மச்சாரியாக இருந்து வருகிறாரே? இதனால் இலங்கைத் தமிழர் சமூகம் எத்தனை கஷ்டம் அடைந்து வருகிறது? எந்த பாக்கியசாலி இவரை மருகராக அடையப் போகிறாரோ?

யாழ்ப்பாணத்தில் "ஈழ கேசரி" என்னும் வாரப் பத்திரிகை பல ஆண்டுகளாகச் சிறப்பாக நடந்து வருகிறது. "இந்து சாதனம்" இந்து சமயப் பிரசாரத்துக்குச் சாதனமாயிருந்து வருவதுபோல. "ஈழ கேசரி" இலங்கையில் உள்ள தமிழ் மறுமலர்ச்சி எழுத்தாளருக்கு ஓர் அரிய சாதனமாக விளங்கி வருகிறது. இந்தப் பத்திரிகையைத் திறம்பட நடத்திவரும் ஆசிரியர் ஸ்ரீ இராஜ அரிய ரத்தினம். அருமையான பிள்ளை; திறமையான எழுத்தாளர்; குணம், தங்கக் கம்பிதான்! இதற்கு மேலே நான் சொல்ல வேண்டியதில்லை. பிறகு, பெண்ணைப் பெற்ற பெரியவர்களின் அதிர்ஷ்டம்!

"ஈழ கேசரி" பத்திரிகையின் அதிபர் யாழ்ப்பாணத்துப் பிரமுகர்களில் ஒருவரான ஸ்ரீ பொன்னையா அவர்கள். இந்தச் சிறந்த பத்திரிகையை நடத்துவதோடு பல அரிய பழந்தமிழ் நூல்களை வெளியிட்டுத் தமிழ்த் தாய்க்குத் தொண்டு புரிந்து வருகிறார். இம்முறை நான் சென்றிருந்த போது ஸ்ரீ பொன்னையா வைத்தியசாலையில் நோய்ப் படுக்கையில் படுத்திருப்பதாக அறிந்து, அவரை வைத்தியசாலைக்குப் போய்ப் பார்க்க விரும்பினேன். ஸ்ரீ பொன்னையா அவ்வளவு தூரத்துக்கு வைத்துக் கொள்ளவில்லை. நாங்கள் பேசுவதாக இருந்த பொதுக் கூட்டத்துக்கு எப்படியோ வந்து சேர்ந்து விட்டார். தமிழன்பும் உண்மையான நட்பும் எவ்வளவு சக்தி வாய்ந்தவை?

## 7

மேற் கூறிய நண்பர்களிடம், வடக்கு இலங்கைக் கடற்கரை ஓரமாக எங்களை அழைத்துச் செல்ல வேண்டுமென்று கேட்டுக் கொண்டிருந்தேன். 'மதுரையும் ஈழமும்' கொண்ட பராந்தக சோழன் என்ன, பழையாறைச் சுந்தர சோழன் என்ன, தமிழ் நாட்டுப் பேரரசர்களிலே இணையற்ற பெருமை வாய்ந்த இராஜ ராஜ சோழன் என்ன, 'கங்கையும் கடாரமும் கொண்ட' இராஜேந்திர சோழன் என்ன,- இத்தகைய அழியாப் புகழ்பெற்ற தமிழ் மன்னர்கள் மாபெரும் படைகளுடன் கப்பல் ஏறிக் கடல் கடந்து வந்து ஈழ நாட்டில் இறங்கியிருக்கக் கூடிய கடலோரப் பகுதிகளைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எனக்குச் சில காலமாக இருந்து வந்தது. இதைப் பற்றி நண்பர்களிடம் பேசிக் கொண்டிருந்த போது வந்தார் ஒரு மனிதர். அவர் உருவத்தில் குட்டையாயிருந்தார். களை பொருந்திய முகத்துடன் சமூகம் தந்தார்.

இவருக்கு ஊர் பருத்தித் துறை என்றும், இவரும் ஓர் ஆசிரியர்தான் என்றும், பெயர் திரு ஏரம்ப மூர்த்தி என்றும் அறிந்தேன். பெயர், இதற்கு முன் கேள்விப் பட்டிராத பெயராயிருந்தது.

"ஐயா! நீங்கள் பேச வேண்டியதேயில்லை!" என்றார், திரு ஏரம்ப மூர்த்தி.

"இல்லை, நான் பேசவில்லை!" என்று பணிவுடன் தெரிவித்துக் கொண்டேன்.

"நிச்சயமாக நீங்கள் பேச வேண்டியதில்லை!" என்றார் மறுபடியும்.

"இல்லை நான் பேசவே யில்லை!" என்று மீண்டும் கதறினேன்.

"உண்மையாகத்தான் சொல்லுகிறேன்; நீங்கள் பேச வேண்டாம்! தெரிகிறதா?" என்றார் பருத்தித் துறையார்.

உள்ளத்தில் பொங்கி எழுந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டேன். அப்பேர்ப்பட்ட பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தார் இந்தியாவை ஆண்ட காலத்தில் "நீர் பேசக்கூடாது!" என்று 144-வது பிரிவின்படி எனக்கு உத்தரவு போட்டார்கள். அதை நான் பொருட்படுத்தவில்லை. உத்தரவைக் கையில் வைத்துக் கசக்கிக் கொண்டே பேசித் தீர்த்தேன். அப்படிப்பட்ட என்னை இந்த இலங்கைத் தீவில் "பேசக்கூடாது!" என்று கட்டளையிடுவதற்கு இந்த மனிதர் யார்? இவருக்கு என்ன அதிகாரம்? ஸ்ரீ சேனநாயகாவின் சுவீகார புத்திரர் என்று தம்மை இவர் நினைத்துக் கொண்டாரா? இவ்விதம் எண்ணிப் பொருமினேன்.

"எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், பருத்தித் துறைக்கு நீங்கள் சும்மா வந்துவிட்டுத் திரும்பினால் போதும்! தங்களைச் சொற்பொழிவு ஆற்றச் சொல்லித் தொந்தரவு கொடுக்க விரும்பவில்லை!" என்று சொன்னார் திரு ஏரம்பமூர்த்தி.

"அப்படியா சமாசாரம்? மனதிற்குள் இவ்வளவு கெட்ட எண்ணமா வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று நானும் மனதில் நினைத்துக் கொண்டேன்.

முன்னமேயே கடற்கரையோரமாகப் பருத்தித்துறை வரையில் போகத் தீர்மானித்திருந்தபடியால், "அதற்கு என்ன? அப்படியே ஆகட்டும்!" என்றேன்.

"தாங்களும் ஸ்ரீ தூரனும் பருத்தித் துறைக்கு வந்து சமூகம் தந்தால் போதும். ஒரு வரவேற்பு நடத்துவோம். அதை ஏற்றுக் கொண்டு திரும்பி விடலாம். பேச்சு, பிரசங்கம், சொற்பொழிவு எதுவும் கண்டிப்பாக வேண்டியதில்லை. தாய் நாட்டிலிருந்து வந்தவர்களைச் சேய் நாட்டிலுள்ள நாங்கள் உபசரிப்பது எங்கள் கடமை யல்லவா? ஆனால் தங்களுக்கு எந்த விதத்திலும் தொந்தரவு மட்டும் கொடுக்க நாங்கள் விரும்பவில்லை! ஆகையால் நீங்கள் பேச வேண்டியதில்லை!" என்றார் ஸ்ரீ ஏரம்பமூர்த்தி.

"சேய் நாட்டிலுள்ள உங்கள் கடமையைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனால் என் கடமை என்னவென்று எனக்குத் தெரியும். கட்டாயம் உங்களுக்குத் தொந்தரவு கொடுத்தே தீருவோம். நானும் ஸ்ரீ தூரனும் நாளை மத்தியானம் பருத்தித் துறைக்கு வந்தே தீருவோம்!" என்று சொன்னேன். (அடுத்த இதழில் முடியும்.)

# நகர சபையின் தொண்டு

சென்னை நகர சபையின் சார்பாகக் "கம்பெண்டியம் 1950" என்ற ஒரு பிரசுரம் வெளியாகி யிருக்கிறது. இந்த மாதிரி பிரசுரங்கள் இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய தேசங்களிலேதான் வெளியிடுவார்கள். இந்தியா தேசத்திற்கே இம்மாதிரி பிரசுரம் இதுதான் முதலாவது என்று சொல்லலாம்.

சென்னை நகரசபை நிர்வாகம் எப்படி நடக்கிறது என்பதையும், எந்தெந்த இனத்தில் எவ்வளவு வருமானம் வருகிறது என்பதையும், எந்தெந்த இனத்தில் எவ்வளவு செலவு ஆகிறது என்பதையும் பல சித்திரப் படங்கள், புகைப் படங்கள், வரிப்படங்கள், கார்ட்டூன் படங்கள் மூலம் இந்தப் பிரசுரம் தெள்ளத் தெளிய எடுத்துச் சொல்லுகிறது. நகரசபை நிர்வாகத்தின் மூலம் பொது ஜனங்களுக்கு இன்றியமையாத இவ்வளவு சேவைகள் நடைபெறுகின்றனவா என்று அறிந்து பிரமிப்பு அடைகிறோம். நகரசபை வருமானம் ஒவ்வொரு ரூபாயிலும் இத்தனை அணா அல்லது பைசா இந்த இந்த வரி இனம் மூலம் வசூலாகிறது என்பது மிக ரசமா யிருக்கிறது. மொத்தம் இரண்டு கோடி ரூபாய் வருமானத்தில் கல்விக்காக 29 லட்சம் ரூபாயும் வீதி கூட்டித் துப்புரவு செய்யும் வேலைக்காக 30 லட்சம் ரூபாயும் சாலைப் பராமரிப்புக்காக 26 லட்சம் ரூபாயும் சாக்கடைத் திட்டத்துக்காக 16 கோடி ரூபாயும் செலவாகிறது என்னும் விவரங்களைப் பல வர்ணங்களினால் பகுதிப் படுத்திக் காட்டியிருக்கிறது. இதைத் தவிர, சென்னை நகரத்தில் வசிக்கும் மக்களில் 100 க்கு 55 பேர் மாதம் முப்பது ரூபாய்க்குள்ளும் 100 க்கு 18 பேர் மாதம் முப்பதுக்குமேல் 50 ரூபாய்க்குள்ளும் வருமானம் உள்ளவர்கள் என்பதைப் பார்த்துத் திடுக்கிடுகிறோம். இந்த 100 க்கு 73 பேரும் எப்படி வாடகை கொடுத்துக் குடியிருந்து நல் வாழ்க்கையும் நடத்த முடியும் என்ற ஒரு கேள்வியை இந்தப் பிரசுரம் கேட்டிருக்கிறது. இந்த நிலையில் டிராம் வண்டியின் மூலம் கிடைக்கும் வருமானத்தில் சர்க்கார் பங்கு பறித்துக்கொண்டு போவதையும் முக்கிய காரியங்களுக்குச் சர்க்கார் கிராண்டுகள் கொடுக்க மறுப்பதையும் விளக்கும் இரண்டு சாதுர்யமான கார்ட்டூன் படங்கள் மனதைக் கவர்கின்றன. பக்கத்துக்குப் பக்கம் படங்களுடனும் உபயோகமான புள்ளி விவரங்களுடனும் அழகாக அச்சிடப்பட்ட இந்தப் பிரசுரத்தை வெளியிட்டதின் பொருட்டு நகர சபைக் கமிஷனர் ஸ்ரீ சி. நரசிம்மம் அவர்களையும், சீப் அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி அவர்களையும் பாராட்டுகிறோம்.



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 8. உணவும் உடற் பயிற்சியும்

அடுத்த ஆசனப் பயிற்சிக்குப் போகுமுன் உணவு விஷயங்களில் உள்ள இன்னும் சில முக்கிய விஷயங்களைக் கவனித்தாக வேண்டும். முதலில் நாம் சாப்பிடும் அரிசியை எப்படிச் சமைத்துச் சாப்பிடுவது என்பதைத் தெரிந்துகொள்ளுவோம். சாதாரணமாக ஒரு படி அரிசி சமைக்கும் ஒரு வீட்டில் கைக் குத்தல் அரிசி, தவிடு நீக்காமல் முக்கால் படி சமைத்தால் போதும். மிஷினில் தீட்டிய அரிசிச் சாதம் சாப்பிடும் அளவில் முக்கால் பங்குதான் சாப்பிட வேண்டும். சாப்பிடும் பொழுது நன்றாய் மென்று சுவைத்துச் சாப்பிட வேண்டும். அப்படி மென்று சாப்பிட்டால் சாதம் உமிழ் நீருடன் கலந்து நல்ல ஜீரண சக்தி உண்டாகும். பற்களும் தாடைகளும் பலம் பெறும். அரிசியும் மிச்சம். இம்மாதிரி எல்லோரும் சாப்பிட்டால் நம் தேசத்தில் உணவுப் பற்றுக் குறை என்று பல்லவிக்குக் கூட இடம் இல்லாதபடி செய்து விடலாம்.

இதை என்னதான் தனிப்பட்டவர்கள் எழுதினாலும் பேசினாலும் ஓரளவு பிரசாரம் ஆகுமே தவிர, எல்லோருமே செய்ய மாட்டார்கள். அரசாங்கம் மனதுவைத்தால் வெகு சுலபமாகச் செய்து விடலாம். சிலர் எதிர்க்கத்தான் செய்வார்கள். கள்ளுக் கடையை எடுத்து விட்டதற்காக எதிர்ப்புகள் இல்லையா? அதனால் திரும்பவும் கள்ளுக் கடையைத் திறந்துவிட முடியுமா? ஜனங்களுக்கு நன்மை உண்டாக்கக் கூடியதைப் பலவந்தமாகத்தான் செய்ய வேண்டும். நெல் அரைக்கும் மிஷினில் நெல்லின் மேல் தோலை மாத்திரம் உடைத்துத் தள்ளும் மிஷினுக்கு மட்டும்தான் சர்க்கார் லைசென்ஸ் கொடுக்க வேண்டும். அப்படிச் செய்தால் பொது ஜனங்கள் ஓரளவாவது தவிடு நீங்காத அரிசியைச் சாப்பிட்டு வருவார்கள்.

சில பணக்காரர்கள் மட்டும் அதிகக் கூலி கொடுத்து நன்றாய்க் குத்திக் கொண்டாலும் பாதகமில்லை. அவர்களுக்கு மற்ற வகைகளில் சத்துள்ள ஆகாரம் கிடைத்துவிடும். பால், பாதாம் ஹல்வா, முதலிய வகைகளைச் சாப்பிட முடியும். டாக்டர் பில்லுக்குப் பணம் கொடுக்க அவர்களால் முடியும். சாதாரண ஏழைகளுக்கு இதனால் பெரும் உபகாரமாகும்; ஆரோக்கியமாக இருப்பார்கள். மருந்துகளுக்காகச் செலவிடும்பணம் மிச்சமாகும். மருந்தின் பெயரால் மேல் நாட்டாருக்குப் போகும் பணமும் மிஞ்சும்.

அரிசியை நமக்குச் சரியாகச் சமைக்கவே தெரிவதில்லை. சகோதரிகளுக்கு இது ஆச்சரியமாக இருக்கும். சிலருக்குக் கோபமும் வரலாம். "இத்தனை நாளும் நாம் சமைத்துப் போடாமல் சாப்பிடுகிறார்களாக்கும். புதிதாய்க் கற்றுக் கொடுக்க வந்து விட்டார்கள்" என்று கேட்கலாம்.

சாதாரணமாய் நாம் சமைக்கும் விதத்தைப் பார்ப்போம். அரிசியோ தீட்டின அரிசி. அதைப் பல தடவை ஜலம்விட்டுக் கழுவிக் கொட்டி விடுகிறோம். பிறகு உலையில் போட்டு அரிசி வெந்ததும் கடைசியில் கஞ்சியை வடித்து விடுகிறோம். இதுதான் எல்லோர் வீட்டிலும் செய்வது.

இதில் ஏதாவது சத்திருக்க நியாயமிருக்கிறதா? வெறும் சக்கைதான் மிஞ்சுகிறது. இதைத் தலையணையில் பஞ்சு திணிப்பது போல் வயிற்றில் திணிக்கிறோம்.

இந்த மிஷின் அரிசியும் கஞ்சி வடிக்கும் வழக்கமும் என்று நம் நாட்டிற்கு வந்ததோ அன்றே நமக்குச் சனியன் பிடித்து விட்டது. புதுப் புது நோய்களுக்கு ஆளாய்க் கொண்டிருக்கிறோம். முன்பெல்லாம் கஞ்சி வடிக்கும் பழக்கம் கிடையாது. இப்பொழுது கூடப் பொங்கல் பண்டிகை முதலிய விசேஷ தினங்களின்போது, பொங்கித்தானே வைக்கிறோம்?

கஞ்சி வடிக்காமல் சாப்பிட்டால் வயிறு கொஞ்சம் திம்மென்று இருக்கும். அதனால் சற்றுக் குறைத்துச் சாப்பிட வேண்டும். அவ்வளவுதான்.

கஞ்சி வடிக்காமல் சமைத்தால் ஒரே மொத்தையாய்ப் போய்விடுகிறது என்றும் ஒன்றும் பாதியுமாய் வேகிறது என்றும் அடிப் பிடித்து விடுகிறது என்றும் சிலர் சொல்லுவார்கள். இதற்கெல்லாம் ஒரு பரிகாரம் இருக்கிறது; மிக மிக சுலபமானது.

குக்கரில் சமைக்கும் விதம் பலருக்குத் தெரிந்திருக்கலாம். அதில் பல காய்கறி,

பருப்பு முதலியவைகளை ஒரே தடவையில் வேக வைக்கலாம். கஞ்சி வடிக்க வேண்டிய அவசியமில்லை. அதைப்போலவே சாதத்தை மட்டும் தனியாய்ச் சமைத்துக் கொள்ளலாம். எல்லோராலும் குக்கர் வாங்கிச் சமைக்க முடியாது. ஆனால் தென் இந்தியராகிய நம்மெல்லோருடைய வீடுகளிலும் இட்டிலி அண்டா கட்டாயம் இருக்கவே செய்யும். அதை உபயோகப் படுத்திக் கொள்ளலாம்.

அரிசியை எடுத்து ஒரு தடவை மட்டும் லேசாய்க் கழுவ வேண்டும். பிறகு, அடுக்குப் பாத்திரத்திலோ, குண்டானிலோ மேற்படி அரிசியைக் கொட்டி அதைப் போல் இரண்டு பங்கு ஜலம் விட்டு இட்டிலிப் பானைக்குள் வைக்க வேண்டும். இட்டிலிப் பானைக்குள் வைத்த பாத்திரத்திற்கு முக்கால் உயரம் வரும் வரையில் இட்டிலிப் பானையில் தனியாக ஜலம் விட வேண்டும். இட்டிலிப் பானைக்குள் வைத்த பாத்திரத்தை ஒரு தட்டால் மூடி, அதன்பிறகு இட்டிலிப் பானையையும் மூடி, அடுப்பில் வைத்துவிட வேண்டும். ஐந்து நிமிஷத்தில் அரிசி கொதிக்க ஆரம்பித்து விடும். பிறகு சுமார் ஒரு மணி நேரம் பொறுத்து இறக்கினால் சாதம் நன்றாக இருக்கும்.

* * *

நாம் என்ன வேண்டுமானாலும் எந்த நேரத்திலும் சாப்பிடலாம், ஆசனம் செய்தால் எல்லாம் சரியாய்ப் போய்விடும் என்ற எண்ணம் சிலருக்கு இருக்கிறது. எதிலும் ஒரு கட்டுப்பாடு அவசியம். இது ஆசனம் பழகுபவர்களுக்கு மாத்திரமல்ல, எல்லோருக்குமே பொருந்தும்.

காரத்தைக் குறைக்க வேண்டும் என்றேன். அதை முழுவதும் விட்டுவிட வேண்டும் என்றால் ஆசனத்தை யாரும் விரும்பவே மாட்டார்கள். அதற்குப் பதில் வியாதிகள் வந்தால் வரட்டும் என்று இருப்பார்களே தவிர யாரும் மிளகாயை விடத் தயாராய் இருக்க மாட்டார்கள். அவ்வளவு முக்கிய ஸ்தானம் வகிக்கிறது மிளகாய். ஆகையால் அதைக் கொஞ்சம் குறைத்துக் கொண்டால் போதும்.

ஆசனம் போட்டுப் பழகினால், மிளகாய் என்ன குணம் செய்கிறது என்று அவர்களே அறிந்து கொள்வார்கள். நாளுக்கு நாள் குறைத்துக் கொண்டே வருவார்கள்.

பச்சை மிளகாயில் விடமின் சத்து இருக்கிறது என்று வாதிப்பாரும் உண்டு. எதையும் அளவுக்கு மிஞ்சிச் சாப்பிடுவதினால் என்ன பலன் உண்டாகிறது என்று சாப்பிடுபவர்களுக்குத் தெரியும். மூலம், பௌத்திரம், வயிற்றுக் கடுப்பு, மூத்திரக் கடுப்பு, எரிச்சல், உஷ்ணம் முதலிய பல கோளாறுகள் உண்டாகின்றன.









சிறு குழந்தைகளுக்குக் காரத்தை ஊட்டினால் முதலில் சாப்பிடாது. அதைக் கஷ்டப்படுத்தித் தினமும் கொஞ்சம் கொஞ்சமாகக்கொடுத்துப் பழக்கப்படுத்துகிறோம். காரம் பட்டதும் நரம்புகள் துடிக்கின்றன. ரஸங்களை அதிகமாய்க் கக்குகின்றன. சாப்பிட்ட ஆகாரங்கள் அதனால் சீக்கிரம் ஜீரணம் ஆகிறது. இப்படியே செய்து வர வர ஜீரணக் கருவி ரஸம் கக்கச் சக்தியற்று, சத்தியாக்கிரகம் செய்ய ஆரம்பித்து நோய் உண்டாகிறது.

'வேத நூற்பிராயம் நூறு' என்பதை மறந்தே விட்டோம். நமது இந்திய ஜனங்களின் சராசரி வயது 25. மற்ற நாடுகளில் 50, 60 என்று இருக்கிறது. மனிதன் 30 வயதானால் கிழவனாக மதிக்கப்படுகிறான். அதற்குள் அரை டஜன் குழந்தைகள். பெண்களானால் நோண்டு கிழமாய் விடுகிறார்கள். எத்தனை கர்ப்பச் சிதைவுகள், எத்தனை சிசுக்களைப் பலி கொடுப்பது. இருக்கும் குழந்தைகளோ நோய்க் களஞ்சியங்கள். முப்பது வயதுக்கு மேல் மருந்துகளின் உதவி யில்லாமல் வாழுவது கடினமாய் விடுகிறது.

சில பெரியார்கள், யோகிகள் நூறு ஆண்டுகளுக்கு மேல் உயிர் வாழ்ந்திருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் யோக நியமப்படி வாழ்ந்தவர்கள்.

நாம் அவ்வளவு காலம் இருக்கா விட்டாலும் இருக்கும் வரையிலாவது சுகமாக வாழ வேண்டாமா?

"நோய்களற்ற உடலினைப் வா! வா! வா!" என்று பாரதியார் அறை கூவுகிறார். எதற்கு? பாரதத்தை முன்போல் உலகின் ஜோதியாக்குவதற்குத்தான்.

நோய் ஆயுளைக் குறைத்து விடுகிறது. வளர்ச்சியையும் குறைத்து விடுகிறது. மனத்தை மாற்றி விடுகிறது. குணத்தைக் குறைக்கிறது. மக்களை மாக்களாகச் செய்து விடுகிறது.

இதற்குப் பரிகாரம் என்ன? யோக சாதனம் தவிர வேறு மார்க்கமில்லை. நிரந்தரமான வழி இதுதான்.

சமீபத்தில் தினசரிப் பத்திரிகையில் ஒரு சந்தோஷச் செய்தி வந்தது. அது லண்டன் செய்தி. அதில் ஒரு ஆங்கில அறிஞர் "யோகாசனத்தை அரசாங்கம் கட்டாயமாக்க வேண்டும். ஜனங்களுக்கு அதனால் மிக்க பலன் உண்டு. யோகாசனம் நோய் வருவதைத் தடுக்கிறது. நோய்களைக் குணப்படுத்தும் சக்தி யோகாசனத்திற்கு இருக்கிறது. சோர்ந்த அவயவங்களுக்குப் புத்துயிர் கொடுக்கிறது. வாலிபம் நிலைத்து நிற்கிறது. ஆகையால் அரசாங்கம் இதைக் கட்டாயமாக எல்லோரும் செய்யும்படி செய்ய வேண்டும்" என்று எழுதியிருந்தார். அவர் சமீபத்தில் மகா யுத்தம் நடந்தபோது ரஷ்யாவில் இருந்தாராம். அப்போது ஆசனப் பயிற்சியை அங்கு கற்றுக் கொண்டாராம்.

அவர்கள் போகும் வேகத்தைப் பார்த்தால் ஆசனத்தைக் கூடத் தாங்கள்தான் கண்டு பிடித்ததாகச் சொல்லுவார்கள் போலிருக்கிறது. எத்தனையோ கலைகளை அவர்கள் அப்படிச் செய்திருக்கிறார்கள். அதில் இதுவும் ஒன்றாகி விடும்படி செய்து விட வேண்டாம்.

ஸ்ரீ அவினாசிலிங்கம் அவர்கள் கல்வி மந்திரியாய் இருக்கும்போது, எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் யோக ஆசனம் சொல்லித்தர வேண்டும் என்று ஒரு சட்டம் செய்தார். அதைப் பார்த்ததும் மிகவும் சந்தோஷம் உண்டாயிற்று. நமது கலைக்கும் நல்ல காலம் பிறந்து விட்டது என்று நினைத்தோம். ஆனால் நடைமுறையில் அப்படி எந்தப் பள்ளிக்கூடத்திலும் குழந்தைகளுக்கு ஆசனம் சொல்லிக் கொடுப்பதாகத் தெரியவில்லை.

சட்டம் இயற்றி விட்டார்களே தவிர அதை நிறைவேற்றத் தகுந்த நடவடிக்கை எடுத்ததாகத் தெரிய வில்லை. யோகாசனத்தில் நல்ல தேர்ச்சி பெற்றவர்களைக் கொண்டு உபாத்தியாயர்களுக்குப் பயிற்சி கொடுக்கலாம். இனிப் புதிதாய் வரும் உபாத்தியாயர்களும் ஏற்கெனவே இருக்கும் உபாத்தியாயர்களும் யோக ஆசனம் கற்றுக்கொள்ள வேண்டும். அப்படிக் கற்றுக் கொள்பவர்களுக்கு ரூ. 5 சம்பளத்தில் உயர்த்தப்படும் என்று தெரிவித்தால் அக்கறையாகக் கற்பார்கள். கல்வி இலாகாவுக்குச் செலவு அதிகம் ஆகுமென்று சிலர் சொல்லலாம். மக்கள் சுகாதாரத்திற்காக ஆஸ்பத்திரிகளைப் பெருக்குவதை விட, தடுக்கும் முறையாகச் சிறுவயதிலிருந்து ஆரோக்கிய அஸ்திவாரம் இடுவது நல்லதல்லவா? அதற்காகச் செலவு செய்வது அதிகமல்ல.

சில மாதங்களுக்கு முன் நூல் நூற்கக் கற்றுக் கொள்ளும் உபாத்தியாயர்களுக்குச் சம்பளம் அதிகம் தரப்படும் என்றதும், உபாத்தியாயர்கள் எல்லோரும் அக்கறையாக நூல் நூற்கக் கற்றுக்கொள்ளவில்லையா? அதைப் போல இதையும் அக்கறையாகக் கற்றுக்கொள்ள முன்வருவார்கள். அவர்களுக்கும் ஆரோக்கியம் கிட்டும். டாக்டருக்குக் கொடுக்கும் பணம் மிச்சமாகும். குழந்தைகளுக்கும் ஆரோக்கியம். அவர்கள் வாழ்க்கைக்கு நல்ல அஸ்திவாரமும் உண்டாகும். (தொடரும்)

ஸ்ரீ சிவானந்த சரஸ்வதி



செப்டம்பர் மாதம் முப்பதாம் தேதி சென்னைக்கு விஜயம் செய்கிறார்.

# நாரதர் தோற்றார்!

பரதேசி

தருமம் நலிந்து அதருமம் மலியும் போதெல்லாம் கடவுள் இம்மண்ணுலகில் அவதரிப்பது வழக்கம். அதுமட்டுமல்ல; இவ்வுலக மக்களோடு நெருங்கிப் பழகி அவர்களோடு தாமும் ஒருவராய் வாழ வேண்டுமென்ற விருப்பமும் அவருக்கு ஒவ்வொரு சமயம் ஏற்படுவதுண்டு.

திரிலோக சஞ்சாரியென்றும் கானவித்யா விசாரதா என்றும்—இன்னும் பல அரிய பெரிய பட்டங்களைப் பெற்றுள்ள சாக்ஷாத் பிரம்ம புத்திரரான நாரத சிரேஷ்டருக்கும் அம்மாதிரி ஒரு ஆசை ஏற்பட்டது!...ஆனால் அவருடைய ஆசையெல்லாம் எப்படியாவது நம் அகில இந்திய ரேடியோவில் ஒரே ஒரு தடவை பாடவேண்டுமென்பது தான்! இந்த விபரீத ஆசை அவருக்குத் தோன்றக் காரணமாயிருந்தவர் சமீபத்தில் காலமான ஒரு பிரபல சங்கீத வித்வான்தான். அவர் மேலுலகம் சென்று நம் அகில இந்திய ரேடியோவைப் பற்றியும் அதில் (இளம் வித்வான்கள் வாயில் மண்ணைப் போட்டு விட்டு) தாம் அடிக்கடி கச்சேரி செய்தது பற்றியும், அது பற்றிப் பத்திரிகைகள் பிரமாதமாக விமரிசனம் செய்து அவர் படத்துடன் வெளியிட்டது பற்றியும் பெருமையடித்துக் கொண்டார்.

அதன் காரணமாக இயற்கையிலேயே நல்ல சங்கீத ஞானமுள்ள நாரதருக்குத் தாமும் அகில இந்திய ரேடியோவில் பாடிப் பூலோக மக்களின் புகழைப் பெற வேண்டுமென்ற ஆசை தோன்றிற்று!...

பூலோகத்தில் அவதரிப்பதென்றால் பூலோக மக்களின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப் பட்டுத் தானே நடக்க வேண்டும்?—ஆனால் இதை அவசரத்தில் அந்த நாரதர் யோசிக்கவில்லை.

ஏதோ ஒரு அநாமதேயக் கிராமத்தில் ஏழைக் குடும்பத்தில் வறுமையில் உழலும் பெற்றோர்களுக்கு மூன்றும் பிள்ளையாய்ப் பிறந்தார்.

அவர் ரோகிணி நட்சத்திரத்தில் பிறந்ததன் காரணமாக 'கிருஷ்ணமூர்த்தி' என்று பெயர் வைத்தார்கள்.

கிருஷ்ணமூர்த்தி காலொரு நாதமும் பொழுதொரு பாட்டுமாகச் சிறுவயது முதலே பாட ஆரம்பித்து விட்டான்! பாட்டு செவிக்கு இனிமையாயிருந்தது. ஆனால் பாடினால் வயிறு நிறைந்து விடுமா? பிள்ளை 'சாக்ஷாத் நாரதன்' என்பதை அறியாத பெற்றோர்கள் அவனை அ—ஆவன்னா கற்றுக் கொள்ளப் பள்ளிக்கு அனுப்பினார்கள். மாஜி நாரதர் சரிவரப் பள்ளிக் கூடம் போகாமல் மாந்தோப்பில் "கண்ணனைக் கண்டதுண்டோ" என்றும் "மாமவஹே முகுந்த"—என்றும் மெய்மறந்து பாடினார். இன்னும் மனதில் தோன்றியபடியெல்லாம் அவர் எம்பெருமானைத் துதித்துப் பாடி வந்தார்.

ஆனால் சிறுவன் கிருஷ்ணமூர்த்தி இப்படிப் படிக்காமல் ஊர் திரிவது தாய் தந்தையருக்குப் பிடிக்கவில்லை. எனவே அவர்கள் கிருஷ்ணமூர்த்தியை அந்தப் பட்டிக் காட்டிலிருந்து வெளியேற்றிப் பட்டணத்திலுள்ள மாமாவின் ஆதரவில் படிக்க வைத்தார்கள்! தாய்தந்தையர் தம்மீது இப்படி ஆட்சி செலுத்த ஆரம்பித்ததும் கிருஷ்ணமூர்த்தி ஒழுங்காகப் படிக்க ஆரம்பித்தான். மளமள வென்று பரீட்சைகளும் பாஸ் செய்து வந்தான்.

ஊரில் நடைபெறும் கச்சேரிகளுக்கெல்லாம் தவறாமல் விஜயம் செய்தான். கட்டணம் உள்ள இடங்களில் வெளியிலிருந்தபடியே கேட்க ஆரம்பித்தான்!

சங்கீதமென்பது என்னவென்றே அறியாதவர்களெல்லாம் பெரிய பெரிய பாடகர்களாகவும்—பெருமைக்குப் பாத்திரர்களாகவும் இருக்கும்போது நமக்கு மட்டும் இன்னும் மதிப்புக் கிடைக்கவில்லையே என்று கிருஷ்ணமூர்த்தி மறுகினான்.

கடைசியில் என்ன வந்தாலும் வரட்டுமென்று அகில இந்திய ரேடியோ டைரக்டருக்கு ஒரு கடிதம் எழுதினான். அதில் தனக்குச் சொந்தமாக நன்கு பாடத் தெரியுமென்றும் நூறு இருநூறு பாடல்களுக்கு மேல் சொந்தமாகவே பாடியிருப்பதாகவும், தயவு செய்து தனக்குப் பதினைந்து நிமிஷமாவது சான்ஸ் கொடுக்க வேண்டுமென்றும் அதில் எழுதியிருந்தான். டைரக்டரிடமிருந்து இரண்டு வாரத்துக்குள் அவனை நேரில் ஸ்டுடியோவில் வந்து சந்திக்கும்படி கடிதம் வந்தது. கிருஷ்ணமூர்த்திக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. என்றாலும் அந்தக் கடிதம் கிடைத்த அன்று ஆபீஸுக்கு நேரமாகி விட்டது. மறுநாள் கவர்மெண்ட் லீவு நாள். எனவே அதற்கு மறுநாள் கிருஷ்ணமூர்த்தி அந்தக் கடிதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு ரேடியோ ஸ்டேஷனுக்கு விரைந்தான்.

டைரக்டரின் அறை வாசலிலுள்ள சேவகன் அரை மணி நேரம் கிருஷ்ணமூர்த்தியை நிற்க வைத்தான். பின்பு அவன் கொடுத்த கடிதத்தை வாங்கிக் கொண்டு "இன்னும் அரை மணி ஆகும்!... ஏன் இங்கே நிக்கிறீங்க!...அப்படிப் போய் உட்காருங்க" என்றான்.

கிருஷ்ணமூர்த்தி தான் மனித ஜன்மம் எடுத்த காரணத்தால் அடைந்துள்ள தொல்லைகளைப் பற்றிச் சிந்தித்தபடியே முக்கால் மணி நேரம் ஒரு பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். புரோகிராம் முடிந்து நிலையத்தை விட்டு வெளியேறும் கானகலா விபூஷிணி குமாரி லதா, போகும் போது கிருஷ்ணமூர்த்தியை அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டுப் போனாள். அங்கே குறுக்கும் நெடுக்கும் ஓடிக்கொண்டிருந்த நிலையச் சேவகர்கள் அவனை அனுதாப திருஷ்டியுடன் பார்த்தார்கள். அவர்களில் ஒருவன் வாய் திறந்து "பாவம்! புதுசு போலிருக்கு!......இன்னும் டைரக்டரைப் பார்க்கலே போலிருக்கு" என்று முணுமுணுத்துக் கொண்டே போனான்.

கிருஷ்ணமூர்த்திக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. ஒரு மணி நேரம் காத்திருந்தும் எவ்விதத் தகவலுமில்லை. கடைசியில் பொறுமையிழந்து அவ்விடத்தை விட்டு வெளியேற முடிவு செய்த போது "நீங்கள் தானா கிருஷ்ணமூர்த்தி!" என்று கேட்டபடியே ஒரு ஆபீசர் எதிரில் வந்தார். 'ஆமாம்' என்று கிருஷ்ணமூர்த்தி எழுந்து நின்றான். பின்பு அவரைப் பின் தொடர்ந்து சென்றான்!...

ஸ்டுடியோ அறையொன்றில் மைக்கின் முன்பு கிருஷ்ணமூர்த்தியை உட்கார வைத்தார்கள்.

சுருதி சேர்ப்பதற்காக, "ஸார் உங்களுக்கு எத்தனை கட்டை?" என்றொருவர் கேட்டார்.

கிருஷ்ணமூர்த்தி பதட்டமாகப் பதில் சொன்னான்—"கட்டையுமில்லை மிட்டையுமில்லை!"

அந்த மனிதர் உதட்டைப் பிதுக்கியபடி பக்கத்திலிருந்த இன்னொருவரைப் பார்த்தார். அவர் ஏதோ சைகை செய்தார்.

பிறகு இருவரும் கிருஷ்ணமூர்த்தியைப் பாடச் சொன்னார்கள்!

தேவகானம் ஆரம்பமாயிற்று! குரலினிமையிலும் பாடல்களின் சொல் நயத்திலும்—இதய பாவத்திலும் சுற்றிலுமிருந்தோர் தங்களை மறந்து சொக்கி நின்றனர்.

"ஆமாம்!......உங்களுக்குத் தியாகராஜ கீர்த்தனை தெரியுமா?—ஏதாவது ஒன்று பாடுங்கள்!"

"தெரியாது!"

"தெரியாதா?"

"ஆமாம்!— நான் முன்பே என் கடிதத்தில் விவரமாய் எழுதியிருந்தேனே!"

"சரி, தீக்ஷிதர் கிருதி?"

"ஊஹூம்"

"அடேடே!...அதுவும் தெரியாதா? சரி, பாரதியார் பாடல் ஏதாவது..."

"அதுதான் நான் முன்பே சொல்லிவிட்டேனே—"

"நம் ஆஸ்தானக் கவிஞரின் பாடல் ஏதாவது..."

கிருஷ்ணமூர்த்தி பொறுமை யிழந்தான்—"ஸார்!...இங்கே பாருங்கள்...என் சொந்த கிருதிகளைத் தவிர எனக்கு வேறு எதுவும் தெரியாது!...எட்டு வருஷங்களுக்கு முன்பு என் உள்ளுணர்ச்சியால் இவைகளைப் பாடினேன். உங்கள் ரேடியோ ஸ்டேஷனில் பாடவேண்டுமென்பதற்காக நான் பலவந்தமாக இயற்றவில்லை!...உங்களுக்கு என் குரலும் பாடல்களும் பிடித்திருந்தால் ஒரு சான்ஸ் கொடுங்கள்!..."

அதிகாரி மறுமொழி பேசவில்லை. "சரி! அப்படியானால் என்னோடு வாருங்கள். ஒரு



அப்ளிகேஷன் எழுதிக் கொடுத்துவிட்டுப் போங்கள்" என்றார்.

அப்ளிகேஷன் பாரத்தில் கிருஷ்ண மூர்த்தி விலாசத்தையும் கையெழுத்தையும் மட்டும் போட்டான். மற்ற காலம் எல்லாம் அவனுக்குச் சம்பந்தப்படாதவை.

அதில் இதற்குமுன் கச்சேரி செய்ததுண்டா?

சிட்சை சொல்லித் தந்தவர் யார்?...

எத்தனை வருஷகாலம் 'பயிற்சி' செய்திருக்கிறார்?...

என்னென்ன பட்டம் பெற்றிருக்கிறார்— என்பன போன்ற கேள்விகளெல்லாம் இருந்தன. கிருஷ்ணமூர்த்திக்கு அவைகளில் எழுத எதுவுமில்லை.

ஆனால் தன் குரலிலும், பாட்டிலும் அவனுக்கு அபாரத் தன்னம்பிக்கை இருந்தது. தன் குரலினிமையை அவர்கள் ரசித்ததையும் கண்கூடாகக் கண்டிருந்தான்.

அப்ளிகேஷனைப் பூர்த்திசெய்து டைரக்டரிடம் கொடுத்துவிட்டு "அப்படியானால் நான் போய் வரட்டுமா? மறுபடியும் தங்களை நேரில் நான் வந்து பார்க்க வேண்டியதில்லையே!" என்று கேட்டான்.

"அதெல்லாம் ஒன்றும் அவசியமில்லை. கூடிய விரைவில் உங்கள் விலாசத்துக்கு நான் கடிதம் அனுப்புகிறேன்" என்றார் டைரக்டர்.

கிருஷ்ணமூர்த்தி வீடு திரும்பினான். தன் பரலோக லட்சியம் ஐம்பத்தேழு வருஷங்களுக்குப் பின்பு இப்போது நிறைவேறப் போகிறதென்பதை நினைக்கும்போது அவனுக்கு ஆனந்தம் சொல்லி முடியவில்லை. மாமாவும் தன் மருமானுக்கு ரேடியோவில் ஒரு சான்ஸ் கிடைக்கப் போவது பற்றிப் பெருமைப் பட்டார்.

அன்றையத் தபாலிலேயே கிருஷ்ண மூர்த்தி ஊரிலிருந்த தன் தகப்பனுக்கு முழு விவரமும் தெரிவித்துக் கடிதம் எழுதினான்.

தினமும் ஆவலோடு தபாலை எதிர்பார்த்திருந்தான்! நாலாம் நாள் மாலை உள்ளூர்த் தபாலில் ரேடியோ ஸ்டேஷனிலிருந்து ஒரு கவர் வந்தது.

சொன்னபடி இவ்வளவு சீக்கிரத்தில் புரோகிராம் அனுப்பி விட்டது குறித்துக் கிருஷ்ணமூர்த்தி அளவிலா மகிழ்ச்சியடைந்தான். அவன் மனக்கண்ணில் தான் ரேடியோவில் பாடுவதாகவும் இப்பூவுலகிலுள்ள எல்லா ஊர்களிலும் எல்லா வீடுகளிலும் மக்கள் தன் பாட்டை ஆவலுடன் கேட்டு மகிழ்வதாகவும் தோன்றிற்று!

கவரை உடைத்தான்!......

அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது.

அன்புடையீர், வணக்கம் தங்கள்......... தேதி எங்கள் நிலையத்துக்கு விஜயம் செய்தது குறித்துப் பெருமகிழ்ச்சி. ஆனால் தங்கள் சங்கீதத்தைப் பயன்படுத்திக்கொள்ள முடியாத நிலையில் நாங்களிருப்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்!...

(நாரதருக்குத் தலை சிர்ரென்று சுழன்றது!...)

கிருஷ்ணமூர்த்தி மனமிடிந்து போய் அப்படியே உட்கார்ந்து விட்டான். ஆனால் மனித மனோ நிலையில் ஏற்பட்ட இந்தக் கலக்கம் ஒரு நிமிஷம் வரைதான் நிலைத்திருந்தது...பின்பு இயற்கையான அந்த தேவ மனோபாவமும்—தன்னை அவமதித்ததால் ஏற்பட்ட கோபமும் வந்து விட்டது. உடனே கிருஷ்ணமூர்த்தி காரசாரமாகத் தன் பூர்வோத்திரங்களைப் பற்றியும் தான் அகில இந்திய ரேடியோவில் பாடுவதற்காகவே பூமியில் அவதரித்த நாரதர் என்பதையும் டைரக்டருக்கு எழுதினான்.

இந்தக் கடிதம் கிடைத்ததும் டைரக்டர் ஆச்சரியத்தில் மூழ்குவார். தம் தவறுக்காக மன்னிப்புக் கோருவதுடன் உடனேயே முழு நேரப் புரோகிராம் ஒன்று தனக்களிப்பார் என்று அவன் நம்பினான்.

அந்தக் கடிதத்துக்கும் மறுநாளே பதில் வந்தது!

"மன்னிக்கவும்...தங்கள் சங்கீதக்கலையை குறைகூறி நான் எதுவும் எழுதவோ சொல்லவோ இல்லை!—உண்மையில் தங்கள் குரலினிமையும், பாடல்களின் பொருள் வளமும் என்னை மெய்மறக்கச் செய்து விட்டன... என்றாலும் நான் என்ன செய்வது!

எங்கள் அப்ளிகேஷன் பாரத்தில் பல காலங்கள் காலியாக இருக்கின்றன. தாங்கள் ஒரு பரீட்சைகூடக் கொடுக்கவில்லை. தாங்கள் யாரிடமும் பயிற்சி பெறவில்லை. எங்கேயும் தாங்கள் இதற்குமுன்பு கச்சேரி செய்ததில்லை!

எனவே எங்கள் நியமப்படி நாங்கள் தங்களுக்கொரு சான்ஸும் கொடுக்க இயலாதவர்களாயிருக்கிறோம்!" என்று அதில் எழுதப்பட்டிருந்தது!

தோல்வியின் கண்ணீர் கிருஷ்ணமூர்த்தியின் கண்களில் அரும்பிற்று!

# பொழுது போக்கு

"தும்பி"

காங்கிரஸ் அக்கிராசனர் ராஜரிஷி தாண்டன் தலைமைப் பிரசங்கத்தைப் பயபக்தியுடன் எதிர்பார்த்தவர்களுள் நானும் ஒருவன். மிகவும் உஷ்ணமாயிருக்கும் என்று எதிர்பார்க்கப்பட்ட அவர் தலைமையுரை நாசிக்கில் பெய்த கடும் மழையின் காரணமாகவோ என்னவோ ஆறிப்போன மெதுவடை போலாகிவிட்டது. ஆறிப் போன மெதுவடையில் சூடான சாம்பாரை விட்டு ஹோட்டல்களில் நம் எதிரில் கொண்டு வந்து வைப்பது போல ஸ்ரீ தாண்டனும் தம் பிரசங்கத்திற்குச் சூடேற்ற முயற்சித்திருந்தாலும் அவர் பிரசங்கத்தின் சாராம்சத்தை நாம் இது வரை ஆயிரம் இடங்களில் கேட்டிருப்பது போலத் தோன்றுகிறது.

இந்தத் தலைமைப் பிரசங்கத்தைத் தயாரிக்க அவர் தலைமறைவாக இரண்டு நாட்களிருந்தார் என்ற செய்தி எனக்கு ஆச்சரியத்தை யளிக்கிறது. எதற்காக அவர் இவ்வளவு கஷ்டப்பட வேண்டும்? பேசாமல் பழைய தினப் பத்திரிகைகளை எடுத்து வைத்துக் கொண்டு நாட்டின் நிலைமையையும் காங்கிரஸின் நிலைமையையும் பற்றிப் பல தலைவர்கள் பல தடவைகள் பேசியதை யெல்லாம் ஒரு தடவை பார்த்து வைத்துக் கொண்டால் அவர் இப்போது செய்ததைப் போல இரண்டரை மணியென்ன, வாரக்கணக்கில் கூடப் பிரசங்கம் செய்து கொண்டிருக்கலாமே?

ஸ்ரீ தாண்டனுடைய தலைமையுரை இவ்வளவு 'சப்'பென்றிருக்கும் என்று எனக்கு முன்னதாகவே தெரிந்திருந்தால் அவருக்கு ஒரு அருமையான யோசனை என்னால் கூறியிருக்க முடியும். அக்கிராசனர் தேர்தல் முடிவு தெரிந்தவுடனே சந்தடியில்லாமல் அவர் சில எழுத்தாளர்களைக் கூப்பிட்டுத் தாம் என்ன விஷயங்கள் அல்லது பிரச்னைகளைப் பற்றிப் பேச எண்ணுகிறேனென்பதை அவர்களிடம் சொல்லி அவர்கள் கற்பனைகளையும் குதிரை வேகத்தில் தட்டி விடச் செய்திருக்க வேண்டும். ஒவ்வொருவிதப் பிரச்னையையும் ஒவ்வொரு ரக (அல்லது ரஸ) எழுத்தாளரிடம் விட்டு விட்டிருந்தால், பல பிரச்னைகளடங்கிய அவருடைய தலைமைப் பிரசங்கத்தை நாம் மொத்தமாகக் கேட்கும் போது அதில் நவரஸங்களும் ததும்பிக் கொண்டிருக்கும்படி வெகு சுலபமாகச் செய்திருக்கலாம்.

உதாரணமாக, 'நாட்டின் பஞ்சநிலைமை' என்ற விஷயத்தைப் பற்றியெழுத ஒரு சோக எழுத்தாளரை ஏற்படுத்தியிருந்தால் அந்தப் பகுதியை ராஜரிஷி படிக்கும் போது ஏற்கெனவேயிருக்கும் மழையோடு ஜனங்களின் கண்ணீரும் சேர்ந்து எல்லோரும் சோக வெள்ளத்தில் மிதந்திருக்கலாம். இதுமாதிரி இன்னும் 'மந்திரி சபைகள்' என்ற விஷயத்தைப் பற்றி எழுத ஒரு ஹாஸ்ய எழுத்தாளரிடம் விட்டிருக்கலாம். 'காஷ்மீர் நிலைமை'யை ஒரு 'வீர' எழுத்தாளரிடம் விட்டிருக்கலாம். 'இந்தியா பாகிஸ்தான் உற'வை ஒரு 'காதல்' எழுத்தாளரிடம் ஒப்புவித்திருக்கலாம். 'சுத்த ஹிந்தி' என்ற விஷயத்தை ஒரு தனித்தமிழ் எழுத்தாளரிடம் கொடுத்திருக்கலாம்......... பாக்கி 'காங்கிரஸின் தற்போதைய நிலைமை' அல்லது 'தேசத்தின் இப்போதைய கதி' என்பது போன்ற ரஸமில்லாத, சப்பென்ற சாதாரண விஷயங்களைக் காங்கிரஸ் தலைவரே எடுத்துக்கொண்டு எழுதியிருக்கலாம்.

* * *

'சட்டசபையில் தமாஷ்' என்ற செய்தி அடிக்கடி பத்திரிகைகளில் வருவதை நான் கவனித்துக் கொண்டிருக்கிறேன். 'சட்ட சபையே ஒரு தமாஷ்' என்று நினைக்கும் எனக்கு 'சட்ட சபையில் தமாஷ்' என்ற செய்தி அதிகத் தமாஷைக் கொடுப்பதில்லை.

எந்த நாடகத்திலும் ஹாஸ்யம் என்ற ஒரு அங்கம் இல்லாவிட்டால் ஜனங்கள் ரசிப்பதில்லை. அதே போல 'அரசியல்' என்ற நாடகத்திலும் ஹாஸ்யம் என்ற அங்கம் இல்லாவிட்டால் பொதுஜனங்கள் ரசிக்க மாட்டார்கள் என்று நினைத்துத் தானோ என்னவோ, 'சட்டசபை' என்ற ஹாஸ்யக் கட்டம் இருந்து வருகிறது.

இந்தச் சட்டசபைகளின் நிகழ்ச்சிகளைப் பத்திரிகைகளில் கவனித்து வந்தால் அங்கத்தினர்கள் பேசி முடிக்கும் போதெல்லாம் 'சிரிப்பு', 'பலத்த சிரிப்பு' 'கரகோஷம்' போன்ற வார்த்தைகள் அடிக்கடி காணப்படுகின்றன. சில சமயங்களில் அங்கத்தினர்கள் பேசி முடிக்கு முன்பே கூட இவ்வார்த்தைகள் அவசரப்பட்டுக் குறுக்கே புகுந்து விடுகின்றன. ஆனால் எந்த அற்புத ஹாஸ்யத்தைக் கண்டுதான் இவ்வளவு

சிரிப்பும், பலத்த சிரிப்பும், கரகோஷமும் என்று பார்த்தால், விஷயத்தைப் பல தடவைகள் படித்த பிறகு கூட எனக்கு அது புரியவில்லை. இதோ பாருங்கள்:—

**ஒரு அங்கத்தினர்:**—என் ஜில்லாவில் நாலு பேர்கள் சாப்பாடில்லாமல் மயக்கம் போட்டு விழுந்தது கனம் மந்திரி அவர்களுக்குத் தெரியுமா? (சிரிப்பு)

**கனம் மந்திரி:**—தெரியும்! தெரியும்! (சிரிப்பு). ஆனால் என்னுடைய ஜில்லாவில் ஐந்து பேர்கள் அஜீரணத்தினால் மடிந்தார்கள் என்பது கனம் அங்கத்தினருக்குத் தெரியுமா? (பலத்த சிரிப்பு)

**அங்கத்தினர்:**—தெரியும்! தெரியும்! தெரியும்! (பலத்த சிரிப்பு, கரகோஷம், ஆரவாரம், இருமல், தும்மல், விக்கல்.)

இப்படிச் சட்டசபை அங்கத்தினர்களைத் துன்பப் படுத்தும் ஹாஸ்யம் என்னவென்று எனக்குப் புரியவில்லை. புரியாத எந்த விஷயத்தையும் பொதுவாக மரியாதையுடன் நோக்குவது போல, இந்தப் புரியாத ஹாஸ்யத்தையும் உயர்தர ஹாஸ்யமாக எடுத்துக் கொள்ளலாமா?

# அக்கப் போர்

"சந்திர மண்டலத்துக்கு அனுப்பப்படும் முதல் ராக்கட் விமானம் தயாராய்விட்டது."

—லண்டன் செய்தி

"பெண்ணுடன் பிறந்த துண்டோ வெண்ணிலாவே!" என்று இதுவரை சந்திரனைப் பார்த்துக் கேட்டுக் கொண்டிருந்தவர்கள் சார்பில் யாராவது சென்று சந்திரனுடைய பதிலைப் பெற்று வருவார் என்று நம்புகிறோம்.

★

"ஒரு குழந்தைக்குத் தாயாரே தகப்பனாகவும் இருக்கலாம். இது இயற்கையில் சாத்தியமற்றது; ஆனால் சட்டப்படி சாத்தியமாகலாம்."

—செய்தித் தலைப்புகள்

"அப்பனும் நீ, அம்மையும் நீ," என்று பக்தர்கள் பாடுகிறார்களே, அது சட்டப்படி சாத்தியமானதுதானே!

★

"வகுப்புகளுக்கு மாணவர்கள் வராவிட்டால் கலாசாலையை மூடிவிடுவோம்" என்று மத்திய பாரத் சர்க்கார் மாணவர்களுக்கு எச்சரிக்கை செய்திருக்கிறார்களாம்.

இந்த எச்சரிக்கை உபாத்தியாயர்களைத்தான் அதிகம் பயமுறுத்தி யிருக்கும்!

★

"பிரபல துப்பறியும் நாவலாசிரியர் ஸ்ரீ ஜே. ஆர். ரங்கராஜு அவர்களுக்குக் கீழ்க் கோர்ட்டில் விதிக்கப்பட்ட அபராதம் மேல் கோர்ட் அப்பீலில் ரத்தாயிற்று." —செய்தி

எப்படி, ஏன் ரத்தாயிற்று என்பதைத் துப்பறியும் கோவிந்தன் விவரித்துச் சொல்லுவார் என்று எதிர் பார்க்கப்படுகிறது!

★

"கொலை செய்த கத்தியுடன் போலீஸ் ஸ்டேஷன் வந்து சரண் அடைந்தவனைப் போலீஸார் கைது செய்து விட்டார்கள்." —ஒரு செய்தி

போலீஸார் சாமர்த்தியமே சாமர்த்தியம்!

★

"மக்களின் உற்பத்தி சக்தியே தேசத்தின் செல்வமாகும். நாஸிக் மாதர் கூட்டத்தில் நேருஜி முழக்கம்."

—செய்தித் தலைப்புகள்

"மக்கள் உற்பத்தி" என்று நல்ல வேளையாக நேருஜி சொல்லவில்லையே என்று நிம்மதி அடைகிறார் ஒரு பெரிய குடும்பி.

"குற்றம் சாட்டப்பட்ட ஒருவர் கோர்ட்டில் கண்ணை மூடி ஜபம் செய்து கொண்டிருந்தாராம்."

—செய்தி

அவருடைய ஜபம் நீதிபதியிடம் சாயுமா!

★

சிகாகோ சிறையில் கைதிகளுக்குள் காதல் ஏற்பட்டு அதை வார்டனும் அனுமதித்து விட்டதாக ஒரு செய்தி கூறுகிறது.

"காதலின் முடிவு கல்யாணச் சிறை" என்று நாம் சொல்லி வந்ததை இனிமேல் மாற்றி "சிறையின் முடிவு காதல் கல்யாணம்" என்று கூறுவோமாக!

★

குறை மாதத்தில் பிறக்கும் குழந்தைகள் வளர்வதற்கு ஒரு புதிய சாதனத்தைக் கண்டு பிடித்திருக்கிறார்களாம்.

நம்முடைய மந்திரிகள் போடும் அரைகுறைத் திட்டங்களைப் பூரணமாக்க ஒரு சாதனமும் இல்லையா!

★

"மிகவும் சுத்தமான ஸ்டேஷன் என்று எழும்பூருக்குப் பரிசு கொடுத்திருக்கிறார்களாம்."

—ஒரு செய்தி

அது சுத்த உபயோகமற்ற ஸ்டேஷன் என்று சொல்லிவந்தவர்கள் இப்போது என்ன சொல்லப்போகிறார்கள்!

★

"தங்களுடைய பீஸ் கட்டணங்களை உயர்த்த கயா வக்கீல்கள் முடிவு செய்திருக்கின்றனர்."

—கயா செய்தி

பீஸ் உயர்ந்ததும் கேஸ் கயா ஆகாமலிருந்தால் சரிதான்!

★

"ஸமஸ்தான உதவிப் பிரதமர் வெள்ளத்தில் சிக்குண்டார்." —காஷ்மீர் செய்தி

உதவிப் பிரதமருக்கு உதவி செய்வார் யாரும் அங்கே இல்லையா!

★

"டிக்ஸனே! நீர் கூடவா!" என்று டான் பத்திரிகை தனது தலையங்கத்தில் தீட்டி இருந்தது.

—ஒரு செய்தி

தீட்டி யிருந்ததா! திட்டி இருந்ததா!

# ராமகிருஷ்ண உபநிஷதம்

★ ★ ★

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

★ ★ ★

## 29. பிரார்த்தனை

★

'இது வேண்டும்; அது வேண்டாம்' என்று ஆண்டவனைக் கேட்காதே, 'எல்லாம் உன் இஷ்டப்படி' என்று அவனுக்கு விட்டுவிடு. இவ்வாறு எல்லா சாஸ்திரங்களும் சொல்லியிருப்பது உண்மை. ஆயினும் மானிட ஜன்மத்தின் பண்பு இதற்கு இணங்க முடியவில்லை. தொன்று தொட்டு இது வரையிலும் பிரார்த்தனை செய்துதான் வருகிறோம். 'எல்லாம் உன் அருள்; உன் பொருள்' என்று வாயால் சொல்லி வந்த போதிலும் உள்ளத்தில் எண்ணியும் பிரார்த்தித்தும் வரும் முறை 'இதை எனக்குத் தா, அதை எனக்குச் செய்' என்றே நடந்து வருகிறது.

ஆண்டவனுடைய செயலும் பண்பும் நம் அறிவுக்கு எட்டாத படியாலும், எது நன்மை, எது துன்பம் என்பதை நாம் சரியாக முற்றிலும் அறிந்துகொள்ள முடியாத படியாலும், எல்லாவற்றையும் அவனுக்கே விட்டுவிடுவது மேலான முறை. இதில் சந்தேகமில்லை. ஆனபோதிலும் சேதனம் பெற்றிருக்கும் உயிர்கள் ஒருவரோடு ஒருவர் பேசிச் சம்பாஷணை செய்வது போல் ஆண்டவனிடமும் சம்பாஷிப்பதில் குற்றம் ஒன்றுமில்லை. அதுவே இயற்கைச்செயல். உள்ளத்திலுள்ளதை ஆண்டவனிடம் சொல்லிவிடுவதில் என்ன தவறு? ஒன்றுமில்லை. புருஷனும் மனைவியும் வாய் விட்டுப் பேசிக் கொள்ளுவது போல் ஆண்டவனே, சர்வ விஷயத்திலும் எஜமானனாயினும் பிரார்த்தனை மூலம் அவனோடு தாராளமாகச் சம்பாஷிப்பதில் குற்றமில்லை. நன்மையேயாகும். தினமும் ஒரு வேளையாவது ஈசனோடு பேசி, அழுது, விளையாடி, சம்பாஷித்து வருவோமானால் நம் உள்ளமும் பேச்சும் செயலும் துப்புரவு அடையும். பிரார்த்தனையின் பயனாக உள்ளம் அழுக்கு நீர்ந்து சுத்தியடைகிறது என்பதில் ஐயமில்லை. அனுபவத்தில் அனைவரும் காணக் கூடிய உண்மை.

● ● ●

'பிரார்த்தனை எந்த முறையில் செய்யவேண்டும்; மனதில் மௌனமாகச் செய்ய வேண்டுமா? அல்லது பிறர் கேட்கும்படி வாய் விட்டுச் செய்வதா?'' என்று ஒருவர் கேட்டதற்கு பகவான் ராமகிருஷ்ணர் சொன்னார்:

"எப்படி இஷ்டமோ அப்படிச் செய்யலாம். மெள்ள அழுதாலும் அவன் காதுக்கு எட்டும். சிற்றெறும்பின் காலடிச் சத்தம் கூட ஆண்டவன் காதுக்கு எட்டும்."



"பிரார்த்தனை செய்வதனால்பயன் உண்டா?"

"மனமும் வாக்கும் ஒன்றுபட்டு உள்ளச் சுத்தியுடன் செய்யப்படும் பிரார்த்தனை கட்டாயம் பலன் தரும். வாயால் 'இவை அனைத்தும் உன் சொத்து'

என்று சொல்லுவதும் அப்படிச் சொல்லும்போதே உள்ளத்தில் இவையனைத்தும் எனது என்று எண்ணிக் கொண்டு பிரார்த்தனை செய்தால் பயன் அடைய முடியாது. பிரார்த்தனை செய்யும்போது உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ளாதே. ஆண்டவனிடம் பொய் சொல்லாதே. உள்ளமும் செயலும் ஒன்றாக இருக்க வேண்டும். சுத்த உள்ளத்துடனும் நல்ல சிந்தனையுடனும் பிரார்த்தனை செய். ஆண்டவன் மறுக்க மாட்டான். உன்னிடம் மிகப் பிரியம் கொண்டவன். காலத்தில் என்ன செய்ய வேண்டுமோ அதைச் செய்துவிட்டு ஆண்டவன்பேரில் பாரம் போட்டுவிடு. எதற்கும் கவலைப் படாதே!

* * *

கடலில் திசை காட்டும் துருவ முள்ளைச் சரியாக வைத்துக் கொண்டிருக்கும் வரையில் கப்பலுக்கு அபாயமில்லை. காந்த முள் எப்போதும் துருவத்தை நோக்குவதைப் போல் மனம் இடைவிடாமல் ஆண்டவனை நோக்கியே நின்றால் வாழ்க்கை என்னும் கப்பல் கரையைப் போய்ச் சேரும்; பயமில்லை.

பாமரர்களும் மற்றவர்களும் பழமைய





முறையில் வழிபடும் மூர்த்திகளைப் பக்தியோடு உன்னால் வழிபட முடியாமலிருந்தாலும் கவலைப்பட வேண்டாம். "உனக்கு உருவம் உண்டோ இல்லையோ, இது எனக்குத் தெரியவில்லை. உன் சொரூபம் எனக்கு விளங்கவில்லை. நான் அறிய மாட்டேன். எவ்வாறாயினும் எனக்கு அருள்வாய்" என்று வேண்டிக் கொள்.

ஆண்டவன் உன்னை நிச்சயமாகக் கவனிப்பான். மகனே, அவனைப்போல் உன்னைக் கவனிப்பார் யாருமே இல்லை. நீ அவனை வேண்டிக் கொண்டதெல்லாம் அவன் கவனித்தே இருக்கிறான். உனக்கு எது நன்மை என்பதை அவனே அறிவான். ஒரு நாள் உனக்கு நிச்சயமாகத் தரிசனம் தருவான். மரணத் தறுவாயிலாவது தரிசனம் தருவான். பிரார்த்தனை செய்வதை விடாதே. கஷ்டத்திலும் சுகத்திலும் சம்பாஷணைக்குத் தகுந்த நண்பன் அவனைப் போல் வேறு யாருமில்லை. பிரார்த்தனை என்பது சேதன உயிர்கள் ஆண்டவனோடு சம்பாஷிப்பதே யாகும்.

மக்கள் ஊமையாக இருக்க இயலாது. பக்தி நிறைந்த பிரார்த்தனை என்பது அந்த நியதிக்குள் அடங்கும்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

சந்திரா

இராஜ ராஜ சோழனின் இளம்பிராயத்தில் நிகழ்ந்த மகத்தான சரித்திரத் தொடர் கதை

பொங்கல் சிறப்பிதழில் ஆரம்பம்




# மகிழபுரி மன்னன்

பி.எஸ்.மணி

## 3. அபாயம் நீங்கியது!

தீரன் அந்த விசைப் பலகையை விட்டுக் கீழே இறங்கி நடந்தான். கொஞ்ச தூரம் சென்றதும் கண்ணாடி விளக்குகள் கண்களைப் பறித்தன. முத்தும், வைடூரியமும், கோமேதகங்களும் அங்கும் இங்கும் கேட்பாரற்று வாரி இறைந்து கிடந்தன. அவன் அவற்றையா விரும்பினான்? இல்லையே! அவனுக்கு வேண்டியது முக்கியமாகப் பசியைப் போக்கும் உணவுதானே? அதைத் தேடிச் சென்றான். ஒவ்வொரு அறையாகத் தேடியதில் ஒரு அறையில் உணவு வகைகளும் பழ வகைகளும் குவிந்து கிடந்தன. வயிறு கொண்ட மட்டும் சாப்பிட்டான். பசி தீர்ந்ததும் அவனுக்கு அந்த விசித்திர இடத்தைச் சுற்றிப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது. கொஞ்ச தூரம் நடந்ததும் ஒரு அறை தென்பட்டது. அந்த அறையை நெருங்கியதும் ஒரு ஜன்னல் தெரிந்தது. அந்த ஜன்னலின் வழியே உள்ளே பார்த்தான்.

ஒரு இளம் பெண் சோர்ந்துபோய்ப் படுத்துக் கிடந்தாள். அவள் முகத்தில் கவலை குடிகொண்டிருந்தது. ஒருவேளை அவள், அரச குமாரி அமராவதியாயிருப்பாளோ என்ற எண்ணம் தீரனுடைய உள்ளத்திலே எழுந்தது. ஆகவே, தீரன் அவளை அணுகி விசாரிக்க நினைத்தான். உடனே அந்த அறையின் கதவு இருக்கும் இடத்தை நோக்கி நடந்தான்.

கதவு பூட்டியிருந்தது. உள்ளே எப்படிப்போவது என்று புரியாமல் விழித்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் அவனுக்குத் தன் தோளில் கோடாலி இருக்கும் விஷயம் நினைவுக்கு வந்தது. அவ்வளவுதான்; அதை எடுத்துப் பூட்டை ஓங்கி அடித்தான். பூட்டு தெறித்து விழுந்தது. தீரன் ஒரே உற்சாகத்துடன் உள்ளே நுழைந்தான்.

அந்தப் பெண் கதவு திறக்கப்படும் சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்திருந்தாள். காரணம் தெரியாத பயத்தினால் அவளுடைய உடல் நடுநடுங்கிக் கொண்டிருந்தது.

தீரன் அவள் அருகில் சென்று, "அம்மா, நீங்கள் யார்? என்னைக் கண்டதும் உங்கள் உடல் இப்படி நடுங்குவானேன்?" என்று அன்பு கலந்த குரலில் கேட்டான்.

"நான் மகிழபுரி மன்னனின் மகள். என் பெயர் அமராவதி. என்னை ஒரு மந்திரவாதி சிறைப்படுத்தி வைத்திருக்கிறான். அவன்தான் என்னைத் துன்புறுத்த வந்துவிட்டானோ என்று எண்ணிப் பயந்து விட்டேன். தாங்கள் யார்?" என்று கேட்டாள்.

"நானா? நான் ஒரு ஏழை விறகு வெட்டியின் மகன். என்னைத் தீரன் என்பார்கள். உங்கள் கஷ்ட நிலைமையைக் கேள்விப்பட்டு உங்களைக் காப்பாற்றும் நோக்கத்துடன்தான் நான் இங்கே வந்திருக்கிறேன். இப்பொழுதே புறப்படுங்கள். தப்பி ஓடி விடலாம்" என்றான் தீரன்.

"ஐயோ! வேண்டாம். இந்த மந்திரவாதியிடமிருந்து யாரும் தப்ப முடியாது. நான் படும் கஷ்டம் போதாதா? என்னால் நீங்களும் உயிரை இழக்க வேண்டுமா? இப்பொழுதே இங்கிருந்து போய் விடுங்கள்" என்றாள் அரசகுமாரி அமராவதி.

"இளவரசி! கவலை வேண்டாம். மந்திரவாதி இப்பொழுது இங்கே இல்லை. நாம் தப்பிப் போக இதுதான் தக்க தருணம்" என்றான் தீரன்.

"நாம் எங்கு மறைந்தாலும், ஏழு கடலுக்கப்பால் தாண்டிப் போனாலும் கூட மந்திரவாதி கண்டு பிடித்து விடுவான். அவனிடம் மிகவும் சக்தி வாய்ந்த அதிசயப் பெட்டி ஒன்று இருக்கிறது. அதன் உதவியால் நாம் எங்கிருந்தாலும் நம்மை அவன் தன் மாளிகைக்கு அழைத்து வந்து விடலாம். பிறகு நம் உயிர் இந்த உலகத்தில் நிற்காது" என்றாள் அமராவதி.

"அப்படியா? எப்படியும் நான் உங்களை தப்புவிக்க விரும்புகிறேன். அதற்கு ஏதாவது வழி உங்களுக்குப் புலப்படுகிறதா?" என்று ஆவலுடன் கேட்டான் தீரன்.

"ஆம்! ஒரே ஒரு வழியுண்டு. அந்த அதிசயப் பெட்டி எப்படியாவது நம் கைக்குக் கிடைக்குமானால் நாம் இங்கிருந்து எளிதில் தப்பி விடலாம். அப்புறம் மந்திரவாதியினால் நம்மை ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் அது பிராணனுக்கே பேராபத்தாக முடியுமே!" என்றாள் அரசகுமாரி.

"அதைக் கைப்பற்றுவதற்கு எத்தனை பெரும் கஷ்டங்கள் அனுபவிக்க நேரிட்டாலும் சரி, நான் அனுபவிக்கத் தயார்" என்றான் தீரன்.

"அது உங்களால் இயலாத காரியம். இம்மாளிகையின் அடியில் இன்னொரு பாதாளக் குகை இருக்கிறது. அதன் வழியாகப் போனால் ஒரு சுரங்கம் தென்படும். அங்கே சிங்கங்களும், பாம்புகளும், கொடிய விஷ ஜந்துக்களும் வாயைத் திறந்துகொண்டு கோரப் பசியுடன் காத்துக் கொண்டிருக்கின்றன. அவற்றின் கையில் அகப்பட்டு விட்டால் அவ்வளவுதான்! ஆனால் மந்திரவாதியின் மந்திரக்கோல் கையில் இருந்தால் அவை ஒன்றும் செய்யாது. அதைத் தாண்டிப் போனால் ஒரு முதலை வாயைத் திறந்து கொண்டிருக்கும். அதன் வாயில்தான் அந்த அதிசயப் பெட்டியிருக்கிறது. அதன் வாயில் கையை விட்டுப் பெட்டியை எடுக்கப் போனால் அது கையை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொள்ளும். அதன் தலையில் மந்திரக் கோலினால் ஓங்கித் தட்டினால் அது பெட்டியைக் கீழே போட்டு விடும். பிறகு அந்தப் பெட்டியை எடுத்துக் கொண்டு அந்தக் கொடிய மிருகங்களிடமிருந்து தப்பி வரவேண்டும். இது நடக்கக் கூடிய காரியமா? உங்களால் முடியாது. பேசாமல் திரும்பிப் போய் விடுங்கள்" என்றாள் அமராவதி.

"இளவரசி! எப்பாடு பட்டேனும் நாளைக்குள் அந்தப் பெட்டியைக் கைப்பற்றிக் கொண்டு வந்து விடுகிறேன். பிறகு நாம் தப்பிப் போகலாமல்லவா?" என்று கேட்டான் தீரன்.

இளவரசி அவனைப் பார்த்து, "மந்திரவாதியிடம் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுங்கள். போகும் பொழுது இந்த அறையைப் பழையபடி



பூட்டியிருப்பது போல் செய்து விட்டுப் போங்கள். மந்திரவாதிக்கு நீங்கள் வந்திருப்பது தெரிந்தால் உங்களுக்கும் கஷ்டம், எனக்கும் கஷ்டம்" என்றாள். அவ்வாறு கூறியதும் அவள் கண்கள் நீரைப் பெருக்கின. தீரன் அவளைச் சமாதானப் படுத்திவிட்டு அங்கிருந்து வெளியேறினான். வாசற்படிக்கு வந்ததும் பூட்டை முன்பிருந்தபடி வைத்துவிட்டு விசைப்பலகை இருந்த இடத்திற்குச் சென்றான். அரசகுமாரி அமராவதி அந்த வாலிபன் போன திக்கையே பார்த்தவாறு நின்றாள். தீரன் ஏறி உட்கார்ந்ததும் விசைப் பலகை மேலே சென்றது.

தீரன், முன்பிருந்த இடத்துக்கு வந்ததும் மந்திரவாதியின் கண்ணில் அகப்படாமலிருக்க வேண்டுமே என்பதற்காக மாளிகையை விட்டு வெளியேறிப் பக்கத்திலிருந்த காட்டில் போய் ஒளிந்துகொண்டான். ஆயினும் மந்திரவாதியின் மாளிகையில் அவனுக்கு ஒரு கண் இருந்தது.

பகல் பொழுது போய் மாலை வேளை வந்தது. மந்திரவாதி எங்கெல்லாமோ சுற்றிவிட்டு விளக்கு வைக்கும் நேரத்துக்குத்தான் தன் மாளிகைக்குள் நுழைந்தான். தூரத்திலிருந்த தீரன் மந்திரவாதி மாளிகைக்குள் நுழைவதைப் பார்த்தான்.

நன்றாக இருட்டியதும் தீரன் மாளிகையில் உள்ள தோட்டத்துக்கு வந்து சேர்ந்தான். ஒரு மரத்தின் மேல் ஏறி மறைந்து கொண்டு, மந்திரவாதியின் மாளிகையில் என்ன நடக்கிறது என்பதைப் பார்க்கலானான். அங்கிருந்து பார்த்தால் மாளிகையில் நடப்பதெல்லாம் நன்றாகத் தெரிந்தது.

மந்திரவாதி பல தட்டுகளில் உணவு எடுத்து வைத்துக் கொண்டு அருந்தினான். அதற்குப் பிறகு ஏதோ ஒரு பொருளைக் கையில் வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான். பக்கத்திலுள்ள மேஜையில் அவனுடைய மந்திரக்கோல் கிடந்தது. தீரன் நடுநிசியை வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்குத் தூக்கம் வந்தால் தானே? காரியத்தில் கண்ணாயிருக்கும் பொழுது தூக்கத்தில் கண் செல்லுமா? அரசகுமாரி அமராவதியை எப்படியாவது காப்பாற்றிவிட வேண்டும் என்று ஒரே சிந்தனை தான் அவனுடைய உள்ளத்தில் குடிகொண்டிருந்தது.

நடுநிசி. மந்திரவாதி தனது மாளிகையில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான். தீரன் மெதுவாக அடிமேல் அடி வைத்து மந்திரவாதியின் மாளிகைக்குள் நுழைந்தான். ஓசைப்படாமல் மந்திரக்கோல் வைத்திருந்த மேஜையை நெருங்கினான். அடுத்த நிமிஷம் அந்த மந்திரக்கோலை எடுத்துக் கொண்டு பூனைபோல் வெளியேறினான். அதற்குப் பின் அவன் எங்கும் ஒரு கணம்கூடத் தாமதிக்கவில்லை. அரசகுமாரி கூறியபடி குரங்கு வாயிலை அடைந்தான். கொடிய ஜந்துக்கள் வாயைத் திறந்து கொண்டு நின்றன. ஆனால் தீரனை அவை ஒன்றும் செய்யவில்லை. அவனிடம் தான் மந்திரக் கோல் இருந்ததே! அந்தக் கொடிய விஷ ஜந்துக்களால் அவனை என்ன செய்துவிட முடியும்? கடைசியில் முதலையின் அருகில் வந்து அதன் வாயில் கையை விட்டான். முதலை சட்டென்று வாயை மூடிக் கொண்டது. அரசகுமாரிதான் அவனுக்கு முன்பே யோசனை சொல்லிக் கொடுத்திருந்தாளே! ஆகவே, அவன் முதலையின் தலையில் பட்டென்று தன்



கையிலிருந்த மந்திரக் கோலினால் ஓங்கி ஒரு தட்டுத் தட்டினான்.

அதே சமயம் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்த மந்திரவாதிக்குத் தன் தலையில் யாரோ ஓங்கி அடிப்பது போலத் தோன்றித் திடுக்கிட்டு விழித்தான். பக்கத்தில் மந்திரக்கோல் இல்லாமற் போகவே, ஏதோ மோசம் நடந்து விட்டது என்று எண்ணி 'விடுவிடு' என்று பாதாள அறைக்கு ஓடினான். அதற்குள் தீரன் தன் கையில் அதிசயப் பெட்டியை எடுத்துக் கொண்டு விட்டான். மந்திர வாதியைக் கண்டதும் தீரன் முதலில் திடுக்கிட்டான். ஆனால் அடுத்த கணமே அவனுக்கு அதிசயப் பெட்டி தன் கையிலிருப்பது ஞாபகத்துக்கு வந்தது. உடனே அவன் மந்திரவாதியைப் பார்த்து, "நீ கல்லாகப் போகக் கடவது" என்று சபித்தான். தீரன் கையிலிருந்தது மிகுந்த சக்தி வாய்ந்த அதிசயப் பெட்டியல்லவா? அவன் சொன்னபடியே மந்திரவாதி கல்லாக மாறிவிட்டான். அவனுக்கு வரவிருந்த அபாயம் கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் நீங்கியது. (தொடரும்)

# சிங்கம் பிழைத்தது!

"நம்முடைய படிப்புத்தான் முடிந்து விட்டதே! பிழைக்க வழி தேட வேண்டாமா?" என்றான் ஒருவன்.

"ஆமாம், நாம்தான் மந்திர வித்தைகளில் பல கற்றுக் கொண்டு விட்டோமே! அரசனிடத்தில் சென்று பொருள் ஈட்டலாமே!" என்று இன்னொருவன் ஆமோதித்தான்.

"நம் மூவருக்கும்தானே மந்திர வித்தை தெரியும்? இந்த அசட்டுச் சுப்பனை நாம் கூட அழைத்துக் கொண்டு போய் எதற்காக நமக்குக் கிடைப்பதில் இவனுக்கும் ஒரு பங்கு கொடுக்க வேண்டும்?" என்று ஆட்சேபித்தான் மூன்றாமவன்.

"அப்படிச் சொல்லாதே! இவன் மந்திர வித்தைகளிலும் கல்வி கேள்விகளிலும் மக்காயிருந்தாலும், உலக அநுபவம் அதிகம் பெற்றவன். ஆகவே, இவனும் கூட இருப்பது நல்லதுதான்!" என்றான் முதலாமவன்.

அவன் சொன்னது அவர்களுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. இருந்தாலும் இவ்வளவு நாட்கள் தங்களுடன் இருந்திருக்கிறானே என்ற ஒரு காரணத்துக்காகவே அவனைத் தங்களுடன் அழைத்துச் சென்றனர்.

நடு வழியிலே ஒரு காடு இருந்தது. அங்கே ஒரு மிருகத்தின் எலும்புகள் சிதறிக் கிடந்தன. அதைப் பார்த்து ஒருவன், "என் மந்திர சக்தியினால் இம் மிருகத்தின் எலும்புகளை ஒன்று கூட்டிவிட முடியும்" என்றான் ஒருவன்.



இன்னொருவன், "நான் இதற்குத் தசை, தோல், இரத்தம் முதலியவை உண்டுபண்ண முடியும்" என்றான்.

மூன்றாமவன், "இதற்கு என்னால் உயிரையே கொடுத்துவிட முடியும்" என்றான்.

ஆனால் அதைக் கண்டு உலக அநுபவம் வாய்ந்த வாலிபன் மட்டும், "இது சிங்கத்தின் எலும்புகள் அல்லவா? சிங்கத்துக்கு உயிர் ஊட்டுவதாவது? சிங்கம் துஷ்ட மிருகம் ஆயிற்றே! நம்மைக் கொன்று போட்டு விட்டால்...? ஆகவே, அந்த வேலை மட்டும் வேண்டாம்!" என்றான்.

ஆனால் எவ்வளவு சொல்லியும் அம்மூவரும், அவன் வார்த்தையைக் கேட்கவில்லை. சிங்கத்துக்கு உயிர் ஊட்டியே தீருவது என்று முடிவு செய்தனர்.

அதைக் கண்ட நான்காவது வாலிபன், 'தன் சொல் பயன்படாமற் போய் விட்டதே!' என்ற வருத்தத்துடன் பக்கத்திலிருந்த மரத்தின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டான்.

மூவரின் மந்திர சக்தியால் உயிர் பெற்ற சிங்கம், தனக்கு உயிர் கொடுத்த அந்த மூவரையும் ஒரே அறையில் அடித்துக் கொன்று விட்டது!

சிங்கம் அவ்விடத்தை விட்டு அகன்றதும், 'வெறும் பள்ளிப் படிப்பு மட்டும் போதாது. உலக அநுபவம்தான் மிகவும் முக்கியமானது!' என்று முணுமுணுத்துக் கொண்டே, மரத்திலிருந்து இறங்கிச் சென்றான் அவ் வாலிபன்.



ஆசிரியர் : சுதர்சன்

# காதல்

மொழிபெயர்ப்பு : ரா. வீ

## 13. போர் மூண்டது

அந்தப் பாழும் இரவு பருனுக்கு நமனுகத்தான் இருந்தது. அவன் மனதுக்குக் கொஞ்சங்கூட நிம்மதியில்லை. ஆகுலமும் வியாகுலமும் அவனுடைய உள்ளத்தைப் போட்டு வாட்டின. அவன் சாய்வு நாற்காலியில் சாய்ந்து பார்த்தான்; பஞ்சணை மெத்தையில் படுத்துப் புரண்டு பார்த்தான். எதிலும் அவனுக்கு இருப்புக் கொள்ளவேயில்லை. கடைசியில் எழுந்து மாளிகையின் முற்றத்திலே இங்கும் அங்கும் உலாவலானன். அந்த நீள் இரவைக் கழிக்க அவன் பட்ட பாட்டைச் சொல்லி முடியாது. அப்பொழுது அவனுடைய முகம் மிகவும் வாட்ட முற்றிருந்தது. அவனுடைய கண்கள் களை யிழந்து நம்பிக்கை யிழந்து காணப்பட்டன. அவனுடைய முகம் போயிருந்த போக்கைப் பார்த்தால், உலகத்தின் மாபெரும் பேராபத்தும் பேரிடியும் ஒருங்கே சேர்ந்து அவன் தலையிலேயே விழுந்துவிட்டது போலத் தோன்றியது. அவனுடைய அந்தப் பரிதாப நிலையைக் கண்டால் யாருமே அவன் மீது பரிதாபப் படுவார்கள்; அவன் நிலையைக் கண்டு இரங்குவார்கள் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஆனல் அப்பொழுது அவனுடைய அந்தப் பரிதாப நிலையைக் காண, வான வீதியிலே பவனி வந்து கொண்டிருந்த தாரகைகளைத் தவிர வேறு யாருமே இல்லை. அந்தத் தாரகைகளும்கூட அப்பொழுது தூங்கி வழிந்து கொண்டிருந்தன.

எப்படியோ இரவு கழிந்தது; பொழுது புலர்ந்தது. இராக் கண் விழித்ததனல் பருனின் கண்கள் கோவைப் பழம் போலச் செக்கச் சிவந்திருந்தன; களைப்பு மிகுதியினல் சோர்வு தட்டிப் போயிருந்தன. ஆனல் அவன் தன்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட அந்தத் தோல்வியை யாரிடமும் வெளிக் காட்டிக் கொள்ளவேயில்லை. தோல்வியை வெளிக் காட்டிக் கொண்டு விட்டால் பருனை அப்புறம் பருன் என்று சொல்ல முடியுமா?

அவனுடைய ஏழு வகைப் படைகளும் அணி வகுத்து நீக்ரோவர்களின் சுல்தானை ஷம்லார்க்கின் படையை எதிர்த்துப் போர் புரியப் புறப்பட்டன. அப்பொழுது அவன் தன் படைவீரர்களுக்குக் கூறிய உற்சாகமும் ஊக்கமும் ஊட்டக்கூடிய வார்த்தைகளைக் கேட்டபின், யாராலுமே அவனுடைய மனதிலும் ஏதோ கவலை குடிகொண்டிருக்கிறது என்று சந்தேகிக்க முடியவில்லை.

ஒரு வேடன் புரு ஒன்றைக் குறிவைத்து அம்பு எய்கிருன் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவன் எய்த அம்பு புருமீது தைத்து. அது தைத்த காயத்திலிருந்து இரத்தம் பெருக் கெடுத்து ஓடும்பொழுது புரு என்ன செய்கிறது? தன் இறக்கைகளைச் சரி செய்து கொண்டு உதிரப் பெருக்கு எடுத்து ஓடி உயிரையே உறிஞ்சும் அந்தக் காயத்தைத் தன்னல் இயன்ற அளவு மூடி மறைத்துக் கொள்ளப் பார்க்கிறது அல்லவா? அது அப்படி மறைத்துக்கொள்ள முயலுவதனல் பெருக்கு எடுத்து ஓடும் இரத்தம் நின்று விடப் போகிறதா? அல்லது அந்தக் காயத்தின் வலிதான் குறைந்துவிடப்போகிறதா?

கடைசியில் பருன் யுத்தத்துக்குப் புறப்பட வேண்டிய நேரம் வந்துவிட்டது. அவன் அவநம்பிக்கை தவழும் தன் கண்களால் ஒரு தடவை மயூர மாளிகையைப் பார்த்தான். அங்கேதானே அவனுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்ட எழிலரசி குடிகொண்டிருந்தாள்? அங்கேதானே உலகத்துக்கே ஒளிப் பிழம்பெனத் திகழும் சுடர் ஒளிர்ந்து கொண்டிருந்தது? அங்கேதானே அவனுடைய ஆத்மாவின் அமரஜோதி வீற்றிருந்தது? அந்த மாளிகையைப் பார்த்து அவன் ஒரு நீண்ட பெரு

மூச்சு விட்டான். பிறகு ஒரே தாவாகத் தாவித் தனக்காகத் தயாராக நின்று கொண்டிருந்த யுத்த ரதத்தின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டான்.

அவன் உட்கார்ந்ததுதான் தாமதம்; குதிரைகளின் முதுகில் 'சுளீர், சுளீர்' என்று சவுக்கடி விழுந்தது. குதிரைகள் தம் கால்களின் பலம் அனைத்தையும் ஒன்று சேர்த்துக் கொண்டு கனவேகமாக ஓடின. அவை தரையில் கால் வைக்கும் சுவடே தெரியவில்லை. கால்களைத் தரையில் வைப்பது போன்ற பிரமை உண்டாயிற்றே தவிர அவற்றின் கால்கள் தரையில் பாவவே இல்லை. அவை போன வேகத்தில், ஆறு குளங்களையும் தண்ணீரில் தம் கால்களை நனைக்காமல் தரை போலவே கடந்து விடுமோ என்று எண்ணத் தோன்றியது. பருனின் குதிரைகளைப் பற்றிக் கேட்க வேண்டுமா? பருனிடம் இருக்கும் கம்பீரமும் மிடுக்கும் அவற்றுக்கும் இருப்பது இயல்புதானே? ரதம் சென்ற வேகத்தில் அதன் சக்கரங்கள் 'கற கற' வென்று வீதிக் கற்களை நெறித்துத் தவிடு பொடியாக்கியதோடு மட்டும் அல்ல; மிகவும் பயங்கரமான சத்தத்தை வேறு உண்டுபண்ணி மக்களைப் பீதியுறச் செய்தன. ரதத்தின் சத்தத்திலிருந்தே வெகு தொலைவில் உள்ள ஜனங்கள் கூட, பருன் அம்னஸ் எதிரியுடன் போர் புரியப் போய்க் கொண்டிருக்கிறான் என்பதை எளிதில் புரிந்து கொண்டனர்.

ஆனால் யுத்தம் ஆரம்பமாகி எட்டு நாட்கள் ஆகியும்கூட யுத்தம் பற்றி ஒரு முடிவும் தெரியவில்லை. பொழுது புலர்ந்ததும் போர் துவங்கும். பகல் முழுவதும் இரு தரப்பு வீரர்களும் பலத்த போர் புரிவர். பொழுது சாய்ந்ததும் போரில் மடிந்தவர்கள் போக எஞ்சியிருப்பவர்கள் தங்கள் கூடாரத்துக்குச் சென்று விடுவர். இதே மாதிரி அந்த எட்டு நாட்களும் கடும் போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு வீரனும், தான் எமன் வாயில் இருப்பதாகவே கருதிக் கடும்போர் புரிந்து வந்தான். காலையில் யுத்தத்துக்குப் புறப்படும் பொழுது, 'மாலை நாம் யுத்தத்திலிருந்து உயிருடன் திரும்பி வருவோமா, அல்லது யுத்தகளத்திலேயே மடிந்து மீளாத் தூக்கம் தூங்கத் தொடங்கி விடுவோமா?' என்று எவனுமே உறுதியாகச் சொல்ல முடிவதில்லை. போருக்குப் போனவன் திரும்பி வந்தால் தானே நிச்சயம்! இருந்தாலும் அவர்களில் யாரும் தங்கள் உயிரை ஒரு பொருட்டாகக் கருதியதில்லை. அது தனிப்பட்ட நபர்கள், 'தாங்கள் வாழ்வதா, சாவதா?' என்று செய்யும் பிரச்னையா? இல்லையே! இரு நாடுகளிடையே தன் மானத்தை—தன் கௌரவத்தை — காத்துக் கொள்வதற்காகவும் தன் புஜ பல பராக்கிரமத்தை — தன் வெற்றி தோல்வியை— நிர்ணயம் செய்து கொள்வதற்காகவும் நிகழும் பெரும்போர் அல்லவா அது? வெறும் அல்ப-சொல்பமான சாதாரணப் பிரச்னை அல்லவே! ஆகவே போர் வீரர்கள் போர் புரிந்தனர்; பாதுஷாக்கள் போர் புரிந்தனர். வாளும் வேலும் போர் புரிந்தன. கத்தியும் கேடயமும் போர் புரிந்தன. இவ்விதம் எட்டு நாட்கள் மும்முரமாகப் போர் நடந்தது. ஆனால் ஒரு முடிவு ஏற்பட்டால்தானே?

ஒன்பதாம் நாள் கொம்பு ஊதியதும் யுத்தம் துவங்கியது. யுத்தம் ஆரம்பமான சிறிது நேரத்துக்கெல்லாம் நீக்ரோவர்களின் சுல்தானை ஷம்லார்க்கின் ஆசாமி ஒருவன் முன்னே வந்து, மிகவும் உரத்த குரலில், "எல்லோரும் கேளுங்கள்! சகலருக்கும் இதன் மூலம் அறிவிப்பது யாதெனில், எங்கள் சுல்தான் எகிப்து நாட்டுடன் போர் புரியவில்லை; போர்புரியவும் விரும்பவில்லை. எகிப்து நாட்டு மக்களுடன் சுல்தானுக்கு எந்த விதமான விரோதமோ வெறுப்போ இடையாது. இரு நாட்டினருக்கும் இடையே இவ்வளவு பெருப்போர் மூண்டு இரத்தம் சிந்துவதற்




"அடடே! வாருங்கள், வாருங்கள்! ஏது, உங்களைப் பார்க்கிறது கார்த்திகைப் பிறையைக் காண்பதுபோல அல்லவா இருக்கிறது!"

குக் காரணம் கேவலம் ஒரு அடிமைப் பெண். அவளை எங்களிடம் ஒப்படைத்து விடுங்கள்! இப்பொழுதே நாங்கள் இந்த யுத்தத்தை நிறுத்திவிடத் தயாராயிருக்கிறோம். என் விருப்பம், எங்கள் நாட்டின் விருப்பம், எங்கள் சுல்தானின் விருப்பம் எல்லாம் இது ஒன்றேதான். எங்கள் விருப்பத்தைப் பூர்த்திசெய்வதாயிருந்தால் இந்தப் பெரும் போர் நிகழவேண்டிய அவசியமே இராது!" என்று அறிவித்தான்.

பருன் தன் குதிரையின் இரு முன்னங் கால்களையும் அந்தரத்தில் நிறுத்தி அதி கம்பீரமான குரலில் வெகு அலட்சியமாகப் பதில் சொன்னான்:

"பருன் அம்னஸ் இந்த வேண்டுகோளைத் தன் ஆட்சிக் காலத்திலே தனக்கு ஏற்பட்ட மாபெரும் அவமானமாகக் கருதுகிறான். கல்வியறிவும் கலாசாரமும் ஒருங்கே யற்ற நீக்ரோவர்களின் தலைவனுடைய இந்த அசட்டுத் துணிச்சல் அவனுக்கு அதிக ஆச்சரியத்தை விளைவிக்கிறது. நேற்றுவரை பருன் வீசி விட்டெறிந்த எச்சில் துண்டுகளைத் தின்று திருப்தியுடன் உயிர் வாழ்ந்து வந்தவன், இன்று தன் பெண்ணைப் பருன் கல்யாணம் செய்து கொள்ளவில்லை என்பதற்காகக் கோபித்துக் கொண்டு போருக்குப் புறப்பட்டு விட்டான் என்பதைக் கேட்க விந்தையிலும் விந்தையாக அல்லவா இருக்கிறது! ஆனால் அவனுடைய பெண்ணை அப்ஸரஸ் போன்ற அந்த அழகியின் எதிரே—எந்த அழகியை இன்று வரை அவன் அடிமைப் பெண் என்று எண்ணி ஏகத்தாளம் செய்து வந்திருக்கிறானோ, அப்படிப்பட்ட அந்த அழகியின் எதிரே- நிறுத்தி வைத்தால் வானுலகத்தில் வாழும் வானவர்கள் கூட வானுலகத்தின் மீது ஆணை வைத்துத் தியூனலைப் போன்ற பேரழகி வானுலகத்தில் கிடைப்பது கூடக் கடினம் என்று சிறிதும் யோசிக்காமல் சட்டென்று பதில் சொல்லிவிடுவார்கள். அழகிற் சிறந்த தியூனலை அந்த நீக்ரோக்காரிக்கு எதிரே நிறுத்தி வைப்பது என்பது ஸௌந்தர்ய லோகத்தையே அவமதிப்பதாகும். ஸௌந்தர்ய லோகத்துக்கே மாபெரும் அநீதி இழைப்பதாக ஆகும். நான் இந்த அநீதி இழைக்கச் சிறிதும் சம்மதியேன். என் நாடும் சம்மதிக்காது" என்றான்.

இந்தப் பதிலைக் கேட்டதும் இருதரப்பு வீரர்களும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். அதே சமயம் சற்றும் எதிர்பாராத விதமாக ஷம்லார் தன்னுடைய குதிரையைத் தட்டி முன்னே கொண்டு வந்து நிறுத்தினான். பிறகு தன் வேலை வானவெளியிலே நீட்டிப் பிடித்து, "அதற்காக எவ்விதக்குற்றமும் செய்யாத நம் படைகளை வெட்டிச் சாய்ப்பதனால் என்ன பலன்? வா, நீயும் நானும் தனியே எதிர்த்து நின்று போரிட்டு ஒரு முடிவுக்கு வருவோம். எனக்கும் உனக்கும்தானே சண்டையும் விரோதமும்? அப்படி யிருக்கும்பொழுது நாம் பிறருக்குத் தீங்கு விளைவிக்க முற்படுவானேன்? யாருக்கும் யாருக்கும் சண்டையோ, அவர்களே சண்டை போடுவதுதானே உத்தமம்? அதுதானே தர்மமும் நியாயமும் ஆகும்?" என்று கர்ஜித்தான்.

பருன் மகாவீரன் அல்லவா? ஆகவே, அவன் வாய்திறந்து பதில் பேசவில்லை. ஆனால் தன் குதிரையின் அடிவயிற்றைத் தன் குதிகாலால் தொட்டான். குதிரை கொம்மாளம் அடித்துக்கொண்டு கன வேகமாக முன்னேறியது. பருன் தன் படையைப் பின் தங்கி நிற்குமாறு சமிக்ஞை செய்தான். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள் படை பின் நகர்ந்து அணிவகுத்து நின்று விட்டது. ஷம்லார்க்கும் முன்னேறி வந்தான். அப்பொழுது அவ்விருவருடைய கண்களிலும் கோபாக்கினி கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. நாசித் துவாரங்கள் வழியே நெருப்புக் காற்று வந்து கொண்டிருந்தது. அப்பொழுது அவ்விருவருடைய நிலைமையும் கடும் சினங் கொண்ட கருநாகங்களின் நிலைமையை ஒத்திருந்தது. இருவரும் ஒருவரையொருவர் பார்த்துச் சீறிப் பொருமிக் கொண்டிருந்தனர். இரு நாடுகளின் வீரப் படையினரும் பக்கத்தில் நின்று இரு அரசர்களுக்கும் இடையே நிகழும் போரைப் பார்த்துக் கொண்டிருந்தனர்; வாய் திறவாமல் வெற்றி தோல்வியை எதிர் பார்த்துக் கொண்டிருந்தனர். அந்தக் காட்சி அன்றும் இன்றும் என்றும் காணாத கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பாதுஷாக்கள் இருவரும் போர் புரிந்து கொண்டிருந்தனர். படை வீரர்கள் அனைவரும் பார்த்துக் கொண்டு நின்றனர். இன்று அந்த வீரச் சம்பவங்கள் எல்லாம் பழையதாகிப் பழம் பெரும் கதைகளாகி விட்டன. அவற்றைச் சிலர் நம்புகிறார்கள்; சிலர் நம்ப மறுக்கிறார்கள். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அந்தக் காலத்தில் வீரம் என்பது வெறும் கட்டுக் கதையாகவோ, எட்டாக் கனியாகவோ இல்லை. பாதுஷாக்களின் இரத்தம் இவ்வளவு விலை உயர்ந்ததாக - கிட்டாப் பொருளாக - கிராக்கியாக ஆகவில்லை. இதை மட்டும் யாராலும் எந்தக் காலத்திலும் மறுக்க முடியாது; ஆம், மறுக்க முடியவே முடியாது.

உச்சி வேளை வந்தது. கதிரவனும் தலைக்கு நேரே வந்து கனலைக் கக்கத்

தொடங்கி விட்டான். பருனுக்கும் ஷம்லார்க்குக்கும் இடையே நிகழ்ந்து கொண்டிருந்த பயங்கரப் போரின் கோரக் காட்சியைக் கண்டுதான் கதிரவன் கன கடுமையாகக் கனலைக் கக்கித் தாக்கிக்கொண்டிருந்தானோ, என்னவோ? காணும் காட்சியிலே லயித்து மெய்ம் மறந்து உணர்ச்சி வசப்படுவது என்பது யாருக்குமே இயல்புதானே? அப்படியிருக்கும் பொழுது கதிரவனும் கனலைக் கக்கத் தொடங்கியதில் ஆச்சரியம் என்ன?

பருன் தன் கையில் இருந்த கேடயத்தையும் ஈட்டியையும் கீழே விட்டெறிந்து விட்டான். அடுத்த கணம் அவசர அவசரமாகத் தன் குதிரையை ஷம்லார்க்கின் குதிரைக்கு வெகு சமீபத்தில் கொண்டு போய் நிறுத்திக் கொண்டான். கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள்ளாக, மின்னல் வேகத்தில் பாய்ந்து ஷம்லார்க்கின் இடுப்புப் பட்டையைப் பிடித்து 'அல'க்காக ஆகாயத்தில் தூக்கி அந்தரத்தில் நிறுத்தி விட்டான். ஒரு பக்கத்திலே சந்தோஷ ஆரவாரம்; இன்னொரு பக்கத்திலே பயங்கரக் கூக்குரல். ஒரு பக்கத்திலே மகிழ்ச்சி வெறி; இன்னொரு பக்கத்திலே அச்சத்தின் ஓலம். ஒரு புறத்திலே வெற்றிக்கு அறிகுறி; மற்றொரு புறத்திலே தோல்வி யேற்பட்டு விடுமோ என்ற பீதி. இப்படியாக இரு வர்ணப் புடவைபோல இருதருப்பினருடைய முக பாவமும் மாறி மாறிக் காட்சி அளித்தது. பருன் சிறிது நேரம் வரை எதிரியைத் தன் கைகளிலேயே தூக்கிப் பிடித்துக் கொண்டிருந்தான். அதற்குப் பின் தன் பலம் கொண்ட மட்டில் வேகமாக ஓங்கி அவனைத் தரையில் அடித்து விட்டான். ஷம்லார்க் குப்புறங் கரணமாகத் தரையில் விழுந்து துடித்தான். அப்பொழுது பருன் மட்டும் மனம் வைத்திருந்தால், அவனை அங்கேயே கொன்று போட்டிருக்கலாம். ஆனால் பருன் அப்படிச் செய்யவில்லை. 'உயிருடன் பிழைத்துப் போகட்டும்! போனால் போகிறது!' என்று அவனை விட்டு விட்டான்.

ஷம்லார்க்கின் நீக்ரோப்படை தன் வாக்குறுதியை மறந்து மீறிப் பருன்மீது பாய்ந்து விட்டது. ஆனால் அதற்கெல்லாம் பருன் சிறிதும் துணிவு இழக்கவில்லை. அவன் கொதித்தெழுந்து அஞ்சா நெஞ்சம் வாய்ந்த தன் சிங்கக் குதிரையை அந்தப் படையின்மீது ஏவிவிட்டான். குதிரை கண்மூடித்தனமாக அவர்களை மிதித்துத் துவம்ஸப்படுத்தத் தொடங்கி விட்டது. தலை தப்பினால் போதும் என்று அங்கிருந்து அனைவரும் ஓடி ஒளியத் தொடங்கினர். பருன் தன் வீரவாளை ஏந்தி எட்டுத் திசையிலும் வீசத் தொடங்கினான். எதிரே வந்தவர்களின் தலைகள் ஒன்று தரையில் உருள வேண்டும் அல்லது ஓடி ஒளிந்து அவர்கள் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள முயல வேண்டும். எதிரியின் சேனையைப் பருன் அந்த அரைக்கண நேரத்துக்குள்ளே அப்படிக் கதிகலங்க அடித்துவிட்டான். ஆயினும் அவன் ஒருவனால் அவ்வளவு பெரிய படைக்கெதிரே எப்படி எதிர்த்து நிற்க முடியும்? பருவின் போர்வீரர்கள் எதிரிகளின் இந்தக் கபடச் செய்கையைக் கண்டு பிரமித்தனர். அவர்கள் தங்களுடைய பாதுஷாவின் உதவிக்காக ஓடி வருவதற்குள்ளாகவே, பருன் ஒரு நீக்ரோ சிப்பாயின் கத்திக் குத்துக்கு இலக்காகிக் காயமுற்று விட்டான். பருனின் குதிரை தனது விலங்கின் அறிவைக் கொண்டு உண்மை நிலையை ஒருவாறு ஊகித்து உணர்ந்து கொண்டு விட்டது. அடுத்த கணம் தன் எஜமானனைத் தூக்கிக் கொண்டு யுத்த களத்திலிருந்து சிட்டாகப் பறந்து விட்டது. அது யாருடைய கையிலும் அகப்படவில்லை. அதுபோன வேகத்தைக் கண்டு அனைவரும் அசந்து விட்டனர்.

சிறிது நேரத்துக்கெல்லாம் பருனின் மூர்ச்சை யுற்றிருந்த உடல், வெகு தொலைவுக்கப்பால் நீல நதிக் கரையிலே கிடந்தது. ஆனால் அந்த நிலைமையிலும் கூட எஜமான விசுவாசமுள்ள அந்தக் குதிரை தன் வாலினால் விசிறிக்கொண்டே, 'பருன் எப்பொழுது எழுந்திருப்பான்?' என்று ஆவலுடன் எதிர்பார்த்தவண்ணம் நின்று கொண்டிருந்தது.

அங்கே ஷம்லார்க்குக்கோ உடல் முழுவதும் கணுவுக்குக் கணு இசிவாக வலித்துக் கொண்டிருந்தது. ஆயினும் அவன் அடுத்த கணமே பல்லைக் கடித்துக் கொண்டு எழுந்திருந்து, தன் குதிரையின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டான். இருதரப்பினருக்கும் இடையே மறுபடியும் பயங்கரப் போர் மூண்டது. ஆனால் எகிப்து நாட்டுப் போர் வீரர்கள் தலைமை தாங்கப் பருன் இல்லாமற் போகவே, மனம் முறிந்து போயிருந்தனர். அவர்களுடைய துணிச்சலும் தைரியமும் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டன. அவர்களுடைய புஜபல பராக்கிரமம் அனைத்தும் சிதறித் துகள் துகளாகி விட்டன. இரவின் இருள் வந்து கவிந்து இருதரப்பினருக்கும் இடையே நடந்து கொண்டிருந்த போரை நிறுத்துவதற்கு முன்பாகவே, எகிப்து நாட்டு வீரர்கள் யுத்த களத்திலிருந்து ஒரே ஓட்டமாக ஓடி வந்து விட்டனர். கோட்டைக்குள் நுழைந்ததும் முதற்காரியமாகக் கோட்டைக் கதவைத் தாளிட்டுத் தற்காப்புக்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டனர். (தொடரும்)



# மடையான்

மா. கிருஷ்ணன்

ஆற்றங்கரையிலும் குளத்தோரமாகவும் கால்வாய்களிலும் சிறு குட்டைகளிலும் மடையானைச் சாதாரணமாகக் காணலாம். மேலெல்லாம் சேறு படிந்து கழுத்துக் குறுகிய வெண் கொக்கைப் போலிருக்கும். இந்தப் பறவையைத் தண்ணீர் தேங்கிநிற்கும் எல்லா இடங்களிலும் பார்க்கலாம். கொக்கின் குலத்தைச் சேர்ந்த பறவைகள் தங்கள் இனத்தை நாடி மந்தையாகக் கூடியிருப்பது சகஜம்.—இந்த சகவாசப்பிரியம் நாள் முழுதும் மடையானுக்குக்கிடையாது. ஒரே கரையில் ஏழெட்டு மடையான்களிருந்தபோதிலும் அவைகள் தனித்தே இரை தேடும். ஆனால் இருட்டியதும் அவைகளுக்குத் தனிமையில் ஆசை குன்றி, பல நீர்த் துறைகளிலிருந்தும் மடையான்கள் சிறு கூட்டங்களாகக் கூடி ஓர் ஏரிக்கரையிலோ மற்ற நீர்நிலையையடுத்த இடத்திலோ உள்ள பெரு மரங்களை நோக்கிச் செல்லும். ஓரிடத்திலுள்ள மடையான்களனைத்தும் தினமும் பொழுது சாய்ந்தவுடன் இப்படிக் கூடித் தங்கள் அடை மரங்களில் நூற்றுக் கணக்காக வந்து தங்கும். இரவெல்லாம் ஒன்று சேர்ந்திருந்து தூங்கி, பிறகு பொழுது விடிந்ததும் சிறு கூட்டங்களாகப் பிரிந்து வெவ்வேறு துறைகளுக்குச் செல்லும்.

வேட்டையாடும் மடையான் கரையோரமாகத் தண்ணீரிலோ, குட்டைநடுக் கல்லிலோ நின்று, தன் நீண்ட கழுத்தை உள்மடக்கி, ஸ்தம்பித்து விட்டாற்போல் அசையாதிருக்கும். தியானித்து நிஷ்டையிலாழ்ந்த யோகிகளும் அதைப்போல் செயலற்று, ஜீவனற்று, இருக்கமாட்டார்கள்.

"ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடியிருக்குமாம் கொக்கு!"

ஒரு மீனோ, தவளையோ, மற்ற நீர்வாழும் பிராணியோ, சிந்திக்கும் தபஸ்வியைப் போலிருக்கும் மடையானின் அருகில் வந்தால், ஒளி வேகத்தில் அது தன் கழுத்தை நீட்டி, கத்தி போன்ற கூரிய அலகினால் அதைக் குத்திப் பிடித்துவிடும். இயற்கையில், தன் இருப்பைப் பிறர் கவனிக்காதிருப்பதற்கு அசைவற்றிருப்பதே அவசியம். அழுக்குப்படிந்த நிறமுள்ள முதுகுடைய மடையான் இரை வரவை எதிர்பார்த்து நிற்கையில், சுற்றுமுள்ள சேற்றையும் கற்களையும் ஒத்து ஸ்வரூபம் மங்கியிருக்கும். சற்று தூரம் இடம் விட்டு இடம் நடந்து செல்லவேண்டியிருந்தாலும், தன் போக்கு விளங்காதபடி தண்ணீரில் அமிழ்ந்த கால் நீர் மட்டத்தைக் கலக்காது, மெல்லக் கூனி நகர்ந்து செல்லும்.

சும்மா விருக்கையில் தன் சூழ் நிலையில் மறைந்து, உருவம் குன்றி, மங்கியிருக்கும் மடையான் இறக்கை விரித்ததும் மாயமாக வடிவு மாறிவிடும். அப்போது அதன் வெள்ளை நிறமுள்ள விரித்த இறக்கைகளும், மார்பும், அதன் மேல்புறத்தின் மண்ணிறத்தை ஒளிக்கவே, ஒரு க்ஷணம் அழுக்குப் படிந்து கூனிக் குறுகியிருந்த பறவை மறு க்ஷணம் கண்ணைப் பறிக்கும் வெள்ளை இறக்கைகள் பரப்பி, வடிவும் வனப்பும் கொண்டு, பறந்து செல்லும்.

மடையான் சில கொக்கு வகைப் பட்சிகளைப்போல் வானத்தில் மிதந்து, திக்கு நிலைக்காது வட்டமிட்டு, மெல்லப் பறந்து செல்லாது. போகுமிடத்திற்கு நேராக, திடமாக இறக்கையடித்து, வேகமாகப் போகும். கரையில் நின்று கொண்டிருக்கையில் அதன் நிலையைக் கலக்க ஏதாவது நேர்ந்தால், 'க்ருக்' என்று கடினமான குரலில் சப்தித்துப் பறந்து போய்விடும். மாலையில் அடைமரங்களைப் பார்த்து மடையான்கள் ஒன்றுகூடிப் பறந்து செல்லுகையிலும் இந்த சப்தத்தை அடிக்கடி கேட்கலாம். மடையான் இனத்தைச் சேர்ந்து, அதைப்போல், அதிலும் சற்றுப் பெரிதாகவுள்ள ஒரு நெய்தல் நிலப் பறவையும் சாயங்காலம் வீடு நோக்கிச் செல்லும் போது இப்படி சப்திக்கும். ஆனால், பறக்கும் பொழுதும் அந்தப் பறவையின் தலையும், மேல் பாகங்களும் இருண்டிருக்கும். மடையான் பறக்கையில் கொக்கைப் போல் வெண்ணிறமாக இருக்கும்.





# ஆத்ம ஜோதி

**வே. லட்சுமணன்**

உஜ்ஜயினி மன்னன் சாதவாகனன் ஹம்ஸ தூலிகா மஞ்சம் ஒன்றில் சாய்ந்தபடி தீவிரமான ஏதோ ஒரு யோசனையில் மூழ்கி யிருந்தான். எப்பொழுதுமே காண முடியாத துயரக் கீறல்கள் அப்போது அவன் முகத்தில் படிந்திருந்தன.

அருகில் அதுவரை அமர்ந்திருந்த பட்டத்துத் தேவி சரேலென்று எழுந்து தன் படுக்கைக்குச் சென்றாள். அவள் சென்ற வேகத்தில் அவளுடைய தீராத் தாபம் பிரதிபலித்தது. அதை மன்னனும் உணர்ந்தான்.

அவளுடைய தாபம் என்ன என்பது அவனுக்கு அதுவரை புரியாமலிருந்தது. அவளே அதை அவனுக்கு அன்று புரிய வைத்து விட்டாள்.

“மகாராஜா! தங்களுக்கு நிகரானவர்கள் எவருமே யில்லை யென்று இந்த உலகம் சொல்லிப் புகழும் நாள் என்றைக்குத்தான் வருமோ!” என்றாள் ராணி.

“ஏன், இப்பொழுது இந்தப் பாரத பூமி முழுவதுமே என்னைப் போற்றிப் புகழத்தானே செய்கிறது? அது உன் காதுகளில் விழவில்லையா?” என்றான் மன்னன்.

“அவைகள் விழாமல் இல்லை; ஆனால் அவைகளுடன் இன்னொரு சொல்லும் தான் செவியில் நாராசம்போல் விழுந்து தாக்குகிறது; அது உங்களுக்குத் தெரியாமல் போனது ஆச்சரியந்தான்!” என்றாள் ராணி.

“அந்தச் சொல்தான் என்ன?” என்று ஆச்சரியத்துடன் கேட்டான் மன்னன்.

“அரசே! ‘மன்னர் மிகவும் அழகாக இருக்கிறார்; மகா வீரத்துடன் வனத்திற்குச் சென்று மிருக வேட்டையில் தம்முடைய ஆற்றலைக் காண்பிக்கிறார். ஆனால் அவருக்குக் கல்வி யறிவு கொஞ்சமும் கிடையாது’ என்று உலகம் சொல்லுகிறது!”

மன்னனுக்கு அவ் வார்த்தை சுருக்கென்று தைத்தது. ஆனாலும் அவன் அதைச் சிரமப்பட்டுச் சமாளித்துக் கொண்டான்.

“உலகத்திற்கு எப்பொழுதுமே மன்னன் மீது குறை சொல்லிக்கொண்டிருப்பதுதான் வேலை; அதை நீ பெரிதாக நினைக்காதே. எனக்கு இப்பொழுது இருக்கும் கல்வியறிவே போதுமானது!” என்றான் ஆத்திரத்துடன்.

“அரசே! நீங்கள் குடிகளுக்கு மன்னர் என்பதை மறக்கவேண்டாம்! குடிகளின் குரலுக்குத் தாங்கள் மதிப்புக் கொடுக்க வேண்டும்! அதுவே உங்கள் கடமை!”

“உன் உபதேசம் கிடக்கட்டும்! இது விஷயமாய் உன் அபிப்பிராயம் என்ன? அதைச் சொல்” என்றான் மன்னன்.

“அரசே! உலகத்தின் சொல்லாக வைத்து என் அபிப்பிராயத்தைத் தான் நான் கூறினேன்! நீங்கள் தான் சொல்லியிருக்கிறீர்களே, நானே உங்கள் உலகம் என்று. அதனால்தான் அப்படிச் சொன்னேன்” என்றாள் மஹா விதுஷியான அவள்.

மன்னனுக்கு அதைக் கேட்கவே முடியவில்லை. “மன்னனாம் வேந்தனாகிய என்னைக் கேவலம் ஒரு பெண் இப்படிச் சாதுரியமாக மடக்கிவிட்டாளே! உலகத்தின் குரலுக்கும் இவள் குரலுக்கும் பேதம் இல்லையா? இவள் தான் என் உலகமாமே! என்ன அகங்காரம்!” என்று மனம் புழுங்கினான்.

மன்னனுக்கு அப்பொழுது புற உலகம் ஒரு சாமானியமான துரும்பாகப் பட்டது. ஆனால் மகாராணியின் சொல் கூர் வேலாய்ச் சுடர்விட்டுத் தாக்கியது.

அவளை அவனால் சிறிதும் பார்க்கவே முடியவில்லை. மறுபுறம் திரும்பிக்கொண்டான். சரஸ சல்லாபங்கள் புரிந்து இனிய தரு மலரின் சுகந்தத்தைப் பருகி இன்புற வேண்டிய அந்த வேளையில் இப்படி ஒரு பலமான தாக்குதலுடன் மன்னன் சிந்தனையில் மூழ்கி விட்டான். ‘அவளும் என் கடமை முடிந்துவிட்டது!’ என்ற திருப்தியுடனும், ‘இனியாவது மன்னர் கலை யறிவு பெற்றுத் திகழ விரும்ப மாட்டாரா?’ என்ற ஆவலுடனும் எழுந்து சென்றாள்.

கார்வானம் அப்பொழுது கம்பீரமாய் இடித்தது. மின்னல் கொடிகளில் சில அரசனை அணுகிப் பளிச்சிட்டன. இருந்த இடத்திலிருந்து மன்னன் எழுந்திருந்தான். சாளரத்தின் கதவுகளைத் தடாலென்று சாத்

தினான். மழைத் துளிகளில் சில முகத்தில் பட்டதனால் தெளிவு கொஞ்சம் உண்டாயிற்று.

“நம் பட்டமகிஷி வீணாக நம்மைப் பரிகசிப்பாளா? உண்மையில் எனக்குள்ள ஒரு குறையைத்தானே கூறியிருக்கிறாள்! இன்றைத் தினத்திலிருந்து முயன்று எப்படியாவது அக் கல்விச் செல்வத்தைப் பெற்றுவிட வேண்டும்! மிகவும் குறைந்த காலத்தில் வித்யா கர்வத்துடன் இவள் முன்பு நாம் சுடரொளிவிட்டு வீசவேண்டும்” என்று தனக்குள் முடிவு செய்து கொண்டான்.

*　　　*　　　*

மறுநாள் ராஜ சபை கூடியது. உடனேயே வித்வத் சபையைக் கூட்ட வேண்டும் என்று ஒரு நாளும் இல்லாத அதிசயமாக மன்னன் உத்தரவிட்டான். அவ்வாறே வித்வான்கள் பலர் நிரம்பிய கலா மண்டபம் அங்கே கூடியது.

மன்னன் எழுந்தான்.

“கவிஞர்களே! பாஷா பண்டிதர்களே! இன்றைக்கு நான் உங்களையெல்லாம் இங்கு வரவேற்றதற்குக் காரணம் இல்லாமலில்லை. என் குறை ஒன்றை இங்குள்ளவர் எவராவது நீக்க முடியுமா என்பதுதான் என் வேண்டுகோள்!” என்றான்.

வித்வான்களின் ஆரவாரக் குரல் ஒலிகள் அலை மோதின. “மகாராஜாவின் குறை யென்ன? எங்களால் முடிந்தவரை பாடுபட்டு அக் குறையைப் போக்குவோம். இது நிச்சயம்!” என்று எல்லோரும் கூறினார்கள்.

“வித்வான்களே! மிகக் குறைந்த காலத்தில் நான் ஒரு மகா கவியாகவும், லக்ஷணக் கலைஞனாகவும் திகழ வேண்டும். அதற்குப் பொறுப்புத் தாங்கி முன்வந்து அக் காரியம் முடிக்க வல்லவர்கள் இங்கு உண்டோ!” என்றான்.

உடனே இருவர் எழுந்திருந்தார்கள். மற்றவர்கள் எழுந்தவர்களைக் கூர்ந்து பார்த்தபடி அமர்ந்திருக்கலானார்கள். மன்னனுக்குத் தம் வணக்கத்தைத் தெரிவித்து விட்டுக் குணாட்யர் என்னும் மகா வித்வான் கூறினார்.

“அரசே! தங்களை மகத்தான கலைஞராகவும், கவியாகவும், லக்ஷண பண்டிதனாகவும் என்னால் ஆக்க முடியும். ஆனால் தாங்கள் என்னிடம் ஆறு வருஷங்கள் கற்கவேண்டும்!” என்றார்.

“ஆறு வருஷங்களா? நன்றாகச் சொன்னீர்கள்! தங்களுக்குத் தெரிந்தது இவ்வளவுதானா?” என்றான் மன்னன்.

அச் சமயத்தில் சர்வ சர்மன் என்ற மகா மந்திரி மன்னனைப் பார்த்து, “மகாராஜா! எனக்கு ஆறு மாதங்கள் போதும். நான் அக் காரியத்தை மிகவும் கச்சிதமாகச் செய்து முடிப்பேன்!” என்றான்.

அவன் மனத்தில் எப்படியாவது மன்னனின் மனத்துயரத்தைப் போக்கவேண்டும் என்ற எண்ணமே மேலிட்டிருந்தது. ஆனால் அதற்காகப் பாஷையின் பரிபூரணமான பாண்டித்யத்தை அலட்சியம் பண்ணுவது போல் அவன் அவ்வாறு சொல்லியிருக்கக் கூடாது. குணாட்யருக்கு அடங்காத சினம் மூண்டது. அவருடைய வாய் துடித்தது. மன்னனை ஏறிட்டு நோக்கினார்.

மன்னன் சர்வ சர்மனைப் பார்த்து, “அறிஞரே! நீங்கள் கூறுவது நான்



கல்லது. ஆறு மாதங்கள் கூட அதிக காலமாகத்தான் என்றால் கருதப்படும். இருந்தாலும் முதலில் சொன்னவர் ஆறு வருஷங்கள் என்றார். அதற்கும் இதற்கும் உள்ள வித்தியாசத்தை நினைக்க உமது வார்த்தையே எனக்கு இன்பம் தருகிறது!" என்றான்.

குணாட்யர் அதுவரை எப்படியோ பொறுத்திருந்தவர் அரசனை நோக்கி, "மன்னர் மன்னரே! சர்வ சர்மனால் தங்களுக்கு அவர் குறித்த ஆறு மாதங்களுக்குள் பூரண இலக்கண கவிதா ஞானத்தை அளிக்கவே முடியாது. ஒரு சமயம் அவர் அவ்வாறு செய்துவிட்டால் நான் மனிதர் பேசும் எந்த மொழியையுமே அதற்குப் பிறகு உபயோகிப்பதில்லை. இதுவே என் சங்கல்பம்; சபதமும்கூட" என்று கர்ஜனை புரிந்தார்.

சபையோர் அச் சபதத்தின் பயங்கரமான வாசகங்களைக் கேட்டு மனம் நடுங்கினார்கள். அவர்களின் முகத்தில் ஒரு பீதி படர்ந்தது. அதே சமயத்தில், "இவர் அல்லவோ வித்யாவீரர்!" என்ற ஆரவாரமான குரல்களும் அவர்களிடமிருந்து எழுந்தன.

மன்னனோ அவற்றைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை. மகா மந்திரி சர்வ சர்மனும் மன்னன் எதிரே தன்னுடைய பலவீனமான மனோபாவங்களைக் காட்டிக்கொள்ளாதவனாய்ப் புலித்தோல் போர்த்த பசுப் போல் நடித்தான். சபை கலைந்தது.

* * *

மகா ராணியின் அந்தப்புரம். இரவு பன்னிரண்டு நாழிகைகளுக்குமேல் இருக்கும். இன்னும் அரசர் அங்கு வரவில்லை. ராணி காத்திருந்தாள்.

அவள் எதிர்பார்த்து ஏமாற்றத்துடன் தளர்ந்து படுக்கையில் சாய்ந்தபோது மன்னன் அங்கே நுழைந்தான், கையில் சுவடிக் கட்டுகளுடன்.

"என்ன தேவி! அதற்குள் நித்திரையா?" என்றான் வேந்தன். ராணி பதில் பேசவில்லை. மன்னனும் திரும்ப அவளுடன் பேச்சுக்கொடுக்க விரும்பவில்லை. தன் இருக்கையை அடைந்து சுவடியைப் பிரித்துக்கொண்டே சாய்ந்தான்.



"இன்னும் எத்தனை நாட்களோ, இந்தச் சுவடிக்கோலம்!" என்று மன்னன் காதில் விழும்படி தனக்குள் அசுவாரஸ்யத்துடன் முனகிக் கொண்டாள் ராணி.

"அதற்கு யார் என்ன செய்வது! நீபத்தைத் தாண்டிவிட்டவர் பேரில் அல்லவா பிசகு!" என்று மன்னனும் முனகினான். மகா ராணி எழுந்து அவன் அருகில் வந்து, "மகாராஜா! மாதங்கள் ஐந்து ஆகிவிட்டன! இன்னும் ஒரு மாதத்திற்குள் எப்படி உங்களுக்குக் கல்வியின் பூரணமான பாண்டித்யம் உண்டாக முடியும்? வீணாக அந்தக் கவிச் சிரேஷ்டர் குணாட்யரின் மனத்தைப் புண்படுத்தியதுதான் மிச்சமாகப் போகிறது!" என்றான்.

"அப்படியில்லை. சர்வசர்மன் பெரிய தபஸ்வி. அவருடைய தவம் காணாவி




லேபர் இன்ஸ்பெக்டர் :—நீர் என்ன காலை ஆறுமணியிலே யிருந்து மாலை ஆறு மணி வரையில் ஆட்களை வேலை வாங்குகிறீராமே?

கண்ட்ராக்டர்:—என்ன ஸார், செய்கிறது? ஆறு மணிக்கு மேலே இருட்டித் தொலைந்து விடுகிறதே!

---

விருந்து தொடங்குகிறது. நீயே பிரமிக்கப் போகிறாய், பாரேன்!" என்றான் மன்னன்.

"உங்களுக்கு அவர் வித்தை சொல்லித் தருவதற்கும், தவம் புரிந்து தபஸ்வியாவதற்கும் என்ன சம்பந்தம்?"

"அதுதான் உனக்குப் புரியாது! ஒரு காரியம் நிறைவேற வேண்டுமானால் தந்திரமும் மந்திரமுங்கூட வேண்டியதுதான்! இதெல்லாம் மந்திரி சர்வ சர்மனுக்கு இலேசான விளையாட்டு! குணாட்யன் வெறும் அப்பாவி! ஆனால் சர்வசர்மன் பழுத்த கிழப் புலி! இதெல்லாம் உன் சிற்றறிவுக் கெட்டாது!" என்றான் மன்னன்.

"ஆம்! சிற்றறிவுக்கு எட்டக் கூடியதாக இல்லைதான்!" என்று கூறி விட்டு ராணி எழுந்து படுக்கைக்குப் போனாள். மன்னன் சுவடியில் பார்வையைச் செலுத்தி அதிலேயே ஈடுபடலானான்.

* * *

சர்வசர்மன் உண்மையில் ஒரு கைதேர்ந்த கலைஞனே. சாஸ்திர வித்பன்னனோ இல்லை. வாழ்க்கையில் ஒருவரையே தஞ்சமடைந்திருக்கும் மனிதருக்குச் சில சமயங்களில் நல்ல காலம் என்பது ஒத்துக்கொள்வதுண்டு. மன்னனையே தன்னுடைய சகலமுமாக நினைத்து வந்த சர்வசர்மனுக்கு இப்படி ஒரு அரிய சந்தர்ப்பம் கிடைப்பதால், அரசப் பிரீதியும் அதிகம் கிடைக்குமல்லவா? அதற்காகத்தான் அவன் அந்தப் பணியைத் துணிந்து மேற்கொண்டான்.

மனிதன் ஒரு முயற்சியில் தீவிரமாக இறங்கினால் தாற்காலிகமான வெற்றியையேனும் பெற்றுவிடுகிறான். அது இயற்கையின் நியதியாகவே இருக்கிறது. 'மெய் வருத்தக் கூலிதரும்' என்பதுபோல் சர்வசர்மனுடைய மெய்யும் மனமும் ஒன்றுபட்டு ஏகமாக அந்த வித்யா போதனையில் ஐக்யம் அடையவே, கலைக் கடவுளின் அனுகூலமான அனுக்ரகம் அவனுக்குக் கிடைத்துவிட்டது. ஆறும் மாத முடிவிற்குள் மன்னனை அனைவரும் போற்றும்படியான ஓர் அறிஞனாகவும் ஆக்கிவிட்டான் சர்வசர்மன்.

மனித யத்தனத்தில் முடியாது என்று எந்தக் காரியம் குணாட்யரால் ஒதுக்கப்பட்டதோ, அதே காரியத்தைச் சர்வசர்மன் செய்துவிட்டான் என்ற பிரமாதமான புகழ்க் குரல்கள் வித்வத் சபையோரிடமிருந்து எழுந்தன. அவர்களுக்கு மன்னனின் உண்மையான புலமை இன்னது என்று தெரியாது.

"அது தாற்காலிகமான கலைஞானம் தான்! கற்றோரைப் போற்றும் கலைஞானம் சர்வசர்மனுக்கோ மன்னனுக்கோ சிறிதும் கிடையாது" என்ற இரகசியம் தெரிந்திருந்தால் குணாட்யருக்கு எதிராகக் கைகொட்டிச் சர்வசர்மனைப் புகழ்ந்திருக்கமாட்டார்கள்.

ஆனால் எப்பொழுதுமே தூய்மையான ஆத்மப் பிரகாசமுள்ள பெரியோர்களின் செயல்கள் உலகில் பிரகாசிக்கப் பல இடையூறுகள் முதலில் உண்டாவது சகஜந்தானே? காலக்கிரமத்தில் உண்மை புலனாகாமல் போகாது. ஏனென்றால் உண்மை எப்போதும் மாறி விடுவதில்லை.

குணாட்யர் சபையிலிருந்து எழுந்திருந்தார். தம் சபதத்தை நிறைவேற்றுவதற்குச் சிறிதும் பின் வாங்காதவராய் அங்கிருந்து நகர்ந்தார். அவருடைய ஆத்ம ஜோதியை நன்றாகப் புரிந்துகொண்ட இரண்டு சிஷ்யர்கள் மட்டும் அவரைத் தொடர்ந்தார்கள்.

அதே சந்தர்ப்பத்தில் மகாராணியின் மனமும் அவரைத் தொடராமல் இல்லை. ஆனால் அவள் குணாட்யருக்காக இரங்குவதைத் தவிர வேறொன்றும் செய்ய முடியாது. தன் நாயகன் அறிவு பெற்றதில் அவளுக்கு அளவில்லாத மகிழ்ச்சிதான்! ஆனால் அசம்பாவிதமான வழியில் அரசர் பெற்ற அறிவு, அதே போல் அசம்பாவிதமாக ஒருநாள் மறைந்து

போனாலும் போனது தான் என்பதை அவன் நினைத்தபோது சர்வ சர்மன் மீது அடங்காத ஆத்திரம் கொண்டான்.




"ஏய்! எங்கேடா எல்லோரும் கூட்டமாகப் போகிறீர்கள்?"
"எங்கள் மாமாவைப் பஸ்ஸில் ஏற்றி விடுவதற்காகப் போகிறோம்!"

* * *

மௌன முத்திரை பூண்டு வனப் பிரதேசத்தில் திரிந்து அலையும் குணாட்யர் தம் சிஷ்யர்களுடன் ஒரு நாள் பயங்கரமான ஒரு இடத்தில் அமர்ந்திருந்தார். அவர் பார்வையில் ஒரு பைசாசக் கூட்டம் தெரிந்தது. அவைகள் தங்களுக்கே உரிய பைசாச பாஷையில் ஏதேதோ பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டுப் புரியாமல் சிறிது நேரம் விழித்தார். பிறகு மிகவும் சிரமப் பட்டுச் சிறிதும் விளங்காத அம்மொழியைத் தம் முயற்சியினால் ஓரளவு புரிந்துகொண்டார்.

அந்தப் பைசாசங்கள் ஒன்றுகூடி உட்கார்ந்து, தலைமைப் பீடத்தில் வீற்றிருந்த பைசாசம் ஒரு கதையைச் சுவாரஸ்யமாகக் கூறக் கேட்டுக் கொண்டிருந்தன. குணாட்யரும் கேட்டார். சில நாட்கள் இவ்வாறு சென்றன. பல உபகதைகளுடன் கூடிய அந்த நீண்ட கதையைப் பூரணமாய்ச் சொல்லிக் கேட்டதும் அவைகள் எல்லாம் அங்கிருந்து மறைந்தன.

குணாட்யர், "ஆகா! என்ன அதிசயம்! அற்புதமான பொருள்கள் அடங்கிய இக் கதைகள் உலகியலை விளக்கும் உண்மைகளைக் கொண்டிருக்கின்றனவே! இவைகளை நாம் இந்த உலகுக்கு வழங்கினால் சிறந்த சேவையாகவும் இருக்குமே!" என்று தமக்குள் கூறிக்கொண்டார்.

ஆனால் மொழிக்கட்டுப்பாடு பூதாகாரமான வடிவத்துடன் அவர் முன் வந்து நின்றது. "மனிதர்கள் பேசும் எந்த மொழிகளையும் நான் உபயோகிப்பதில்லை" என்று சபதமிட்டிருப்பதை நினைத்துப் போராடினார்.

போராட்டம் பல காலம் நீண்டது. சபதத்தை அந்த வனாந்தரத்தில் உள்ள அவர் மாற்றி விடுவதனால் யாரும் குறுக்கிட்டுத் தடை கூறப்போவதில்லை! ஆனால் அவருடைய ஆத்ம ஜோதி, மனச்சாட்சி அவரை வழி மறித்துத் தடுத்தது.

கடைசியில் அந்தப் பைசாச பாஷைக்கே ஒரு வரிவடிவம் கொடுத்து அக்கதைகளை விரிவாக எழுதலாம் என்று அவர் மனத்தில் ஒரு துணிவு பிறந்தது.

பூவரச இலைகள் ஏராளமாய் அங்கே கிடைத்தன. கருவேல முட்களுக்கும் பஞ்சமில்லாமலிருந்தது. எழுத முள்ளும், இலைகளும் கிடைத்து விட்டன. தோய்த்து எழுத மை வேண்டுமே என்று யோசித்தார்.

கலைஞரும், தூய சேவையில் மன நிம்மதி காண்பவருமான அவருக்கு ஒரு நொடியில் அந்தப் பிரச்னைக்கும் பதில் கிடைத்தது.

கருவேல முள்ளால் உடலைக் குத்திக் கொள்வார். இரத்தம் தோய்ந்த முள் முனையால் பூவரச இலையில் பாடல்களை எழுதுவார்! இவ்வாறே தினமும் எழுதினார். சீடர்கள் அவருடைய செய்கையைக் கண்டு பிரமித்தார்கள்; மலைத்துப்போனார்கள்; ஆனால் பயந்து ஓடிவிடவில்லை.

நாட்கள் பல மாதங்களாய், வருஷங்களாய் அகன்று மறைந்தன.

கதை முடிந்தது. பூவரச இலைகளை எண்ணினார்கள் சீடர்கள். ஏழு லட்சம் இலைகள் இருந்தன. "அப்பப்பா! ஏழு லட்சம் பாடல்களா!" என்று மூர்ச்சையானார்கள். கடைசியில் அவர்களும் தளராமல் குணாட்யர் கருத்துப்படி அப்பாடல்களை யெல்லாம் கற்றுப் புரிந்து கொண்டார்கள்.

"என்னுடைய முயற்சியைக் கண்டு சிறிதும் சலிக்காமல் நீங்களும் உடனுதவி புரிந்ததற்கு நான் மனம் மகிழ்கிறேன். ஆனால் உங்கள் உதவி இத்துடன் போகவில்லை. இந்த இலைகளை எடுத்துக்கொண்டு போய்ச் சாதவாகனன் சபையில் கவிதைகளை அரங்கேற்ற வேண்டும்!" என்றார் குணாட்யர்.

சிஷ்யர்களும் அதற்குத்தான் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆகை

விஞல் குருவின் பாதத்தில் வணங்கிவிட்டு, இலைச் சுவடிகளைத் தலைமீது சுமந்துகொண்டு சாதவாகனன் சபைக்குச் சென்றார்கள். வால்மீகர் உத்தர காண்டத்தை முடித்து லவகுசர்களை அயோத்திக்கு அனுப்பியது போலிருந்தது அந்தக் காட்சி!

* * *

மனிதன் தன் சொந்த வாழ்க்கையில் நடக்கும் எல்லாச் சம்பவங்களையும் நினைவில் நிறுத்திக் கொள்வதில்லை.

சாதவாகனனும் ஒரு மனிதன்தானே! குணாட்யரை அடியோடு மறந்துவிட்டிருந்தான் அவன். மேலும் வாய்ப் பூட்டுடன், மௌனமாகி அவமானம் தாங்காமல் ஓடிய ஒரு கவிஞனை மன்னனும் மன்னன்—சர்வ கலபத்தில் கவிச் செல்வத்தைப் பெற்று விட்டோம் என்ற பூரிப்பில் மிதக்கும் மன்னன்—மறந்துவிட்டதில் ஆச்சரியமில்லையல்லவா?

சிஷ்யர்கள் நடுச் சபையில் போய் நின்று அந்தப் பாடல்களைப் பாடலானார்கள். குணாட்யரின் கவிதை வெள்ளம் அந்த இலைகளின் வாயிலாகப் பெருகிக் கொண்டிருந்தது. மிகவும் உருக்கமாகவும், பிரமாதமாகவும் இருந்த அந்தப் பாடல்களைப் பைசாச பாஷையில் கேட்ட மன்னன், 'இடி இடி' என்று சிரித்தான், பரிகசித்தான்! அப்பாடல்களை மட்டுமல்ல; அதை இயற்றிய மாபெருங் கவிஞரையும் கூடப் பழித்தான்.

அவமானந் தாங்காத சிஷ்யர்கள் இலைக் கட்டைச் சுமந்தபடி அங்கிருந்து குணாட்யரை அடைந்தார்கள். அவர்கள் சபையிலிருந்து வெளியே போய் மறையும் வரையிலும் மன்னனது பரிகாசச் சிரிப்பு அடங்காமல் ஆர்ப்பரித்தது. சபையோர்களும் கூடக் கலந்துகொண்டார்கள். மற்ற விஷயங்களில் அவர்கள் எப்படியிருந்தாலும் இம்மாதிரியான சந்தர்ப்பங்களில், அவர்கள் 'மன்னன் எவ்வழியோ, அவ்வழியே' தான்! ஆனால் மகாராணி அன்று சாதவாகனனை இரவில் சந்தித்தபோது, "மகாராஜா! பல நாட்கள் கழித்துக் குணாட்யர் தம் சிஷ்யர்களை அனுப்பியிருந்தாராமே?" என்று கேட்டாள்.

"ஆம்! அவருக்குப் பித்தப்பிடித்து விட்டிருக்கிறது. இலைச் சுவடிகளில் பைசாச பாஷையில் ஏதேதோ பிதற்றி அனுப்பியிருந்தார்!" என்றான்.

அவளுக்கு அரசனின் மொழிகள் சுட்டன. "போதும், இதுதானா உங்கள் கலைஞானம்! நான் உங்களிடம் எதிர்பார்த்த அந்த மகத்தான லட்சண கலைஞானத்தை நீங்கள் பெறவில்லையே என்று நான் வருந்துகிறேன், மகாராஜா!" என்றாள்.

"நீ சொல்வது எனக்கு அர்த்தமாகவில்லை" என்றான் வேந்தன்.

"ஆம், உங்களுக்கு எப்படிப் புரியப்போகிறது? கற்றறிந்த உண்மைக் கவிஞர்கள் இப்படி ஏனைய கவிஞர்களை அவமதிக்க மாட்டார்கள்!" என்றாள்.

"உன் வாயை மூடிக்கொள்! உனக்கொன்றும் தெரியாது!" என்றான் சாதவாகனன். அதற்குமேல் அவள் பேசவில்லை.

சில நாட்கள் சென்றன. மகாராணி முன்போல் மன்னனிடம் குதூகலமாகப் பழகாமல் இருந்தாள். அவளைத் தன் வசப்படுத்த விரும்பிப் பல வழிகளை மேற்கொண்ட மன்னன் ஒரு நாள், "தேவி, இன்று உன் கரங்களால் எனக்கு உணவு கொடு" என்றான். அவளும் தன் கடமைக்காக உணவைக் கொண்டு வந்தாள்.

அவள் கொண்டுவந்த உணவு அவனுக்குப் பற்றாக் குறையாக இருந்தது. "இன்னும் கொஞ்சம் ....." என்றான்.

"இருப்பது இவ்வளவுதான்!" என்றாள்.

"ஏன்?" என்றான்.

"மாமிசம் இப்பொழுதெல்லாம் நிறையக் கிடைப்பதில்லையாம்!" என்றாள் ராணி.

அதற்கும் "ஏன்?" என்றான் மன்னன். அதற்கு அவள் பதில் சொல்லவில்லை. அவளுக்குக் காரணம் தெரியாது.

மன்னன் எழுந்தான். காவலாளைக் கைதட்டி யழைத்து விஷயத்தை விசாரித்தான். "அரசே! இப்பொழுது வேட்டைக்குப் போனால் வேடர்களுக்கு ஒரு விலங்கும் கிடைப்பதில்லையாம். யாரோ ஒரு யோகியார் ஒரு மலையின் சிகரத்தில் தங்கியிருக்கிறாராம். எல்லா மிருகங்களும் அவரைச் சுற்றி அங்கேயே உட்கார்ந்திருக்கின்றனவாம்; வேடர்கள் சொன்னார்கள்" என்று மிகவும் பயபக்தியோடு கூறினான். ஆச்சரியம் அடைந்த மன்னன், "அப்படியானால் அந்த இடத்தை நேரில் நானே போய்ப் பார்க்கவேண்டும்!" என்றான். மகாராணி தானும் வருவதாகக் கூறினாள். பிறகு எல்லோருமே அந்த அதிசயத்தைக் காணப் புறப்பட்டார்கள்.

* * *

ஓங்கி உயர்ந்த ஒரு மலையின் சிகரத்தில் குணாட்யர் ஒரு யோகியாய் நின்று தம் இரு சிஷ்யர்களுடன் மிகவும் முக்கியமான காரியம் ஒன்றில் ஈடுபட்டிருந்தார்.

அவர் எதிரே பிரம்மாண்டமாகத் தீ வளர்க்கப்பட்டிருந்தது. அது அவருடைய ஆத்ம ஜோதியே போல் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

"வாழ்வின் பல ஆண்டுகளைச் செலவிட்டு, உலகத்துக்கே கலைப் பொக்கிஷமான இந்தக் கதையைப் பாடி எழுதி முடித்தேன். அது உலகத்துக்குப் பயன்படும் என்று நம்பியும் இருந்தேன். ஏ, அக்கினி தேவனே! இனி இந்தப் பிருதிவி லோகத்தில் இதை வரவேற்பவர் எவரும் இல்லை! ஆகையினால் உனக்கே இவற்றை ஸமர்ப்பணம் செய்கிறேன்!" என்று கூறிவிட்டுக் குணாட்யர் ஒவ்வொரு இலையாகச் சிஷ்யர்கள் எடுத்துக் கொடுக்க, கவிதையை ஒருமுறை வாசித்துவிட்டுப் பிறகு தீயில் போடலானார். இவ்வாறே அவர் சுவடிகளைப் படித்துத் தீயில் ஒவ்வொன்றாகப் போட்டுக் கொண்டிருந்த போது, அங்கே ஓர் அற்புத உலகம் கூடியது.

தூய்மையும், அர்த்தமும், பாவமும் நிரம்பிய அப் பாடல்களின் இனிய நாதத்தைக் கேட்டு மிருகங்கள் எல்லாம் தங்கள் பகைமையை மறந்து அங்கே கூடியிருந்தன. மனிதர்களும் புரிந்துகொள்ளாத அந்த இனிய பாடல்களை அவைகள் மனோரம்மியமாக மதித்து ரஸித்துக் கொண்டிருந்தன.

ஒரு நாள் திடீரென்று ஒருவரும் எதிர்பாராதவிதமாய் மன்னனும் மஹிஷியும் மற்றவர் சூழ அங்கே வந்தார்கள். குணாட்யரையும், அவரைச் சூழ்ந்திருந்த சிஷ்யர்கள் இருவரையும், பல்லாயிரக் கணக்கான மிருகங்களின் மத்தியில் மன்னன் கண்டான்.

அவன் நெஞ்சம் அடைத்துக் கொண்டது. குணாட்யரிடம் ஓடினான். "புலவர் சிகாமணியே! கேவலம் இந்த விலங்குகளுக்கு உள்ள உணர்ச்சிகூட எனக்கு இல்லாமல் போய்விட்டது! எனக்கு என்னதான் சர்வ சர்மன் ஞானம் அளித்தும், அது மிருக ஞானத்திலும் கடைப்பட்டு விட்டது. என்னை மன்னிக்கவேண்டும்!" என்றான்.

குணாட்யர் ஒருமுறை மன்னனை ஏற இறங்கப் பார்த்தார். அவருடைய மனம், தான் இழந்த நிம்மதியைப் பெற்றுவிட்டாற் போல் உணர்ந்தது.

"கலைத் தெய்வத்தின் ஸ்வரூபமான தாங்கள் இனியேனும் எஞ்சிய சுவடிகளைத் தீயில் இடக் கூடாது" என்று வேண்டினான் மன்னன். தம்முடைய இரண்டு சிஷ்யர்களையும், மிஞ்சிய பாடல்களையும்




போலீஸ் இன்ஸ்பெக்டர்:—(டெலிபோனில்) யாரு? கான்ஸ்டேபிள் 324 தானே? நீ உடனே கும்பிடித் தெரு 121 நம்பர் ரேஷன் கடைக்குப் போ! அந்தக் கடைக்காரரிடம் அரைப்படி அரிசி இருக்கிறதாம்!

கான்ஸ்டேபிள்:— எஜமான்! அவரைக் கைது செய்து கொண்டு வரட்டுமா?

போலீஸ் இன்ஸ்பெக்டர்:—வேண்டாம்! சீக்கிரம் அந்த அரைப்படி அரிசியை மாத்திரம் எடுத்துக் கொண்டு வந்துவிடு!

---

அளித்து அவனுக்கு ஆசி வழங்கியபின் அவர் அங்கிருந்து எழுந்தார்.

ஓர் இடத்தில் போய் அமர்ந்து யோகத்தில் ஆழ்ந்தார். அங்கும் பிரியாமல் மிருகங்கள் அனைத்தும் அவரைக் கூடி நின்றன.

மன்னனும் மஹிஷியும் வணங்கி நிற்கத் தம் யோகத்தின் முடிவையும் அடைந்தார் குணாட்யர். மன்னன் மிகவும் வருத்தத்துடன், "தேவி! இன்றே நான் உண்மையை உணர்ந்தேன்! நீ அவரை அன்றே புரிந்து கொண்டு விட்டாய்!" என்றான்.

தன் கண்ணீரைத் துடைத்துவிட்டுக் கொண்ட ராணி, "எல்லாம் படைப்பின் விநோதம்!" என்று மொத்தத்துக்கும் ஒரு வார்த்தையாகப் பதில் கூறினாள்.

தீக்கு இரையாகி மிகுந்த அந்தப் பைசாச மொழிப் பாடல்களே வடமொழியில் மொழி பெயர்க்கப்பட்டு 'பிருஹத் கதை' என்று தற்காலத்திலும் வழங்கி வருகிறது.

# பாவமும் பாவையும்

**விந்தன்**

**9**

" இன்னொரு முறை உன்னுடைய முகத்தில் விழிக்க நான் விரும்பவில்லை. எனவே, இன்றுடன் சம்பளக் கணக்கைத் தீர்த்துப் பணத்தைக் கஜாஞ்சியிடம் கொடுத்தனுப்பியிருக்கிறேன்......"
—முதலாளியின் கடிதம்.

**வ**ழியில் ஏதோ சொல்ல முயன்ற அகல்யாவைக் கனகலிங்கம் ஒன்றும் சொல்ல விடவில்லை; பேசாமல் வருமாறு சைகை காட்டி, அவன் அவளை அழைத்துக்கொண்டு சென்றான். அப்போது அவனுக்கிருந்த கவலை யெல்லாம் ஒன்றே ஒன்றுதான்—அதாவது, வீடு போய்ச் சேரும் வரை வேறு யாரும் தன்னைப் பார்க்காமலிருக்க வேண்டுமே என்பதில்தான் அவனுடைய கவனமெல்லாம் இருந்தது; அந்தக் கவனமே கவலையாகப் பரிணமித்திருந்தது.

அகல்யாவின் உள்ளமோ ஒரு நிலையில் இல்லை; அமாவாசை இரவில் அலைமேல் அலை மோதிப் பொங்கும் கடலைப் போல அவளுடைய உள்ளம் பொங்கிக் கொண்டிருந்தது. அந்தப் பொங்குமாக் கடலின் பயங்கர அலைகளுக்கிடையே அவ்வப்போது தோன்றி மறையும் கட்டு மரம் போல அவளுடைய உள்ளத்தில் ஒரு கேள்வி அடிக்கடி எழுந்து மறைந்து கொண்டிருந்தது.

'இனிமேல் என்ன நடக்கும்?'

'இனிமேல் என்ன நடக்கும்?'

'இனிமேல் என்ன நடக்கும்?'

இந்தக் கேள்விக்கு விடை காண அவள் எவ்வளவோ முயன்றாள்; முடியவில்லை. ஆயினும் அதற்காக அவள் அசந்து போய் நின்றுவிடாமல் நடந்தாள், நடந்தாள், நடந்து கொண்டே இருந்தாள்.

அவளுக்கு எதிரே யாரோ இருவர் பேசிக் கொண்டு வந்தனர். அவர்களில் ஒருவன், "அதெல்லாம் ஒன்றும் நடக்காது!" என்று இன்னொருவனிடம் அடித்துச் சொன்னான். அவ்வளவுதான்; அகல்யாவின் உள்ளம் 'இனிமேல் என்ன நடக்கும்?' என்பதை விட்டு விட்டு, அவன் சொன்னதைப் பற்றிக் கொண்டது.

'அதெல்லாம் ஒன்றும் நடக்காது!'

'அதெல்லாம் ஒன்றும் நடக்காது!'

'அதெல்லாம் ஒன்றும் நடக்காது!'

அவள் இப்போது கொஞ்சம் தைரியத்துடன் நடந்தாள். ஆனால் அந்தத் தைரியம் நெடுநேரம் நீடிக்கவில்லை. மேலே காலு அடிகள் எடுத்து வைப்பதற்குள் வேறு யாரோ இருவர் அவளுக்கு எதிரே பேசிக் கொண்டு வந்தனர். அவர்களில் ஒருவன், 'ஹஹூம்; நான் அவனைச் சும்மா விடப் போவதில்லை' என்று மற்றொருவனிடம் இரைந்து சொன்னான். அடுத்த நிமிஷம் அகல்யாவின் உள்ளம் 'அதெல்லாம் ஒன்றும் நடக்காது!' என்பதை விட்டுவிட்டு, அவன் சொன்னதைப் பற்றிக்கொண்டது.

'ஹஹூம்; நான் அவனைச் சும்மா விடப் போவதில்லை.'

'ஹஹூம்; நான் அவனைச் சும்மா விடப் போவதில்லை.'

'ஹஹூம்; நான் அவனைச் சும்மா விடப் போவதில்லை.'

அவ்வளவுதான்; அவளுடைய தைரியம் அவளை அடியோடு கைவிட்டு விட்டது. மறுபடியும் பயம் வந்து அவளை ஆட்கொண்டு விட்டது. ஆயினும் அவள் தன் இதயத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டு நடந்தாள், நடந்தாள், நடந்து கொண்டே இருந்தாள்.

சுமார் அரை மணி நேரம் நடந்த பிறகு கனகலிங்கம் நின்றான். ஆனால் அகல்யா நிற்கவில்லை; அவள் தன்னை மறந்து, தன்னுடைய நிலையை மறந்து, மேலே மேலே நடந்து கொண்டே இருந்தாள்.

"அகல்யா......!"

"அகல்யா......!"

"அகல்யா......!"

அவள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"எங்கே போகிறாய்? இதுதான் என்னுடைய வீடு!" என்றான் கனகலிங்கம் சிரித்துக் கொண்டே.

அந்த வீடு பூட்டிக் கிடந்தது!

"இதுதானா!—இதோ வந்துவிட்டேன்!" என்றாள் அவள் புன்னகையுடன்.

"நல்லவேளை, வேறு யாருடைய கண்ணிலும் படாமல் எப்படியோ வந்து சேர்ந்து விட்டோம்!" என்று சொல்லிக் கொண்டே, கனகலிங்கம் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

அவனுடைய சந்தோஷம் அற்ப சந்தோஷமாயிற்று. அதே சமயத்தில், "என்டா, வேறு யாருடைய கண்ணிலாவது பட்டால் என்னவாம்?" என்று கேட்டுக் கொண்டே அங்கு வந்து சேர்ந்தான் அவனுடைய நண்பன் ராதாமணி.

அகல்யா வேதனையுடன் சிரித்தாள்; கனகலிங்கம், "......எல்லாம் எனை யாளும் ஈசன் செயல்" என்று வெறுப்புடன் சொல்லிவிட்டு, "வாடா, வா!—நானும் இப்பொழுதுதான் உன்னை நினைத்தேன்!" என்று முகமன் கூறி அவனை வரவேற்றான்.

'இவன் யார்?' என்பது போல் ராதாமணியைப் பார்த்தாள் அகல்யா; 'இவன் யார்?' என்பது போல் அகல்யாவைப் பார்த்தான் ராதாமணி.

ஆனால் கனகலிங்கத்தை ஒருவாறு உணர்ந்தவனாதலால் அவசரப்பட்டு எந்த விதமான விபரீத முடிவுக்கும் அவன் உடனே வந்து விடவில்லை!

கனகலிங்கம், அகல்யாவோடு அவனையும் அழைத்துக் கொண்டு மேலே சென்றான். "கீழே என் பூட்டிக் கிடக்கிறது?" என்று கேட்டான் ராதாமணி.

"அவர்களுக்கு என்ன குறைவு?—நினைத்தால் பாகிஸ்தானுக்குப் போவார்கள்; நினைத்தால் இந்துஸ்தானுக்கு வருவார்கள்!" என்றான் கனகலிங்கம்.

"என், அவர்களுக்கு அங்கே வியாபாரமோ?"

"ஆமாம்."

"இவர்களைப் போன்றவர்களைப் பார்க்கும் போது சில சமயம் நாம் 'மெஜாரிட்டி'யாயிருப்பதை விட, 'மைனாரிட்டி'யாயிருப்பதே ரொம்ப நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது!"

"அதேமாதிரி 'மைனாரிட்டி'களுக்கு 'மெஜாரிட்டி'யாயிருந்தால் தேவலை என்று தோன்றும். எது எப்படியிருந்தாலும் தற்சமயம் அகதிகளாயிருப்பதுதான் ரொம்பரொம்பநல்லது!"



"நீ சொல்வது ரொம்ப ரொம்ப ரொம்ப சரி!—இப்பொழுது அகதிகளால்தானே சர்க்காரின் அனுதாபத்தைப் பரிபூரணமாகப் பெற முடிகிறது?" என்று அவன் சொன்னதை ஆமோதித்தான் ராதாமணி.

"ஆனால் அதிலும் ஒரு சங்கடம் இருக்கிறது..." என்று இழுத்தான் கனகலிங்கம்.

"என்ன சங்கடம்......?"

"அந்த அகதிகள் வயிற்றுச் சோற்றுக்காகத் தங்களுடைய சொந்த நாட்டை விட்டுக் கடல் கடந்து சென்ற தென்னாப்பிரிக்கா அகதிகளாகவோ, மலேயா அகதிகளாகவோ, சிங்கப்பூர் அகதிகளாகவோ, சிலோன் அகதிகளாகவோ இருக்கக் கூடாது; கிழக்கு வங்கத்திலிருந்தும் பஞ்சாபிலிருந்தும் வகுப்பு வெறிக்கு அஞ்சி ஓடி வந்த அகதிகளாக இருக்க வேண்டும்."

"ஆமாம், ஆமாம்......"

"அப்படியே இருந்தாலும் அவர்களிடம் குறைந்த பட்சம் ஒரு 'லகார'மாவது இருக்க வேண்டும். இல்லையென்றால் அவர்கள் எந்த இடத்தைச் சேர்ந்த அகதிகளாயிருந்தாலும் பிரயோஜனமில்லை!" என்றான் கனகலிங்கம் கடைசியாக.

ராதாமணிக்கு இது பிடிக்கவில்லை. "உனக்கு எப்பொழுது பார்த்தாலும் பணத்தைப் பற்றித்தான்டா பேச்சு!" என்று அவன் அலுத்துக் கொண்டான்.

"நான் என்னடா செய்வேன்?—எப்பொழுது பார்த்தாலும் பணம் வேண்டியிருக்கிறதே!" என்றான் கனகலிங்கம்.

ராதாமணி பதிலுக்கு ஒன்றும் சொல்லவில்லை. மாடியை அடைந்ததும், "நான் வரட்டுமா?" என்றான் அவன்.

"எங்கே வந்தாய்?—ஏன் போகிறாய்?" என்று கனகலிங்கம் கேட்டான்.

"நீ ஊரிலிருந்து வந்து விட்டாயா, இல்லையா என்று அம்மா பார்த்து விட்டு வரச் சொன்னார்கள்; வந்தேன்—பார்த்தாச்சு; போகிறேன்!" என்று ராதாமணி சொன்னான்.

"சரி; சாயந்திரம் வருகிறாயா?—நான் உன்னிடம் ஒரு விஷயம் சொல்லவேண்டுமென்று இருக்கிறேன்......"

"ஏன், மத்தியானம் சாப்பிட வரமாட்டாயா? — அப்போது அந்த விஷயத்தைச் சொல்லேன்......?"

"நான் வரமாட்டேன்......"

"ஏன்டா?"

"அதெல்லாம் அப்புறம் சொல்கிறேன்."

"சாப்பாடு?"

"ஹோட்டலில்......!"

"எப்பொழுதுமா?"

"இல்லை; தாற்காலிகமாகத்தான்!"

"வேண்டாமே! — நான் அம்மாவிடம் சொல்லி இரண்டு பேருக்கும் சாப்பாடு கொடுத்தனுப்புகிறேனே!"

"அப்படிச் செய்தால் நல்லதுதான்."

"சரி; சாயந்திரம் வந்து பார்க்கிறேன்— நானும் உன்னிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டியிருக்கிறது" என்று சொல்லிவிட்டு, ராதாமணி 'விர்'ரென்று வெளியே சென்றான்.

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டு, கனகலிங்கம் அவனைக் கை தட்டிக் கூப்பிட்டான். "என்?" என்று கேட்டுக் கொண்டே வந்தான் அவன்.

"உன்னுடைய தங்கையைக் கொஞ்சம் இங்கே அனுப்பி வைக்கிறாயா?" என்றான் கனகலிங்கம்.

"யாரை?—கீதாவையா?"

"ஆமாம்."

"பேஷாய் அனுப்பி வைக்கிறேன்!" என்று சொல்லிவிட்டுப் போனான் ராதாமணி.

அவன் சென்றதும் அகல்யாவை நோக்கி, "நீ இங்கேயே இரு; நான் குளித்துவிட்டு வந்துவிடுகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கனகலிங்கம் குளிக்கும் அறைக்குச் சென்றான்.

'நாம் எங்கே பிறந்தோம், எங்கே வளர்ந்தோம்?—எங்கே போனோம், எங்கே வந்தோம்?' என்று எண்ணி வியந்தவளாய், அகல்யா அங்கிருந்த ஒரு பெட்டியின் மேல் உட்கார்ந்தாள். பிறகு, 'எங்கேயும் வந்துவிடவில்லை; நமக்கு ஏற்கெனவே பழக்கமான சென்னைக்குத்தான் வந்திருக்கிறோம்' என்று தீர்மானித்தவளாய் எழுந்து சென்று, அவள் கனகலிங்கத்தின் அறையைப் பார்வையிட்டாள்.

அறை வெள்ளை வெளேரென்று சுண்ணாம்பு அடிக்கப்பட்டுப் பார்ப்பதற்கு அழகாயிருந்தது. சுவரின் நான்கு புறங்களிலும் ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்தர், மகாத்மா காந்தி, பாரதியார் ஆகியோரின் படங்கள் மாட்டப்பட்டிருந்தன. அறையின் ஒரு மூலையில் மூங்கிலால் செய்யப்பட்ட மேஜை யொன்று போடப்பட்டிருந்தது. அதன்மேல் புத்தர் பெருமான் சிலை வடிவில் புன்னகை பூத்த வண்ணம் வீற்றிருந்தார். அவருக்குப் பக்கத்தில் உள்ளத்தைத் தூய்மைப் படுத்தும் புத்தகங்கள் பல வரிசைக்கிரமமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன—அந்த மேஜைக்கு முன்னால் ஒரு சிறு மூங்கில் நாற்காலி; அதற்கு இடது பக்கத்தில் ஒரு பிரயாணக் கட்டில்; அந்தக் கட்டிலுக்குமேலே இரண்டு தலையணைகளை உள்ளே வைத்து ஒரு பெரிய பாய் சுருட்டி வைக்கப்பட்டிருந்தது.

அகல்யா இன்னும் கொஞ்சம் முன்னேறிச் சென்று, மேஜைக்கு மேலே சுவரில் பொருத்தி வைக்கப்பட்டிருந்த அலமாரியைத் திறந்து பார்த்தாள். அந்த அலமாரியின் மேல் தட்டில் ஔவையை ஒத்திருந்த ஒரு கிழவியின் போட்டோ சிறிது சாய்ந்தாற்போல் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அந்தப் படத்தைப் பார்த்ததும், 'இந்தக் கிழவி நிச்சயம் அவருடைய காதலியாயிருக்க முடியாது; தாயாராய்த்தான் இருக்க முடியும்' என்று அவள் தனக்குத் தானே சிரித்தபடி சொல்லிக் கொண்டாள். அந்த மேல் தட்டுக்குக் கீழிருந்த நடுத்தட்டில் கண்ணாடி, சீப்பு, தேங்காயெண்ணெய், பற்பொடி முதலிய சாமக்கிரியைகள் வைக்கப்பட்டிருந்தன. அதற்கும் கீழே இருந்த அடித் தட்டிலோ பழைய பத்திரிகைகள் ஒழுங்காக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன.

எல்லாவற்றையும் பார்த்த பிறகு, "பேஷ், அறை பிரமாதம்!" என்று வாய் விட்டுச் சொல்லிக்கொண்டே அகல்யா திரும்பினாள். கதவிடுக்கில் ஒரு மண் கூஜாவும் அதற்கு மேல் ஒரு கண்ணாடி டம்ளரும் இருப்பது அவள் கண்ணில் பட்டது. 'தண்ணீருக்கு இது போதாது; இன்னும் ஏதாவது ஒரு பெரிய ஏனம் வாங்கிக் கொள்ள வேண்டும்' என்று எண்ணிக் கொண்டே அவள் வெளியே வந்தாள். வாரந்தாவுக்குக் குறுக்கே கொஞ்சம் எட்டினாற்போல் சுவர் வைத்துத் தடுக்கப்பட்டிருந்த ஒரு சிறு மூலை அவளுடைய கவனத்தைக் கவர்ந்தது. 'இந்த இடத்தைச் சமையல் செய்வதற்கு

உபயோகித்துக் கொள்ளலாம்; ஒரு கரி அடுப்பும் நாலைந்து அலுமினியப் பாத்திரங்களும் வாங்கிக் கொண்டால் போதும்' என்று தீர்மானித்துக் கொண்டு, மீண்டும் அவள் பெட்டியின்மேல் உட்கார்ந்தாள். அவளுக்கு எதிரே கட்டப்பட்டிருந்த ஒரு கொடியில் துண்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது. அந்தத் துண்டைப் பார்த்ததும் அவளுக்கு என்ன தோன்றிற்றோ என்னவோ, உடனே அதை எடுத்துக் கொண்டு குளிக்கும் அறையை நோக்கி ஓடினாள். எதிரே வந்த கனகலிங்கம் அந்தத் துண்டை வாங்கிக் கொண்டு அவளை ஒரு தினுசாகப் பார்த்தான்; அவளும் அவனை ஒரு தினுசாகப் பார்த்தாள்.

ஆனால் இருவருடைய முகத்திலும் அப்போது மலர்ச்சி இல்லை; அகத்தில் மலர்ச்சி இருந்தால்தானே முகத்தில் மலர்ச்சி இருக்கப் போகிறது?

கனகலிங்கம் உடம்பைத் துடைத்துக் கொண்டே, "நீ குளிக்கப்போவதில்லையா?" என்று கேட்டான்.

"குளிக்கத்தான் போகிறேன்; அதற்கு முன்னால் உங்களிடம் ஒரு விஷயத்தைச் சொல்லிவிட வேண்டும்......" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தாள் அகல்யா.

கனகலிங்கம் குறுக்கிட்டு, "எந்த விஷயமாயிருந்தாலும் இப்பொழுது வேண்டாம்; முதலில் நான் போய் முதலாளியைப் பார்த்து விட்டு வந்து விடுகிறேன்" என்றான்.

"யாரை நீங்கள் முதலாளி என்கிறீர்கள்?" என்று அகல்யா வியப்புடன் கேட்டாள்.

"ஸ்டேஷனில் பார்த்தோமே, அவரைத்தான்!"

"அவரா உங்கள் முதலாளி......?"

"ஆமாம்."

இந்தச் சமயத்தில், "என்ன, அண்ணா! கூப்பிட்டீர்களாமே?" என்று கேட்டுக் கொண்டே நீரா வந்தாள்.

"வா அம்மா, வா!—நான் ஊருக்குப் போயிருந்தேனே இல்லையோ, அங்கிருந்து உனக்கு ஓர் அக்கா வாங்கி வந்திருக்கிறேன்......"

"அக்கா இல்லையாமே!—மன்னி வாங்கிக் கொண்டு வந்திருப்பதாக அல்லவா அண்ணா சொன்னார்!" என்றாள் நீரா.

"அவன் பேச்சை நீ நம்பாதே, நீரா!—எங்கேயாவது ஓர் ஆணும் பெண்ணும் கொஞ்சம் நெருங்கிப் பழகினால் போதும்; அவன் உடனே அவர்களை 'காதலன்—காதலி' என்று சொல்லி விடுவான். அது மட்டுமல்ல; வேறு என்னவெல்லாமோ கற்பித்துக் கொண்டு அவன் வீணாக அவஸ்தைப் படுவான்—அவசரக் குடுக்கை! உணர்ச்சியுடன் போராட அவனுக்கு முதுகெலும்பு இருந்தால்தானே?—நல்ல ராஜாமணி அவன்! தன்னை வைத்துக் கொண்டு உலகத்தைப் பார்ப்பதும், உடனே தனக்குள் உலகம் அடங்கிக் கிடக்கிறது என்று தீர்மானித்து விடுவதும் அவன் வழக்கமாய்ப் போச்சு!—தான் பலவீனனோ இல்லையோ,



அப்படியே எல்லோரும் இருப்பார்கள் என்பது அவனுடைய எண்ணம்!" என்றான் கனகலிங்கம் ஆத்திரத்தோடு.

சீதா சிரித்துக் கொண்டே, "இல்லை அண்ணா, இல்லை; அண்ணா அக்காவைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லை. நான்தான் விளையாட்டுக்காகச் சொன்னேன்!" என்றாள்.

"நீ குழந்தை!—உனக்கு என்ன தெரியும்?" என்று அவளுடைய ஆரஞ்சுக் கன்னத்தை ஆசையுடன் கிள்ளித் தன் குற்றமற்ற அன்பை வெளிப்படுத்திக் கொண்டான் கனகலிங்கம்.

"நான் என்ன அண்ணா, செய்ய வேண்டும்?" என்று 'குதிகுதி'யென்று குதித்துக் கொண்டே கேட்டாள் சீதா.

"நீ ஒன்றும் செய்ய வேண்டாம்; நான் வெளியே போய்விட்டு வரும் வரை அக்காவுக்குத் துணையாயிருந்தால் போதும்" என்றான் கனகலிங்கம்.

"சரி, அண்ணா!" என்று சீதா தஞ்சாவூர்ப் பொம்மையைப் போலத் தலையை ஆட்டிவிட்டு, உடனே அக்காவிடம் ஓடிவிட்டாள்.

அவளை அன்புடன் அணைத்துக் கொண்டு, "நானும் உன்னைப்போல் குழந்தையாகவே இருந்திருக்கக் கூடாதா!" என்று உள்ளம் உருகிச் சொன்னாள் அகல்யா.

கனகலிங்கம் அவர்களைப் பார்த்துப் புன்னகை பூத்துக் கொண்டே, "நான் போய் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

அதே சமயத்தில் முதலாளியின் கடைப் பையனான கஜபதி வாசலில் சைக்கிளை நிறுத்திவிட்டு 'டக், டக்' என்று மேலே ஏறி வந்து கொண்டிருந்தான்.

"என்ன கஜபதி, என்ன விசேஷம்?" என்று அவனை ஆவலுடன் விசாரித்தான் கனகலிங்கம்.

'கஜபதி' என்ற பெயரைக் கேட்டதும் சீதாவை அழைத்துக் கொண்டு அகல்யா அவசர அவசரமாக மேல் மாடிக்குப் போய் விட்டாள்!

"அப்பா இந்த ரூபாயை உன்னிடம் கொடுக்கச் சொன்னார்!" என்று கஜபதி பதினைந்து ரூபாயை அலட்சியமாக எடுத்துக் கனகலிங்கத்தினிடம் கொடுத்தான்.

"எதற்கு?" என்று கனகலிங்கம் ஒன்றும் புரியாமல் கேட்டான்.

"எதற்கா!—இந்தக் கடிதத்தைப் படித்துப் பார், தெரியும்!" என்று அவனிடம் ஒரு கடிதத்தையும் எடுத்துக் கொடுத்து விட்டுக் கஜபதி மேலே வந்து உட்கார்ந்தான். அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படித்துக் கொண்டே கனகலிங்கமும் அவனைத் தொடர்ந்து மேலே வந்தான்.

"கனகலிங்கம்,

இன்னொரு முறை உன்னுடைய முகத்தில் விழிக்க நான் விரும்பவில்லை. எனவே, இன்றுடன் சம்பளக் கணக்கைத் தீர்த்துப் பணத்தைக் கஜபதியிடம் கொடுத்தனுப்பி யிருக்கிறேன். பெற்றுக் கொண்டு உடனே ரசீது கொடுத்தனுப்பு!

ரயில்வே பார்சலையும் நானே எடுத்துக் கொள்கிறேன்: நீ வர வேண்டாம்.

இப்படிக்கு,
பரமசிவம்."

இந்தக் கடிதத்தைப் படித்து முடிந்ததும் கனகலிங்கம் தலையில் கையை வைத்துக் கொண்டு அப்படியே உட்கார்ந்து விட்டான்.

"ஒரேயடியாகக் கலியாணபுரத்துக் கணக்கையும் தீர்த்து விட்டு உட்கார்ந்தால் சௌகரியமாயிருக்குமே!" என்று குத்தலாகச் சொன்னான் அந்தக் குட்டி முதலாளி.

அவனிடம் ஏற்கெனவே சரிக்கட்டி வைத்திருந்த கணக்குத் தாளையும் பணத்தையும் மௌனமாக எடுத்துக் கொடுத்து விட்டுக் கனகலிங்கம் தட்டுத் தடுமாறிக் கொண்டே மறுபடியும் உட்காரப் போனான்.

"ரசீது...?" என்று கேட்டான் அவன்.

"அதற்கென்ன, இதோ எழுதித் தருகிறேன்!" என்று நடுங்கும் குரலில் சொல்லிய வண்ணம் இரண்டு வரிகளைக் 'கிடுகிடு'வென்று எழுதி அவனிடம் கொடுத்து விட்டு, 'உஸ்ஸ்......' என்று தன்னை ஆசுவாசப் படுத்திக் கொண்டே கனகலிங்கம் உட்கார்ந்தான்.

அதைப் பெற்றுக் கொண்டு கஜபதி சென்றதும், அகல்யாவும் சீதாவும் 'மடமட' வென்று கீழே இறங்கி வந்தார்கள்.

வந்ததும் வராததுமாக, "என்ன, அண்ணா?" என்று ஓடோடியும் வந்து கேட்டாள் சீதா.

"ஒன்றுமில்லை, அம்மா! நீ வேண்டுமானால் வீட்டுக்குப் போகிறாயா?" என்றான் கனகலிங்கம்.

"ஏன், வெளியே போகவில்லையா?"

"இல்லை."

"சரி, அண்ணா! அடிக்கடி நான் வந்து அக்காவைப் பார்த்துக் கொள்கிறேன்!" என்று சொல்லிவிட்டு, நடக்கத் தெரிந்தும் நடக்க விரும்பாத வயதினளான குழந்தை சீதா ஓடினாள்!

அவள் துள்ளித் துள்ளி ஓடும் அழகைக் கண்டு அந்த நிலையிலும் உள்ளம் குளிர்ந்து பரவசமடைந்தான் கனகலிங்கம்.

அகல்யா அனுதாபத்துடன் அவனைப் பார்த்துக் கொண்டே, "எல்லாம் என்னால் வந்த வினை! நான் முதலிலேயே உங்களைப் பற்றித் தீர விசாரித்திருக்க வேண்டும்" என்றாள்.

"என்ன விசாரித்திருக்க வேண்டும் என்கிறாய்?" என்று கேட்டான் கனகலிங்கம்.

"நீங்கள் யார், என்ன வேலை செய்கிறீர்கள், எங்கே இருக்கிறீர்கள் என்றெல்லாம் விசாரித்திருந்தால் இந்தக் கஷ்டம் இப்பொழுது நேர்ந்திருக்காது. நான்பாட்டுக்கு நீங்களே உங்கள் கடைக்கு முதலாளியாக்கும் என்று நினைத்துக் கொண்டு விட்டேன்!"

"அதனால் என்ன, இப்பொழுது?— நடந்துபோன காரியத்தைப் பற்றி வருந்துவானேன்?"

"அந்தக் காரியம் என்னால் நடந்திருக்கும் போது, நான் எப்படி அதற்காக வருந்தாமலிருக்க முடியும்......?"

"உன்னாலா!—அது எப்படி?" என்று கனகலிங்கம் வியப்புடன் கேட்டான்.

"அவர் என் சித்தப்பா!" என்றாள் அகல்யா.

"எவர்......?"

"உங்கள் முதலாளிதான்!"

"நிஜமாகவா?"

"ஆமாம்."

கனகலிங்கம் ஒரு கணம் மௌனமாக இருந்தான். மறுகணம், "அப்படியே இருந்தாலும் அவர் என்னைக் கூப்பிட்டு விசாரித்து உண்மையைத் தெரிந்து கொண்டிருக்கலாமே?" என்றான்.

"இம்மாதிரி சமயங்களில் அதற்கு வேண்டிய பொறுமையை அவரைப் போன்ற நிலையில் உள்ளவர்களிடம் எதிர்பார்க்க முடியுமா, என்ன?" என்றாள் அகல்யா.

"உண்மைதான்; அப்படியே கூப்பிட்டு விசாரித்திருந்தாலும் அவரிடம் நான் எப்படி உண்மையை நிரூபித்திருக்கப் போகிறேன்? நான் உண்மையை நிரூபித்திருந்தாலும் அவர்தான் எப்படி அதை ஒப்புக் கொண்டிருக்கப் போகிறார்?" என்றான் கனகலிங்கம்.

"என்னால் உங்களுக்கு எவ்வளவு கஷ்டம்!" என்று சொல்லிக் கொண்டே, அகல்யா கண்களில் நீர் ததும்ப அவனைப் பார்த்தாள். அவன் தன்னுடைய தாயாரின் போட்டோவைப் பார்த்தான். அப்போது, 'குழந்தாய்! பரமசிவத்தை நம்பியா நான்

உன்னைப் பெற்றெடுத்தேன்?—வருந்தாதே; நீகூட மீன் குஞ்சா என்ன, கரையில் எடுத்துப் போட்டதும் செத்துப் போவதற்கு?—இன்றல்ல; என்றும் உன்னையே நீ நம்பு!—நிச்சயம் பிழைத்துக் கொள்வாய்!' என்று அவனுடைய தாயார் அவனைப் பார்த்துச் சொல்வது போலிருந்தது!

## 10

கடந்த நாலைந்து நாட்களாக அகல்யாவிடம் இருந்த துடிப்பை இப்பொழுது காணவில்லை. அவள் புது மணப் பெண்ணைப்போலத் திடீரென்று அடக்கத்தைக் கைக்கொண்டாள். அத்துடன், தன் எதிர்காலத்தைப் பற்றியும் அவள் சிந்திக்கத் தொடங்கினாள். சிந்திக்கச் சிந்திக்கக் குழப்பந்தான் அதிகரித்தது. என்ன இருந்தாலும் அவள் படித்த பெண், பாருங்கள்!—குழப்பம் அதிகரிக்கவில்லையென்றால் அவள் படித்துத்தான் என்ன பிரயோஜனம்?

இந்த லட்சணத்தில் மத்தியானம் சாப்பிட்டு முடிந்ததும், "என், அகல்யா! என்னை நீ இன்னும் காதலிக்கிறாயா, என்ன?" என்று ஓர் அபூர்வமான கேள்வியைக் கேட்டு வைத்தான் கனகலிங்கம்.

அகல்யா முகத்தில் ஆச்சரியக் குறியைப் போட்டுக்கொண்டு அவனை ஏற இறங்கப் பார்த்தாள். அவளால் அவனையும் புரிந்து கொள்ள முடியவில்லை; அவனுடைய கேள்வியையும் புரிந்துகொள்ள முடியவில்லை. சாட்சாத் கடவுளைப்போல அவன் அவளுக்குப் புரியாத புதிரா யிருந்தான்!

இருந்தாலும், "எதற்காக அப்படிக் கேட்கிறீர்கள்?" என்று அவள் பதிலுக்குக் கேட்டு வைத்தாள்.

"வேலையோ போயாச்சு; மேலே இருக்கும் சாயபு ஊருக்குப் போயிருப்பதால் அவருக்குக் கொடுக்கவேண்டிய இரண்டு மாத வாடகைப் பணம் இருபது ரூபாய் வைத்திருந்தேன். அதையும் கலைஞானபுரத்தில் செலவழித்தாச்சு. இப்போது கஜபதி கொண்டு வந்து கொடுத்த பதினைந்து ரூபாயைத் தவிர என்னிடம் ஒரு காலணா கிடையாது. இதைவைத்துக்கொண்டு நான்தான் உன்னை எத்தனை நாட்கள் காதலிக்க முடியும்? இல்லை, நீதான் என்னை எத்தனைநாட்கள் காதலிக்க முடியும்?" என்றான் கனகலிங்கம்.



அகல்யாவுக்கு இது பெரிய சோதனையாயிருந்தது. அவள் என்ன சொல்வது, என்ன செய்வது என்று தெரியாமல் கையோடு கையைப் பிசைந்துகொண்டு நின்றாள்.

"ஆனாலும் எனக்கு ஒரு தைரியம் இருக்கிறது ...." என்று மேலே ஏதோ சொல்ல ஆரம்பித்தான் கனகலிங்கம்.

அகல்யா இடைமறித்து, "என்ன தைரியம்?" என்று உற்சாகத்துடன் கேட்டாள்.

"உனக்குத்தான் காசை விடக் காதல் பெரிதாச்சே!—அதனால் எப்படியும் நீ என்னைக் காதலிப்பாய் என்றே நான் நம்புகிறேன்!" என்றான் கனகலிங்கம்.

அகல்யா முகத்தைச் சுளித்துக்கொண்டு, "சரிதான், போங்கள்!" என்றாள்.

"எங்கே போவது?—உன்னை விட்டு விட்டு நான் போவதா? என்னை விட்டு விட்டு நீ போவதா? அல்லது, நம் இருவரையும் விட்டுவிட்டு அந்தக் கரை காணாத காதல் எங்கேயாவது போய்த் தொலைவதா......?"

"காதல், காதல், காதல்!—அதைத் தவிர உங்களுக்கு வேறு எதைப் பற்றியும் பேசத் தெரியாதா?" என்று எரிச்சலுடன் குறுக்கிட்டுக் கேட்டாள் அகல்யா.

"நீ சொல்வதுபோல் வாழ்க்கைக்குக் காதல்தானே ஜீவநாடி?—காசா ஜீவநாடி?" என்றான் கனகலிங்கம்.

"நீங்கள் இப்படியே பேசிக்கொண்டிருந்தால் நான் அழுது விடுவேன்!" என்று தன்னுடைய ஆள் காட்டி விரலைக் காட்டி அகல்யா அவனைப் பயமுறுத்தினாள்.

அதேமாதிரி, "நானும் நீ அழுதால் சிரித்து விடுவேன்!" என்று கனகலிங்கமும் அவளைப் பயமுறுத்தினான்.

"ரொம்ப அழகாய்த்தா னிருக்கிறது!—நடக்கவேண்டிய காரியத்தைப்பற்றி யோசிக்காமல் வேறு என்னவெல்லாமோ பேசிக்கொண்டிருக்கிறீர்களே?" என்றாள் அகல்யா.

"என்ன காரியம் நடக்க வேண்டும்?" என்று கனகலிங்கம் கேட்டான்.

"வீட்டுக்கு நாலு பாத்திரங்கள் வாங்கிப் போட்டால் நான் சமைக்க மாட்டேனா? அதனால் செலவும் குறையாதா?" என்று அதற்குள் உரிமை கொண்டாடினாள் அகல்யா.

"யார் இல்லை என்கிறார்கள்?—ஆனால் பாத்திரக் கடைக்காரன் ஒன்றும் தெரியாத அப்பாவியாச்சே! அவனுக்கு நம்முடைய காதலைப் பற்றி என்ன தெரியும்?—நாம்



'பாத்திரத்தைக் கொண்டா!' என்றால், அவன் 'காசைக் கொண்டா!' என்று கேட்டுத் தொலைப்பானே?"

"நாம் ஒன்றும் அதிகமாக வாங்க வேண்டியதில்லை; நாலு அலுமினியப் பாத்திரங்களும், தண்ணீருக்கு ஒரு பெரிய ஏனமும் தற்சமயம் வாங்கிக் கொண்டால் போதும்......"

"அரிசி, உப்பு, பருப்பு, காய்கறி எல்லாம்......?"

"எல்லாவற்றிலும் கொஞ்சம் கொஞ்சம் வாங்கிக் கொண்டால் போகிறது......"

"கொஞ்சம் கொஞ்சம் வாங்கிக் கொள்வதற்குக் காதலே போதும் என்கிறாயா?"

"நாசமாய்ப் போச்சு!—எல்லாவற்றுக்கும் காசு வேண்டும், காசு வேண்டும், காசு வேண்டும் என்றுதான் நான் முட்டிக் கொள்கிறேனே!"

"அப்படியானால் சரி!—இந்தா, இந்தப் பதினைந்து ரூபாயை நீயே வைத்துக்கொள்; வாங்க வேண்டியதையெல்லாம் நீயே வாங்கிக் கொள்!" என்று கனகலிங்கம் பதினைந்து ரூபாயை எடுத்து அவளுக்கு முன்னால் வைத்தான்.

"இது போதுமா, என்ன?" என்றாள் அகல்யா.

"போதும் போதாததற்குத்தான் நம்முடைய சிஞ்சிவிக் காதல் இருக்கவே இருக்கிறதே!" என்றான் கனகலிங்கம்.

அகல்யாவுக்கு ஆத்திரம் தாங்கவில்லை; "நான் உங்களுடன் இனிமேல் பேசினால் கேளுங்கள்!" என்று சொல்லிவிட்டு, அவள் அவனைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் மேலே சென்றுவிட்டாள்!

அதே சமயத்தில், "மத்தியானம் சாப்பாடு வந்து சேர்ந்ததா?" என்று விசாரித்துக்கொண்டே, அவனுக்கு எதிரில் வந்து உட்கார்ந்தான் ராதாமணி.

"சோமமென்ன?—சீதாதான் கொண்டு வந்திருந்தான்!" என்றான் கனகலிங்கம்.

"நல்ல வேளை, வேறு யாரும் கொண்டு வரவில்லையே?—ரொம்ப சந்தோஷம்!"

"ஏன், என்ன நடந்தது?"

"ஒன்றும் நடக்கவில்லை; அம்மாவிடம் நீ யாரோ ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறாய் என்று சொல்ல என்னவோ போலிருந்தது — அதைப்பற்றி அம்மா ஏதாவது விபரீதமாக நினைத்துக் கொண்டு விட்டால் என்ன செய்வது?—அதனால் யாரோ ஒரு பெண்ணை நீ அழைத்துக்கொண்டு வந்திருப்பதாக நான் சொல்லியிருந்தேன். அது பொய்யாகி விடக் கூடாதே என்றகவலை எனக்கு!"

"ஆமாம், ஆமாம். அதைப்பற்றி நான் கூடச் சிறிது நேரத்துக்கு முன்னால் யோசித்துக் கொண்டிருந்தேன்......"

"நல்ல ஆளடா, நீ!—முன்னால் யோசிப்பதற்குப் பதிலாகப் பின்னால் யோசித்துக் கொண்டிருந்தாயாக்கும்?"

"என்ன செய்வது?—நாலைந்து நாட்களாக என் மனம் என்னிடம் இல்லை......"

"எப்படி இருக்கும்?—அதுதான் கொள்ளை போய் விட்டதே!"

"பார்த்தாயா?—ஓர் ஆணும் பெண்ணும் கொஞ்சம் சேர்ந்தாற்போல் இருக்கக் கண்டால் நீ மட்டும் இப்படி நினைக்கவில்லை; உலகமே அப்படி நினைக்கிறது!—அதனால் தான் சென்னைக்கு வந்ததும் உன்னுடைய துணையை நாடுவதென்று நான் தீர்மானித்திருக்கேன்......"

"எதற்கு!"

"வேறெதற்குமில்லை; என்னுடன் இரவில் சில நாட்கள் படுத்துக் கொள்வதற்குத்தான்!"

"ஏனோ?"

"இந்த உலகத்தில் மனிதன் மனிதனாக வாழ வேண்டுமானால் தன்னுடைய உணர்ச்சியுடன் அவன் நீண்ட நாட்கள் போராட வேண்டியிருக்கிறது. அந்தமாதிரி போராட்டத்தில்தான் இப்போது நான் ஈடுபட்டிருக்கிறேன். இருந்தாலும் சில சமயம் என்னிடமே எனக்கு நம்பிக்கை இருப்பதில்லை; அதற்காகத்தான் உன்னுடைய உதவியை நாடுகிறேன்......"

"காலையில் இதைத்தான் நீ என்னிடம் சொல்ல வேண்டுமென்றாயா, என்ன?"

"ஆமாம்; அதனால் என்ன?"

"ஒன்றுமில்லை; நானே இன்று வந்து இங்கே படுத்துக்கொள்ள வேண்டுமென்று இருந்தேன்......"

"ஏன்?"

"ஊரிலிருந்து அக்காவும் அத்தானும் வந்திருக்கிறார்கள். அவர்கள் என்னுடைய

அறையை எடுத்துக் கொண்டு விட்டார்கள். அதனால் உன்னுடைய உதவியை நான் நாட வேண்டுமென்று இருந்தேன்; அதற்குள் நீயே என்னுடைய உதவியை நாடி விட்டாய்!"

"இதைத்தான் காலையில் நீயும் என்னிடம் சொல்ல வேண்டுமென்று இருந்தாயா?"

"ஆமாம்."

"நல்ல வேடிக்கையடா, இது! நான் என்ன நினைத்தேனோ, அதையே நீயும் நினைத்திருக்கிறாய். நம் இருவருக்குமிடையே மனத் தந்தி பேசியிருக்கிறது!" என்று கைகொட்டிச் சிரித்தான் கனகலிங்கம்.

சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தார்கள். பிறகு, "இன்னொரு விஷயம் தெரியுமா, உனக்கு?" என்று மறுபடியும் பேச்சை ஆரம்பித்தான் கனகலிங்கம்.

"சொன்னால்தானே தெரியும்?" என்றான் ராதாமணி.

"எனக்கு வேலை போய்விட்டது......!"

"ஏன்டா!"

"அது பெரிய கதை!"

"அந்தக் கதையைத்தான் கொஞ்சம் சொல்லேன்?"

"இப்பொழுது வேண்டாம்; இரவு படுத்துக்கொள்ள வருகிறாயே, அப்பொழுது சொல்கிறேன்" என்றான் கனகலிங்கம்.

"சரி" என்று சொல்லிவிட்டு, ராதாமணி தன் வீட்டுக்குச் சென்றான்.

* * *

அன்றிரவு மணி ஒன்பதுக்கு மேலிருக்கும். அகல்யாவை உள்ளே படுத்துக் கொள்ளச் சொல்லிவிட்டு, வாரந்தாவில் பாயைக் கொண்டுவந்து விரித்தான் கனகலிங்கம். அந்தச் சமயத்தில் எங்கிருந்தோ 'மியாவ், மியாவ்' என்று கத்தியவண்ணம் பூனையொன்று வாலைக் குழைத்துக்கொண்டு வந்தது. அகல்யா ஓடோடியும் வந்து அதைப் பிடித்துக்கொண்டு உள்ளே சென்றாள்.

"இந்நேரத்தில் பூனையை எதற்காகப் பிடித்துக்கொண்டு போகிறாய்?" என்று கேட்டான் கனகலிங்கம்.

"என்னைக் கண்டால் உங்களுக்குப் பயமாயிருக்கும்போது, உங்களைக் கண்டால் எனக்குப் பயமாயிருக்காதா?—அதனால் 'இந்தப் பூனையாவது நமக்குத் துணையாயிருக்கட்டுமே' என்று பிடித்துக்கொண்டு போகிறேன்!" என்றாள் அகல்யா.

"'இனிமேல் பேசினால் கேளுங்கள்!' என்று சொன்னதை மறந்து, இப்பொழுது நீ என்னுடன் பேசிவிட்டாய் போலிருக்கிறதே!" என்றான் கனகலிங்கம்.

இருவரும் சிரித்தார்கள்.

இந்தச் சமயத்தில் ராதாமணி அங்கு வந்து சேரவே, அகல்யா 'சட்'டென்று தலையை உள்ளுக் கிழுத்துக்கொண்டு விட்டாள்.

கனகலிங்கம், அவனை அழைத்துக் கொண்டு மேலே சென்றான்.

அங்கே, தன்னுடைய கதையைக் கலைஞானபுரத்திலிருந்து ஆரம்பித்துச் சென்னையில் கொண்டுவந்து முடித்தான் அவன்.

எல்லாவற்றையும் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்துவிட்டு, "அட, பாவி! இனிமேல் நீ என்ன செய்யப்போகிறாய்?" என்று கேட்டான் ராதாமணி.

"நானும் அதையேதான் உன்னிடம் கேட்க வேண்டுமென்று இருந்தேன்....."

"எதை.....?"

"இனிமேல் நான் என்ன செய்யவேண்டும் என்பதைத்தான்!"

"உனக்கு எல்லாம் வேடிக்கையாயிருக்கிறது, தம்பி!—அது எப்போது தெரியும்?—போகப் போகத்தான் தெரியும்" என்று சொல்லிக் கொட்டாவி விட்டுக்கொண்டே, ராதாமணி கீழே இறங்கினான்.

அப்போது மாடிக் கதவை லேசாகத் திறந்து யாரோ எட்டிப் பார்ப்பதுபோலிருக்கவே, "யார், அது?" என்று கேட்டுக் கொண்டே அவன் விரைந்தான்.

அடுத்த நிமிஷம் அந்த ஆசாமி விழுந்தடித்துக் கொண்டு ஓடும் சத்தம் கேட்டது!

அவ்வளவுதான்; அந்தச் சத்தத்தைத் தொடர்ந்து, "யார் அது, யார் அது?—யார் அது, யார் அது?" என்ற கேள்விகள் அடுத்தடுத்து எழுந்தன.

அகல்யா பரபரப்புடன் வெளியே வந்து பார்த்தாள்.

ராதாமணியும் கனகலிங்கமும் அவனைத் தொடர்ந்து ஓடினர். ஆனால் அவன் பிடிபடவில்லை; அதற்குள் மாயமாய் மறைந்து விட்டான்!

"சுதந்திரம் வந்தாலும் வந்தது; நகரில் திருடர்களின் தொல்லை அதிகமாய்ப் போச்சு!" என்று 'விமர்சனம்' செய்து கொண்டே ராதாமணி வந்து படுத்தான்; அவனுக்குத் தூக்கம் வந்துவிட்டது.

அவனைத் தொடர்ந்து வந்த கனகலிங்கம் மாடிக் கதவைத் 'தடா'லென்று சாத்தித் தாளிட்டுவிட்டு வந்து படுத்தான். அவனுக்குத் தூக்கம் வரவில்லை; 'ஒருவேளை இன்று வந்தவனும், கலைஞானபுரத்தில் அன்று வந்தவனும் ஒரே ஆளாயிருக்குமோ!' என்று அவன் எண்ணமிடலானான். (தொடரும்)

# கல்யாணப் பரிசு

ரா பா.

அந்தக் கடிதம் நாராயணனின் கையில் கிடைத்ததும் அவன் எண்ணத்தில் மண் விழுந்தது போலாயிற்று. முற்போக்கான கொள்கையையுடைய தன் தந்தையே தன் விருப்பத்துக்குத் தடை போட்டது அவனுக்குச் சொல்லொணாத் துன்பத்தை யளித்தது. பெரிய அந்தஸ்திலிருப்பவர்கள் தங்கள் பிள்ளைகளுக்கு ஏழைப் பெண்களை மணம் செய்து கொள்ள மறுப்பதெல்லாம் கதைகளில் வரும் வறட்டுக்கற்பனையே என்று பகற் கனவு கண்டு வந்த நாராயணனுக்கு அம்மாதிரிச் சம்பவம் ஒன்று தன் வாழ்க்கையிலேயே குறுக்கிட்டது ஆச்சரியமா யிருந்தது. அதிலிருந்து பிறந்த ஒரு துணிச்சல் அவன் மனத்தில் ஒரு உறுதியான தீர்மானத்தை உருவகப்படுத்தியது.

தன்னுடைய தங்கைகள் இருவருக்கும் கல்யாணம் செய்ததனால் ஏற்பட்ட ஏழாயிரம் ரூபாய்ச் செலவையும் தன் கல்யாணத்தின் மூலம் ஈடு செய்ய விரும்பிய தந்தையை ஓரளவு வெறுக்கவும் செய்தான் அவன். தந்தையின் திரண்ட செல்வத்துக்கு ஒரே வாரிசான தானே வரதட்சணை வாங்குவது கேவலமாகப் பட்டது அவனுக்கு. பிறந்தது முதல் அதுவரை அப்பாவின் சொல்லுக்கு இரண்டு சொல்லாத அவன், இந்த விஷயத்தில் மட்டும் தன் உறுதியைத் தளர்த்த விரும்பவில்லை.

*　　　*　　　*

ஆறு மாதங்களுக்கு முன்பு நிகழ்ந்த ஒரு எதிர்பாராத சம்பவத்தின் விளைவுதான் இது. அப்போது அவன் எஞ்ஜினீயரிங் காலேஜில் கடைசி வருஷ வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான். புரசவாக்கத்தில் ஒரு தனியறையில் வாசம்; ஹோட்டலில் சாப்பாடு. கவலையற்ற அமைதியான வாழ்க்கை கல்லூரியில் படிக்கும் சில வருஷங்களில்தானே கிட்டுகிறது! அதன் பிறகுதான் எத்தனையோ தொல்லைகள் காத்துக் கிடக்கின்றனவே—மனிதனை அரித்துத் தின்ன!

சாப்பிட்டு விட்டு நாற்காலியில் வந்து அமர்ந்த நாராயணன், "ஸார்!" என்ற குரல் கேட்டுத் திரும்பினான்.

"உருப்படிகளெல்லாம் சரியா இருக்குதான்னு பார்த்து எடுத்து வையுங்க!" என்று சொல்லிக் கையிலிருந்த துணி மூட்டையை மேஜைமீது வைத்தான் லாண்டரியி லிருந்து வந்த பையன்.

துல்லியமாகச் சலவை செய்யப்பட்டு வந்திருந்த தன் துணிமணிகளை ஒவ்வொன்றாக எடுத்துச் சரி பார்த்துக்கொண்டே வந்தவன், அந்த மேஜை விரிப்பைப் பார்த்ததும் பிரமித்துவிட்டான். அது அவனுடையதல்ல. அதன் மத்தியில் 'டி. என்.' என்று பச்சை நூலினால் 'எம்ப்ராய்டரி' செய்யப்பட்டிருந்த எழுத்துக்கள் அவன் திகைப்பை அதிகமாக்கின. காரணம், அவன் பெயரைக் குறிக்கும் அதே 'டி. என்.' என்ற எழுத்துக்கள் அந்த விரிப்பின்மீது காணப்பட்டதுதான். அதன் அழகு அவன் மனதைக் கவர்ந்தது. அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டுத் தன்னுடைய விரிப்பைப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்ற நினைப்பே அவனுக்கில்லை. அதைத் தன்னிடமே வைத்துக் கொண்டுவிட வேண்டுமென்று ஆவல் அடித்துக்கொண்டது.

"என்ன, சாமி! இன்னும் எம்மா நேரம் பார்க்கணும்! ஒங்க துணியை ஒங்களுக்கே அடையாளம் கண்டுக்க முடியல்லியா! காசை எடுங்க, நான் போகணும்" என்ற பையனின் துடுக்கான மொழிகளைச் செவி மடுத்ததும் சில்லறையைக் கொடுத்துப் பையனை அனுப்பினான்.

அவன் போனபின் வெகு நேரம் அந்த விரிப்பைக் கையில் வைத்துக்கொண்டு அழகு பார்த்தான். கடைசியாக அதைத் தன் மேஜைமீது விரித்துவிட்டு, அறையைப் பூட்டிக்கொண்டு கல்லூரிக்குச் சென்றுவிட்டான். அன்று மாலை திரும்பி வந்தபோது, தன்னை எதிர்நோக்கி ஒரு யுவதி காத்துக் கொண்டிருந்ததைப் பார்த்ததும் அவனுக்கு ஒருகணம் ஏதோ பிரமை பிடித்தது போலிருந்தது.

"இந்த 'டேபிள் க்ளாத்' உங்களுடையதுதானா! லாண்டரி பையன் தவறிக் கொடுத்து விட்டான். இதைப் பாருங்கள்!" என்று கூறியபடியே தன் கையிலிருந்த மேஜை விரிப்பை நீட்டினாள் அவள்.

பாதாதிகேசம் அவளை ஒரு முறை பார்த்தான் நாராயணன். அவளுடைய அபூர்வமான எழிலில் லயித்த தன் கண்களை அகற்றவே முடியவில்லை அவனால்.

அந்த அறை முழுவதையும் அந்த ஒரு நொடிப் பொழுதில் பார்வையிட்டு விட்டாள், அந்த யுவதி.

"அதோ! அந்த மேஜையின் மேலுள்ளதுதான் என் விரிப்பு. தயவு செய்து இதை எடுத்துக்கொண்டு அதைக் கொடுக்கிறீர்களா!" என்று மறுபடியும் அவனைப் பார்த்து அவள் கேட்டவுடன்தான் நாராயணனுக்குச் சுய உணர்வு வந்தது.

"ஓ! பேஷாகத் தருகிறேன்! உங்கள் பொருளை உங்களிடம் கொடுக்க மறுக்க முடியுமா! இதன்மேலும் 'டி. என்.' என்ற எழுத்துக்கள் இருப்பதால்தான் பையன் இந்தத் தவறுதலைச் செய்திருக்க வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே தன் மேஜையின்மீதுள்ள விரிப்பை எடுத்து அந்தப் பெண்ணிடம் கொடுத்தான் அவன்.

"எழுத்துக்கள் ஒன்றாக இருந்தால் பிறர் பொருள் உங்களுடையதாகிவிடுமா! இரண்டு விரிப்புக்கும் உள்ள வித்தியாசம் உங்களுக்குப்

புலப்படவேயில்லையாக்கும்!'' என்று லேசாக அவள் முணுமுணுத்தது அவன் கூர்மையான செவிகளில் சரியானபடி விழுந்து தாக்கியது. சௌந்தர்யமே உருவெடுத்தாற்போன்று தன் கண்ணெதிரே நின்று பேசும் பொற் சித்திரமான அந்த யுவதியின் குத்தலான பேச்சு அவன் தோல்வியை மிகைப்படுத்திக் காட்டியது.

''இல்லை.....அதன் ஓரங்களில் எம்ப்ராய்டரி செய்யப்பட்டிருந்தது. அது அவ்வளவு தூரம் என் மனதைக் கவர்ந்துவிட்டது. அதனால் தான்....''

''அழகாயிருப்பதால் மட்டும் அது உங்கள் வசமாய்விடுமோ! பிறர் பொருளை அதன் சொந்தக்காரர்கள் அறியாவண்ணம் உபயோகிப்பதும் ஒருவிதத்தில் திருட்டுத்தனம் தானே!'' என்று குறுக்கிட்டாள் அவள். அவனுக்குண்டான திகைப்பில் மறுமொழி சொல்லக்கூட இயலவில்லை. அவள் போய் விட்டாள், தன் விரிப்பை எடுத்துக்கொண்டு.

அதன்பின் அவன் வெகு நேரம் சிந்தித்த வண்ணமே இருந்தான். அவள் கூறிய மொழிகளனைத்தும் அவன் செவிகளில் இடைவிடாது ரீங்காரம் செய்தவண்ணமிருந்தன. அவன் நினைத்தான்:

'ஏன், நீகூடத்தான் அழகாயிருக்கிறாய்! உன்னையே எனக்குச் சொந்தமாக்கிக் கொண்டாலோ....!'

அந்த அழகி நளினியின் நெஞ்சைத் தன்பால் இழுக்க அவன் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பல. அவன் படித்த காதற் காவியங்களின் கதாநாயகர்களான மஜ்னுவும், ரோமியோவும் அவன் கனவில் அடிக்கடி தோன்றி அவன் முயற்சியில் வெற்றியடைய உதவினர். இரு உள்ளங்களிலும் காதல் பரிணமித்தது. ஆனால் அரும் பாடுபட்டு அவன் கட்டிய காதற்கோட்டை, தந்தையின் வரதட்சணைக் குண்டு பட்டுத் தகர்ந்து விடும் என்று அவன் எதிர்பார்க்கவேயில்லை. எதிர்பார்க்கிறபடியெல்லாம் காரியங்கள் நடந்தேறிவிட்டால்தான் எவ்வளவோ தேவலையே!

## 2

நளினியிடம் பிரியா விடை பெற்றுக் கல்கத்தாவுக்குப் புறப்பட்டுச் சென்ற நாராயணனின் 'பிளான்' சரியானபடி வேலை செய்தது. கல்கத்தாவுக் கருகில் நடைபெற்ற ஒரு பிரம்மாண்டமான அணைக்கட்டுத் திட்டம் லட்சக்கணக்கான ஏழைத் தொழிலாளிகளின் பசிப்பிணியைப் போக்க உதவியதுபோல, நாராயணனுக்கும் ஒரு உதவி எஞ்சினீயர் வேலையை அளித்தது. மாதம் நானூறு ரூபாய் சம்பளம். அதில் வாயைக் கட்டி, வயிற்றைக் கட்டி எப்படியோ பாதிக்குமேல் மிச்சம் பிடித்து விட்டான். வருஷக் கடைசியில் கிட்டத்தட்ட இரண்டாயிரத்துக்கு மேல் அவன் பாங்குக் கணக்கில் குவிந்து விட்டது. இன்னும் இரண்டு மூன்று மாதங்கள் உழைத்தால் முழுசாக மூவாயிரம் ரூபாய் சேர்ந்துவிடும்; அதைக் கொண்டு போய் நளினியின் தாயாரிடத்தில் கொடுத்துவிட்டால் அதையே தன் தந்தையிடம் வரதட்சணையாகக் கொடுத்துத் தன்னை விலை பேசிவிட முடியுமல்லவா!

நளினியைக் காண விரைந்த நாராயணனின் உள்ளத் துடிப்பை அறிந்து கொண்டுதானோ என்னவோ, சென்னையை நோக்கி ஓடிக் கொண்டிருந்த அந்த மெயில் வண்டி முக்கால்வாசி நிலையங்களில் நில்லாது கடும் வேகத்துடன் ஓடியது. அப்படித் தலைகால் தெரியாமல் ஓடியதால்தானோ என்னவோ — அவ்வளவு நேரம் தண்டவாளத்தின் மீது ஓடிக் கொண்டிருந்த வண்டி இருப்புப் பாதையை விட்டு நழுவிக் கீழே சரிந்து புரண்டு நொறுங்கியது.

வெகு நேரம் இப்படிக் கனவு கண்டு விட்டுக் கண்ணயர்ந்த நாராயணன், பூகம்பமே ஏற்பட்டுவிட்டது போன்ற உணர்ச்சியால் தாக்கப் பட்டுத் திடீரென்று கண் விழித்தான். தன்னைச் சுற்றிலும் ஒரு முறை பார்த்தபோது மூலைக்கு மூலை சிதறிக் கிடந்த கண்ணாடித் தூள்கள் அந்த மங்கிய நிலவொளியில் பளிச்சிட்டன. பிரயாணிகளின் கூக்குரல் அங்கே ஒரு நரகத்தையே சிருஷ்டித்து விட்டது. திடீரென்று ஏதோ நினைவு வந்தவனாய் மிகவும் சிரமப் பட்டுத் தான் இருந்த இடத்தை விட்டு எழுந்து தன் கைப்பெட்டியைத் தேடலானான்.

கடலில் கைதவறி விழுந்த ஊசியையும் தேடிவிடலாம் போலிருந்தது, அந்தச் சூழ்நிலையில் தன் கைப் பெட்டியைத் தேடுவதிலுள்ள சிரமம்! வெகு நேரம் இங்குமங்கும் அலைந்த பின் யாதொரு பலனுமில்லாது போகவே, எல்லையற்ற வேதனை இதயத்தை அழுத்த அருகிலுள்ள ஸ்டேஷனை நோக்கி நடக்க ஆரம்



பித்தான். 'ஐயோ!' என்ற ஒரு கூக்குரல் திடீரென்று கேட்டதும் குனிந்து பார்த்தான். தன் காலடியில் ஒரு வாலிபன் ஸ்மரணையற்றுக் கிடந்தான். அவனைத் தூக்கித் தன் மடியில் அவன் தலையை வைத்துக்கொண்டு வெகுநேரம் மேல் துண்டினால் விசிறியபின் அவன் சுய உணர்வு பெற்றான்.

மிரள, மிரள விழித்துப் பார்த்த அவனைப் பரிவோடு ஒரு தடவை கவனித்த நாராயணன் துணுக்குற்றான். அவனுடைய இடது கையையே காணோம்! தோள்பட்டைக் கருகில் தொட்டுப் பார்த்ததில் ரத்தக் கசிவையும் காணோம்! அவனுடைய பீதியையும் ஆச்சரியத்தையும் கவனித்த அந்த வாலிபன் கூறினான்:

"இந்தக் கை போனதற்கும் இந்த விபத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. பத்து வருஷங்களுக்கு முன்பு என் தந்தை இறந்தவுடன் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தேன், ஏதாவது வேலை தேடிக் கொள்ளும் நோக்கத்துடன். மெட்ரிகுலேஷன் பரீக்ஷையிலேயே தவறி விட்ட எனக்குப் பட்டணத்திலே எங்கேயாவது உத்தியோகம் கிடைக்குமா? அப்படி வேலையே கிடைத்தாலும் ஒரு ஜீவன் உயிர் வாழத் தேவையான சம்பளம் கூடக் கிடைக்காதே! ஏதோ, என் அதிருஷ்டம் தான், உங்களைப்போன்ற ஒரு நண்பர் கிடைத்தார் வந்த இடத்தில். சேட் கோவிந்தராம் மில்லில் ஒரு வேலைக்குச் சிபாரிசு செய்தார். அன்று கிடைத்த வேலையைக் கண்ணுங் கருத்துமாகச் செய்து வந்தேன், மூன்று மாதங்களுக்கு முன்னர் வரை......!"

"ஏன், இப்போது அந்த வேலை போய் விட்டதோ!" என்றான் நாராயணன்.

"அதைத்தானே சொல்ல வந்தேன்! மூன்று மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் எங்கள் ஆலையின் முதலாளி தன் மனைவியுடனும் நாலு வயதுப் பையனுடனும் ஆலைக்கு விஜயம் செய்தார். ஒவ்வொரு இடமாகப் பார்த்துக் கொண்டே வந்தவர், 'மெஷின் ஷாப்'புக்கு அருகில் வந்ததும் தன் பையன் பின்தங்கி விட்டதைக் கவனியாமல் மனைவியுடன் முன்னால் சென்று விட்டார்.

"அந்தப் பையனுக்கு வால்தான் வைக்கவில்லை, பாருமே! நிமிஷத்துக்கு இருநூறு தடவைக்குமேல் சுழலும் அந்தச் சக்கரத்துக்கருகில் கையைக் கொண்டு போய் விட்டான். இதை நான் சற்றுத் தொலைவிலிருந்தே கவனித்து விட்டேன். ஒரே பாய்ச்சலில் அங்கு ஓடிப் பையனைப் பின்னாலிழுத்து விட்டேன். ஒரு கணம் தாமதித்திருந்தால் பையன் போயிருப்பான்! சேட் கோவிந்த ராமின் நல்ல காலம் பையனுக்கு ஆபத்தில்லாமல் போயிற்று. ஆனால் என் துரதிருஷ்டம்.... ஓடிய வேகத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் போய் என் இடது கை சக்கரத்தில் அகப்பட்டுத் துண்டிக்கப்பட்டு விட்டது.

"மூன்று மாதச் சிகிச்சைக்குப்பின், இரண்டு நாட்களுக்கு முன்புதான் நான் ஒற்றைக் கையுடன் ஆஸ்பத்திரியிலிருந்து விடுதலை பெற்றேன்" என்றான் அவன்.

அவனுடைய சோகக் கதை தனக்கு ஏற்பட்ட பண நஷ்டத்தைவிட அதிக வேதனை யளித்தது நாராயணனுக்கு. அனுதாபம் நிறைந்த வார்த்தைகள் ஏதாகிலும் அவனோடு பேச வேண்டுமென்று நினைத்தான். ஆனால் என்ன பேசுவது! "ஐயோ பாவம்! வேலைக்கு வேலையும் போய்க் கையையும் இழந்துவிட்டீர்களே!" என்ற வார்த்தைகள் தான் அவன் வாயினின்றும் வெளி வந்தன.

"வேலை போனதால் பரவாயில்லை. சேட் கோவிந்த ராம் இதயமுள்ள முதலாளி. எனக்கு நஷ்ட ஈடாக ரூபாய் நாலாயிரம் கொடுத்தார்" என்று சொல்லிவிட்டுத் தன் பையிலிருந்த ஒரு உறையைச் சற்றே வெளியே எடுத்துச் சரி பார்த்துக் கொண்டான் அவன். திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவனாய், "ஆமாம்; இவ்வளவு தூரம் என்னைப்பற்றித் தெரிவித்து உம்மையும் கஷ்டத்துக்குள்ளாக்கி விட்டேனே, தங்களைப்பற்றி நான் அறிந்து கொள்ளலாமா!" என்று கேட்டான் அந்த வாலிபன்.

நாராயணன் கூறினான்:

"ஒரு பெண்ணுக்கு வரதட்சிணை கொடுத்துக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டி ஒரு வருஷம் கல்கத்தாவில் வந்து உழைத்து மூவாயிரம் ரூபாய் சேர்த்தேன். வெண்ணெய் திரண்டு வரும் சமயத்தில் தாழி உடைந்ததைப் போல், பணத்துடன் சென்னைக்குத் திரும்பும்போது அது எங்கேயோ தொலைந்து விட்டது—இப்போது நிகழ்ந்த இந்த விபத்தில்தான்!" என்று கூறிவிட்டுத் தண்டவாளங்களைப் பெயர்க்கும் சதிகாரக் கும்பலை வாய் கொண்ட மட்டும் சபித்தான் நாராயணன்.

## 3

பக்கத்து ஸ்டேஷனிலிருந்து மறுநாள் காலை கிளம்பிய டிரெயினில் இருவரும் சென்னை வந்து சேர்ந்தார்கள். சென்ட்ரலில் இறங்கியவுடன், "நீங்கள் எங்கே போக வேண்டும்!" என்றான் நாராயணன் தன் புதிய நண்பனைப் பார்த்து.

"புரசவாக்கம்" என்ற அவன் பதில் அவனுக்குத் திகைப்பூட்டியது.

"புரசவாக்கமா! நானும் அங்கேதான் போகவேண்டும். எந்தத் தெரு!"

"ரெட்டியார் தெரு, 233-ம் நம்பர். அங்கே தான் ஒரு போர்ஷனில் என் தாயாரும், தங்கை நளினியும் வசிக்கிறார்கள்!" என்ற அவன் பதில் முழுவதையும் அவன் கேட்டானா என்பது அவனுக்கே சந்தேகம்தான்!

நாராயணன் தன் வருங்கால மைத்துனனை நளினிக்கு அறிமுகப்படுத்தி வைத்தபோது, "உனக்கொரு பரிசு கொண்டு வந்திருக்கிறேன்; விலை மதிப்பில்லாதது!" என்றான் அவளிடம்.

"வரதட்சிணைப் பணம்தானே!" என்று கேட்டாள் அவள்.

"அது பெரிய கதை. அதைச் சொல்லவில்லை. பத்து வருஷங்களாகப் பிரிந்திருந்த உன் அண்ணனை உன்னிடம் சேர்ப்பித்து விட்டேனல்லவா! எப்படி என் திருமணப் பரிசு!" என்று கேட்டுவிட்டு, அவள் கன்னங்கள் சிவந்து குழிவதைப் பார்த்து உள்ளம் மகிழ்ந்தான் நாராயணன்.

# யுத்த கேந்திரம்



ஜெயமணி

சமீபத்தில் யுத்தம் ஏற்படுவதற்கு முன் கொரியா தேசம் எத்தகைய கொந்தளிப்பான நிலையில் இருந்ததோ அதே நிலையில்தான் இன்று இந்தோ சீனாவும் இருந்து வருகிறது.

கொரியாவைப் போல் இந்தோ சீனாவிலும் இரண்டு சர்க்கார்கள் இருக்கின்றன. கொரியாவைப் போலவே இந்தோ சீனாவில் ஒரு சர்க்காருக்கு ருஷ்யாவின் அனுதாபமும், மற்றொரு சர்க்காருக்கு பிரான்ஸ், பிரிட்டன், அமெரிக்கா முதலிய வல்லரசுகளின் ஆதரவும் இருக்கின்றன.

இரு சர்க்கார்களும் யுத்த சன்னத்தமாக இருந்து வருவதால், அத்தகைய நிலைமை இறுதியில் எப்படி வந்து முடியுமோ!

இதற்கு முன் ஆஸ்திரேலியா, இந்தோனேஷ்யா, பர்மா, கொரியா, மலேயா, சயாம் முதலிய நாடுகளைப் பார்த்தோம். குமுறிக் கொண்டிருக்கும் தென் கிழக்கு ஆசியா கேந்திர நாடுகளில் ஒன்றான இந்தோ சீனாவுக்கு இப்போது சென்று பார்க்கலாம்.

## 7. இந்தோ சீனா

கிறிஸ்துவ சகாப்தத்துக்கு முன்னும் பின்னும் ஆயிரத்து நானூறு வருஷ காலத்துக்குத் தென்கிழக்கு ஆசியா நாடுகளில் ஹிந்து சாம்ராஜ்யமும் பௌத்த சாம்ராஜ்யமும் பரந்து விளங்கின என்று யுத்தகேந்திரத் தொடரில் ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. மேற்படி நாடுகளில் அந்த சாம்ராஜ்யங்களால் நிர்மாணிக்கப்பட்ட நகரங்களும் ஆலயங்களும் இன்னும் இருக்கின்றன; அவைகளால் ஸ்தாபிக்கப்பட்ட நாகரிகம், கலாசாரம் இவற்றின் சின்னங்கள் இன்னும் அழியாமல் இருந்து வருகின்றன.

சோழ, சேர, பாண்டிய நாடுகளிலிருந்தும் கலிங்கம், வங்கம், கூர்ஜரம் முதலிய இடங்களிலிருந்தும் அந்த நாடுகளுக்கு ஹிந்துக்கள் சென்று அங்கு தங்களுடைய மதத்தையும் சாம்ராஜ்யத்தையும் ஸ்தாபித்தார்கள் என்பதற்குக் கற்களால் நிர்மாணிக்கப்பட்ட அசைக்க முடியாத ஆதாரங்கள் இருப்பதால் எவ்வளவு காலமாயினும் அதை யாரும் மறுப்பதற்கில்லை. அந்த இடங்களில் பல்லவ வம்சத்தினர் வெகுகாலம் ஆட்சிபுரிந்து வந்தார்கள் என்று சரித்திரங்கள் கூறுகின்றன. இந்தோ சீனாவிலுள்ள காம்போஜா, அன்னம் மாகாணத்திலுள்ள சம்பா முதலிய இடங்களே அதற்கு அத்தாட்சியாக விளங்குகின்றன.

இவற்றைத் தவிர, கிறிஸ்துவ சகாப்தத்துக்குப் பின் மூன்றாவது நூற்றாண்டில் இந்தோ சீனாவில் ஹிந்துக்களால் பாண்டுரங்கம் என்ற நகரம் நிர்மாணிக்கப்பட்டது. அதிலிருந்து இருநூறு வருஷங்களுக்குப் பிறகு காம்போஜா பிரபலமாக விளங்கியது. அங்குதான் ஹிந்துக்கள் பிரம்மாண்டமான கட்டிடங்களையும் ஆலயங்களையும் நிர்மாணித்தார்கள். இந்தியாவிலிருந்து சிறந்த சிற்பிகளையும் கட்டிட நிபுணர்களையும் அந்தக் காலத்தில் அந்த நாடுகளுக்கு அழைத்துச் சென்ற இந்திய மன்னர்களின் தைரியத்தையும், தேசப் பற்றுதலையும், பெருமையையும் என்னவென்று சொல்வது?

எனினும், அந்த மன்னர்களிடையும் களங்கம் இருக்கத்தான் செய்தது. தென் கிழக்கு ஆசியா நாடுகளில் தங்களுடைய சாம்ராஜ்யத்தை ஸ்தாபித்த ஹிந்து மன்னர்களும் பௌத்த மன்னர்களும் அடிக்கடி பரஸ்பரம் போரில் ஈடுபட்டார்கள். வர்த்தகப் போட்டா போட்டி காரணமாக இன்று வல்லரசுகள் போரில் இறங்குவதைப்போல், அக்காலத்திலும் வர்த்தகப் போட்டி காரணமாக ஹிந்து சாம்ராஜ்யமும் பௌத்த சாம்ராஜ்யமும் அடிக்கடி மோதிக்கொண்டன.

மூந்நூறு வருஷ காலத்துக்குள் இந்தோ சீனாவிலே வெவ்வேறான மூன்று சாம்ராஜ்யங்கள் தோன்றி மறைந்தன என்றால், அந்த மன்னர்களுக்குள் இருந்து வந்த போட்டா போட்டியின் வேகத்தைத் தெரிந்து கொள்ளலாம்.

ஆனால் ஒன்பதாவது நூற்றாண்டிலே ஜயவர்மன் தோன்றி ஹிந்து பௌத்தர்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்தி ஒரு பெரிய சாம்ராஜ்யத்தையும் உருவாக்கினான். ஜயவர்மன் அங்கோரில் நிர்மாணிக்க முற்பட்ட தலைநகரை அவனுக்குப்

பின் ஆட்சி புரிந்த யசோவர்மன் பூர்த்தி செய்தான். அவ்வாறாக நானூறு ஆண்டுகள் வரையில் காம்போஜா சாம்ராஜ்யம் சீரும் சிறப்பும் வாய்க்கப் பெற்றிருந்தது.

ஜயவர்மன், யசோவர்மனால் நிர்மாணிக்கப்பட்ட அங்கோர் ஆசியா முழுதும் 'மகத்துவம் பொருந்திய அங்கோர்' என்று பிரசித்திபெற்றது. சீஸர்கள் ஆண்ட காலத்தில் ரோம் நகர் எவ்வளவு சிறப்புடன் விளங்கியதோ அதைக் காட்டிலும் அதிகமாக அங்கோர் நகர் சிறப்பு பெற்றிருந்தது. அது அக்காலத்தில் பத்து லட்சம் ஜனங்களுக்கு மேற்பட்ட மாபெரும் நகரமாக மாண்புற்று விளங்கியது. அந்த நகரின் அருகில்தான் உலகப் பிரசித்தி பெற்ற அங்கோர் வாட் ஆலயம் அமைக்கப் பட்டிருக்கிறது.

அங்கோர் வாட் ஆலயத்தின் அழகையும் சிற்பச் சிறப்பையும் பற்றி எவ்வளவு புகழ்ந்தாலும் தகும். அதன் சிறப்பைப் பற்றி ஆங்கில சரித்திராசிரியர்கள் பக்கம் பக்கமாக எழுதி யிருக்கிறார்கள். ஒரு தெய்விக புருஷனின், கனவுதான் அவ்வாறு ஆலயமாக உருப்பெற்றிருக்கிறது

காலஞ் சென்ற அன்னம் சக்கரவர்த்தினி



என்று கூறியிருக்கிறார்கள். கிரீஸிலும் ரோமிலும் உள்ள உலகப் பிரசித்தி பெற்ற அற்புதமான கட்டிடங்களைக் காட்டிலும் அங்கோர் வாட் ஆலயம் அதிக கம்பீரம் வாய்ந்தது என்று அவர்கள் வர்ணித்திருக்கிறார்கள். இடிந்த அந்த ஆலயத்திலுள்ள ஒவ்வொரு கல்லும், ஒவ்வொரு சிற்பமும் அக்காலத்து மக்களின் உயர்ந்த நாகரிகத்தைக் காட்டுகிறது என்று ஒத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அவ்வாறாகக் காம்போஜா மிகவும் புகழ் பெற்று விளங்கியதால் அதைக் கண்டு பலரும் பொறாமை கொண்டு அதை நாலா புறத்திலும் தாக்க ஆரம்பித்தார்கள். கிழக்கே அன்னுமியர்கள் தாக்கினர்; மேற்கே மலே ஜாதியினர் தாக்கினார்கள்; ஷான் ஜாதியினர் வடக்கிலிருந்து தாக்கினார்கள். எனினும் மேற்படி தாக்குதல்களை காம்போஜா சாம்ராஜ்யம் சமாளித்து நின்றது. 1297-ம் வருஷம் காம்போஜா மன்னரிடம் அனுப்பப்பட்ட சீன தேசத் தூதர் அப்போது மேற்படி சாம்ராஜ்யம் இருந்த சிறப்பையும் பெருமையையும் பற்றிப் பரவசம் அடைந்து பிரமாதமாகப் புகழ்ந்திருக்கிறார்.

எனினும் செயற்கைத் தாக்குதல்களைச் சமாளித்து நின்ற காம்போஜா துரதிர்ஷ்டவசமாகத் திடீரென்று இயற்கையின் கோபத்துக்கு ஆளாக நேர்ந்தது.

இயற்கை, எரிமலை ரூபமாகத் தீயைக் கக்கவில்லை. அங்கு பூகம்பமோ, புயல் காற்றோ, பெருமழையோ ஏற்படவில்லை. வேறொரு விசித்திரமான உற்பாதம் தன் நாச வேலையை ஆரம்பித்தது.

இந்தோ சீனாவின் முக்கிய நதிகளில் ஒன்றான மேகாங்கில் எங்கிருந்தோ மலை போல் மண் வந்து அடைத்துக் கொண்டது. அதனால் நதியில் தண்ணீரின் ஓட்டம் தடைப்பட்டது. தண்ணீர் தேங்கியதுடன் நில்லாமல் வாயால் வழிந்து அழகிய அங்கோர் நகரம் முழுவதையும் அலங்கோலமாக்கி விட்டது. அதனால் கட்டிடங்கள் நாசமாயின; ஜனங்கள் துன்பத்துக்கு ஆளானார்கள். வளம்பொருந்திய வயல்கள் எல்லாம் ஏரியாக மாறிவிட்டன.

ஜனங்கள் பட்டினி கிடக்கும்படியான நிலைமை ஏற்பட்டதால் அவர்கள் எல்லோரும் வேறிடங்களுக்குக் குடியேறினார்கள். பின்னர் காலக்கிரமத்தில் அங்கோர் நகரம் காடாக மாறிவிட்டது. நாகரிக மக்கள் வாழ்ந்த அந்த இடம் கொடிய காட்டு மிருகங்களுக்குப் புகலிடமாகியது!

இயற்கையின் கோபாவேசத்தினால் அவ்வாறாக அந்த நகரம் சில வருஷங்களில் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

எனினும் இடிந்து கிடக்கும் அங்கோர் வாட் ஆலயம் அதன் பழைய பெருமை

யைப் பறை சாற்றும் நிலையில் இன்று கூடக் கம்பீரமாகக் காட்சியளிப்பது தான் ஆச்சரியமாகும்.

*　　　*　　　*

சுமார் மூன்று லட்சம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ள இந்தோ சீனாவில் இரண்டரைக் கோடி ஜனங்கள் வசிக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் அன்னாமியர்கள் ஆவர். அன்னாமியர்களுக்கு அடுத்தபடியாக அதிக ஜனத்தொகையுள்ள சமூகத்தினர் கம்போடியர்கள் தான். இந்தோ சீனாவில் உள்ள மொத்த ஜனங்களில் தொண்ணூறு சத விகிதத்துக்கு மேற்பட்டவர்கள் விவசாயத்தையே ஜீவனமாகக் கொண்டிருக்கிறார்கள்.

அன்னாமியர்களின் பாஷை சற்றேறக்குறைய சீன பாஷையையே ஒத்திருக்கிறது. சீன மகான் கன்பூஷியஸ்ஸின் உபதேசங்களையே அன்னாமியர்கள் வாழ்க்கையில் பின்பற்றி வருகிறார்கள்.

ஆனால் கம்போடியர்களின் கலாசாரம் இந்தியக் கலாசாரத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. அவர்கள் பௌத்த மதத்தைப் பின்பற்றி வருகிறார்கள்.

அந் நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களில் நெல்தான் முதல் ஸ்தானம் வகிக்கிறது. அதற்கு அடுத்தபடியாக ரப்பர், தேயிலை, காப்பி முதலியவை ஏராளமாக விளைகின்றன. பர்மாவுக்கு அடுத்தபடியாக இந்தோ சீனாதான் வெளிநாடுகளுக்கு ஏராளமாக அரிசி ஏற்றுமதி செய்கிறது. இந்தோ சீனாவிலிருந்து அன்னிய நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் பொருள்களில் மூன்றில் இரண்டு மடங்கு அரிசிதான்.

இந்தோ சீனா கைத்தொழில்களில் பிற்போக்கானதாக இருந்து வருகிறது. அதற்குக் காரணம் அந்த நாட்டில் ஆதிக்கம் செலுத்திவரும் பிரஞ்சுக்காரர்கள்தான்.

அவர்கள் இந்தோ சீனாவின் கைத்தொழில் முன்னேற்றத்தில் சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லை. அங்கு உற்பத்தியாகும் மூலப் பொருள்களை யெல்லாம் பிரஞ்சுக்காரர்கள் சுயநலனை முன்னிட்டு வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து விடுகிறார்கள்.

விவசாயத்துக்கு அடுத்தபடியாக இந்தோ சீனாவில் முக்கிய ஸ்தானம் வகிப்பது சுரங்கத் தொழில் ஆகும். இந்தோ சீனாவின் மொத்த விஸ்தீரணத்தில் பாதிக்குமேல் மலைப் பிரதேசங்கள் என்பது இங்கு குறிப்பிடத் தக்கது. அந்த நாட்டில் வடக்கேயுள்ள மலைப் பிரதேசங்களில்தான் பெரும்பாலான சுரங்கங்களும் அமைந்திருக்கின்றன. அங்கு தங்கம், வெள்ளி, தாமிரம், இரும்பு, துத்தநாகம்,



இடிந்த கோவிலில் உள்ள நடனப் பெண் சிலை

ஈயம் முதலியவை உற்பத்தியாகும் சுரங்கங்கள் இருக்கின்றன.

இந்தோ சீனாவில் பெரும் பகுதியும் மலைப் பிரதேசங்களாக இருப்பதால் அங்கு ரயில் பாதைகள் போடுவது மிகவும் கஷ்டமான காரியம். எனவே, இன்று அந்த நாட்டில் ரயில் பாதைகளின் மொத்த நீளம் ஆயிரத்து முந்நூறு மைல்களுக்கு மேல் இல்லை. மேற்படி ரயில் பாதை கடற்கரையோரமாகச் செல்லுகிறது. அது சீனாவுடனும் சயாமுடனும் இணைக்கப்பட்டிருக்கிறது.

இந்தோ சீனாவிலுள்ள நதிகளும் போக்கு வரவுக்கு முக்கிய சாதனங்களாக விளங்குகின்றன. மலைகளையும் காடுகளையும் கடந்து செல்லும் குறுகிய பாதைகளில் போக்கு வரவுக்குக் கோவேறு கழுதைகளை உபயோகிக்கிறார்கள்.

ஆசியா நாடுகளில் எல்லாம் அன்னியர் ஆதிக்கத்தை எதிர்த்துச் சுதந்திர இயக்கம் தீவிரமாக இருந்ததைப் போல, இந்தோ சீனாவிலும் சுதந்திர இயக்கம் தீவிரமாக இருந்து வருகிறது. இந்த இயக்கம் 1941-ம் ஆண்டில் இந்தோ சீனா முழுவதும் பரவியது. அதன் பின் அந்த நாட்டை ஜப்பான் ஆக்கிரமித்துக் கொண்டிருந்த போது

இந்தோ சீன மக்களில் இருபது லட்சம் பேர் பட்டினியால் மாண்டார்கள்.

1945-ல் சென்ற மகாயுத்தம் முடிந்த பின் அன்னுமியர்கள் குடியரசுப் பிரகடனம் செய்தனர். இரண்டொரு மாகாணங்கள் மாத்திரமே அந்தக் குடியரசில் அடங்கி யிருக்கின்றன. அந்தக் குடியரசு தான் ஸ்ரீ ஹோ சி மின் தலைமையில் வியட்னும் என்று வழங்கப்பட்டு வருகிறது. ஹனுய் வியட்னும் குடியரசின் தலைநகராக இருந்து வருகிறது.

மேற்படி குடியரசைத் தகர்க்க பிரஞ்சுக்காரர்கள் செய்த முயற்சி பலிக்காததால் அவர்கள் வியட்னும் குடியரசை அங்கீகரித்து அதனுடன் 1945-ம் வருஷம் ஒப்பந்தம் செய்து கொண்டனர்.

எனினும் இந்தோ சீனவில் பிரஞ்சுக்காரர்கள் தங்களுடைய பிடியைக் கைவிட விரும்பாததால் அவர்கள் அன்னும் மாஜி சக்கரவர்த்தி பாவ் டாய் தலைமையில் ஒரு பொம்மை சர்க்காரை ஏற்படுத்தினார்கள். பாவ் டாய் சர்க்காரை டிரான்ஸ் ஜார்டன், தாய்லாந்து, தெற்கு கொரியா இந்த மூன்று நாடுகளைத் தவிர வேறு எந்த ஆசியா நாடும் அங்கீகரிக்கவில்லை என்பது குறிப்பிட தக்கதாகும்.

தமது சர்க்காரை அங்கீகரிக்கும்படி சில மாதங்களுக்கு முன் பாவ் டாய் இந்திய சர்க்காரைக் கேட்டுக் கொண்டது வாசக அன்பர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். ஆனால் ஆசியாவிலே அன்னியரின் ஆதிக்கத்தையும் காலனி முறையையும் இடைவிடாமல் கண்டித்து வரும் இந்தியா பிரான்ஸின் பொம்மை என்று கூறப்படும் பாவ் டாய் சர்க்காரை எப்படி அங்கீகரிக்க முடியும்?

ஹோ சி மின் சர்க்கார் தங்கள் நிர்வாகத்தின் கீழ் உள்ள பிரதேசங்களில் பல சீர்திருத்தங்களையும் முன்னேற்றகரமான முறைகளையும் அமுலுக்குக் கொண்டு வந்து இந்தோ சீன மக்களின் அன்புக்குப் பாத்திரமாகி யிருக்கிறார்கள். எனவே, பாவ்டாய் சர்க்காரும் போட்டியாகச் சீர்திருத்த முறைகளைக் கைக்கொள்ளும்படியான அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

கொரியாவில் ஏற்பட்டுள்ள யுத்தத்திலே ஹோ சர்க்கார் அமெரிக்காவைக் கண்டித்திருக்கின்றனர். பாவ் டாய் சர்க்கார் அமெரிக்காவே கொரியாவின் சுதந்திரத்துக்காகப் போராடுவதாய்ப் புகழ்ந்திருக்கிறனர். அதிலிருந்து ஒரே தேசத்தைச் சேர்ந்த அந்த இரண்டு சர்க்கார்களுக்கும் உள்ள பலத்த அபிப்பிராய பேதத்தைத் தெரிந்து கொள்ளலாம்.




1948-ம் வருஷத்தில் அந்த இரு சர்க்கார் துருப்புகளுக்கும் கோரமான போராட்டம் நடந்தது. மேற்படி போராட்டம் இப்போது நின்றிருக்கிறது. எனினும் இரண்டு சர்க்கார்களும் மீண்டும் போரைத் தொடங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகின்றனர் என்று தெரிகிறது. ஹோ சர்க்காருக்குச் சீனவிலிருந்து போர்த் தளவாடங்கள் வந்து கொண்டிருக்கின்றனவாம். பாவ் டாய் சர்க்காருக்கு உதவியாக அமெரிக்காவிலிருந்து வெடி குண்டு விமானங்களும் இதர யுத்த சாதனங்களும் வந்து கொண்டிருக்கின்றனவாம்.

நிற்க, அங்கு ஹோ சி மின் சர்க்காரின் கொரில்லாத் துருப்புகளுக்கும் பிரஞ்சுத் துருப்புகளுக்கும் இன்றும் உக்ரமான போராட்டம் நடந்து கொண்டு தான் இருக்கிறது.

எனவே, கொரியாவைப் போன்ற நெருக்கடியான நிலைமை இந்தோ சீனவிலும் உருவாகி வருகிறது என்பதை யாராவது மறுக்க முடியுமா?

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 307. கண் ஒளி மறைந்தது.

லக்ஷ்மணனது பெரிய பெரிய பாணங்களால்க் குதிரைகள் மாண்டன; யானைகள் மாண்டன; தேர்கள் நொறுங்கின.

அவைகளின் மேலிருந்த வீரர்கள் எல்லாரும் பைத்தியம் பிடித்தவர்கள் போல் அப்படி அப்படியே நின்று விட்டார்கள். சிலர் மெள்ள மெள்ள நடந்து போனார்கள்.

* * *

காலாட் படைகளுடைய கதி என்ன ஆயிற்று! உடம்பெல்லாம் காயமுற்று இரத்தம் இழந்து மூர்ச்சை ஆகி ஆயிரக் கணக்கான பேர் ஆங்காங்கு கிடக்கிறார்கள்.

அவர்களில்ச் சிலருக்குக் கொஞ்சம் மூர்ச்சை தெளிந்தது. விழித்துப் பார்த்தார்கள். பக்கத்தில் அன்பான மக்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்து, தாகத்துக்குத் தண்ணீர் கொண்டு வரச் சொன்னார்கள்.

தண்ணீர் கொண்டு வர எத்தனை எத்தனையோ மக்கள் ஆங்காங்கு ஓடினார்கள்.

தண்ணீர் வருவதற்கு முன்னமேயே ஆங்காங்கு சிலர் உயிர் விட்டார்கள்.

சிலருக்குத் தண்ணீர் வந்தது. தண்ணீரைப் பருகினார்கள். அப்படிப் பருகுவதைப் பார்த்துக் கொண்டிருந்த சிலர் அவர்களுக்கு இடையே மாண்டார்கள்.

இருகணும் திறந்துநோக் கி,
அயல்இருந்(து) இரங்கிவிம் மி
உருகுநம் காதலோ ரை,
உண்ணும்நீர் உதவும்என் றார்:
வருவதன் முன்னம்மாண் டார்;
சிலர்சிலர் வந்ததண் ணீர்
பருகுவார் இடையேபட் டார்;
சிலர்சிலர் பருகிப்பட் டார்.

[இருகணும் திறந்து நோக்கி: இரத்தம் இழந்து மூர்ச்சித்துப் போய்க் கிடந்தவர்களில் சிலருக்கு உணர்ச்சி கொஞ்சம் வந்தது. இரண்டு கண்களையும் விழித்துப் பார்த்தார்கள்; அயல் இருந்து இரங்கி விம்மி: பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு இரங்கி விம்மி உருகும் தம் மக்களைப் பார்த்து; உண்ணும் நீர் உதவும் என்றார்: குடிப்பதற்குத் தண்ணீர் கொண்டு வரச் சொன்னார்கள். மக்களும் எழுந்து போய் விட்டார்கள், தண்ணீர் கொண்டு வர.

வருவதன் முன்னம் மாண்டார்: தண்ணீர் வருவதற்கு முன்னமேயே மாண்டு போனார்கள் அந்த வீரர்கள்.

சிலர் சிலர் வந்த தண்ணீர் பருகுவார் இடையே பட்டார்: சிலருக்குத் தண்ணீர் வந்தது அதைப் பருகிக் கொண்டிருந்தார்கள்; அப்படிப் பருகிக் கொண்டிருந்தவர்களை பார்த்துக் கொண்டிருந்த சிலர் தங்களுக்குத் தண்ணீர் இல்லாமலே மாண்டார்கள்;

சிலர் சிலர் பருகிப்பட்டார்: மற்றும் சிலர் தண்ணீரைப் பருகினார்கள். பருகின மாத்திரத்தில் மாண்டு விழுந்தார்கள்.]

* * *

வேறு சில தந்தையர்கள் பாடு என்ன என்று பார்க்கலாம்.

அவர்களுக்கும் பல இடத்தில்க் காயம். ஆனாலும் அவர்களுடைய மக்களுக்கு அதை விடக் காயம். அவர்களை அந்த மக்களைத் தோளில்த் தூக்கிக் கொண்டு வேகமாக நடந்து போகிறார்கள்.

போகிற வழியில் தோளில் இருந்த படியே உயிர் போய் விட்டது மக்களுக்கு. மக்களது உடலை அப்படியே கீழே போட்டு விட்டு ஏதோ "பிழைத்தோம், பிழைத்தோம்" என்று ஓடினார்கள்.

மக்களைச் சுமந்துசெல் லும்
தாதையர், வழியின்ஆ வி
உக்கனர் என்னவி சித்,
தம்மைக் கொண்டோடிப்போ னார்:
கக்கினர் குருதிவா யால்க்,
கண்ஒளி மறையக்,கா லால்த்,
திக்கொடு நெறியும்கா ணார்,
திரிந்துசென் றுயிரும்தீர்ந் தார்.

[மக்களைச் சுமந்து செல்லும் தாதையர்: காயமுற்ற மக்களைச் சுமந்து நடந்து போன தந்தையர்; வழியின் ஆவி உக்கனர் என்ன: அந்த மக்களின் உயிர் போய்விட்டது என்பது தெரியவும்; வீசித் தம்மைக் கொண்டோடிப் போனார்: உயிர் போன உடலை அப்படியே கீழே போட்டு விட்டுத், தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்காக ஓடிப் போனார்கள்.

அப்படி ஓடிப் போகும்போது வாயாலும் இரத்தம் கக்கினார்கள். கக்கின மாத்திரத்தில் கண் பார்வை மறைந்து போய் விட்டது. பார்வை மறையவும் காலினால் தடவித் தடவி; திக்கொடு நெறியும் காணார்: திசை தெரியாமல், பாதையும் தெரியாமல் திரிந்து சென்று; உயிரும் தீர்ந்தார்: அப்படிப் போய் இப்படிப் போய்க் கடைசியில் உயிரை விட்டார்கள்.]

யுத்த களத்தின் கோரமான, பரிதாபமான நிலைமை என்ன என்று அபூர்வமான முறையில் எடுத்துக் காட்டுகிறார் கவிஞர்.

வர்ணனையில் தெளிவும் வேகமும் மிக அருமையாக வாய்த்திருக்கிறது.

# படித்துப் பாருங்கள்!

## தாய் தந்த செல்வம்

ஞானம் கனிந்துருகப் பாடியவர்கள் நம் முன்னோர்கள். அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், தாயுமானவர், அருணகிரிநாதர், சித்தர்கள்-ஆகியோர் தாங்கள் இறைவனுடன் பக்தி செய்து இரண்டறக் கலந்து எய்திய பேர் இன்பத்தைத் தீந்தமிழில் தேனினும் இனிய பாக்களில் பாடிவைத்து விட்டுச்சென்றிருக்கின்றனர். அந்த அனுபவங்களை இன்று பல்லாயிரக்கணக்கான மக்கள் எய்தி இன்புறச் செய்பவர் திருப்புகழ் மணி டி. எம். கிருஷ்ணசாமி ஐயரவர்கள். அவர்கள் அப்பாடல்களில் ஊறித் திளைத்துப் பாடும் போது, கேட்போர் தாங்களும் ஓரளவு அப்பராகவும், அருணகிரியாகவும் மாறி அந்தப் பேரானந்தத்தைப் பெறுவது போல் உணர்கின்றனர். திருப்புகழ் மணியவர்களின் பஜனைகளை நேரில் கேட்டு அனுபவிக்கும் பாக்கியம் பெறாதவர்களுக்காக அவர்கள் அவ்வப்போது எழுதிய கட்டுரைகளைத் திரட்டி "குங்குமம்" காரியாலயத்தார் புஸ்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். இப்புஸ்தகத்துக்கு ரசிகமணி டி. கே. ஸி. அவர்கள் அளித்த முன்னுரையில் "பக்தியின் கொந்தளிப்பை இந்தப் புஸ்தகத்தில் பார்க்கிறோம். சொல்லுக்கு அடிப்படையாய் உள்ள பக்தியைப் பார்த்து அனுபவித்துப் பயனடைவோமாக" என்று கூறுகிறார்.

[பிரசுரம்: "குங்குமம்" காரியாலயம், சென்னை 10, விலை: ரூ. 1.]

## யாழ்ப்பாணம் ஆரிய-திராவிட பாஷாபி விருத்திச் சங்கம்

(வெள்ளி விழா மலர் 1950)

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு அதிகமாகவே இலங்கையில் மேற்கண்ட சங்கம் தென் மொழியையும், வட மொழியையும் வளர்த்து வருகிறது. பரீட்சைகள் நடத்தியும், பரிசுகள் வழங்கியும், கூட்டங்கள் கூட்டியும், விழாக்கள் நடத்தியும் அருந்தொண்டாற்றி வருகின்றது. சமீபத்தில் அச்சங்கத்தினர் வெள்ளி விழா நடத்தி ஒரு மலர் வெளியிட்டிருக்கின்றனர். இம்மலரில் ஈழத்திலும் தமிழ் நாட்டிலுமிருக்கும் பல தமிழ்ப் புலவர்கள் கட்டுரைகள் எழுதியிருக்கின்றனர். நமது அருமைத் தலைவர் ராஜாஜி அளித்துள்ள சின்னஞ்சிறு கட்டுரை மாணிக்கம் போல் சுடர்விடுகிறது. அதில் ஒரு பகுதியைக் கீழே தருகிறோம்:

"ஆரியமும் திராவிடமும் ஒன்றோடொன்று கலந்து வளர்ந்திருப்பதில் ஒரு ஒப்பற்ற தனியழகைக் காணலாம். ஆங்கிலத்தில் லத்தீனும் கிரேக்க பாஷை மொழிகளும் கலந்து மகோன்னத செழிப்பும் அழகும் வேகமும் உண்டாயிருப்பதைப் போல் தமிழில் கலந்து நிற்கும் வட மொழிகளும் உதவி வந்திருக்கின்றன. இரண்டு உயிர்கள் கூடி வாழ்வதைக் கெடுப்பது பாவம். தமிழும் வட மொழியும் அன்புடன் கூடி வாழ்ந்து வந்த ஆண்டுகளின் எண்ணிக்கை பல்லாயிரக் கணக்கு. கலைமகளுக்கு ஆரியமும் தமிழும் அன்பில் ஏற்றத் தாழ்வில்லை."

## திருப்பூர் குமரன்

எத்தனையோ தேசபக்தர்கள் தேச விடுதலைக்காகச் சிறை புகுந்திருக்கின்றனர்; சிறையில் செக்கிழுத்திருக்கின்றனர்; கசையடி பட்டிருக்கின்றனர்; தடியடியைத் தாங்கியிருக்கின்றனர்; வீட்டை விட்டு, நாட்டை விட்டு, அஞ்ஞாத வாசம் செய்திருக்கின்றனர். அந்தத் தேசபக்தர்களுள் நம் தமிழ்நாட்டு மண்ணில் பிறந்து, தேசப்பணியாற்றிக் கடைசியில் உயிர்த் தியாகமும் புரிந்த உத்தம இளம் தேசபக்தர் திருப்பூர் குமரனைத் தமிழர்களாகிய நாம் என்றும் மறக்க முடியாது. பதினெட்டு வருஷங்க

ளுக்குமுன்பு திருப்பூரில் நடந்த சட்டமறுப்பு இயக்கம் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது.

அன்று தொண்டர்கள் தூய கதருடையுடன் மூவர்ணக் கொடி தாங்கி ஊர்வலம் வந்தனர். அந்த ஊர்வலத்தின் முன்னணியில் நம் தியாகி குமரன் ஆவேசத்துடன் வந்தார். இந்நூலாசிரியரான தேசபக்தர் ஸ்ரீ பி. எஸ். சுந்தரம் ஊர்வலத்துக்குத் தலைமை தாங்கி நடத்திச் சென்றார். உடனே கலைந்து போகும்படி போலீஸ் உத்தரவு பிறந்தது. தொண்டர்கள் சாத்விகப் போர் முறையைப் பின்பற்றிச் சத்தியாக்கிரகம் செய்தனர். போலீஸார் தடியடியின் மூலம் கூட்டத்தைக் கலைக்க முற்பட்டனர்.

நடுத்தெருவில் தேசபக்தர்கள் நையப் புடைக்கப்பட்டனர். தலைவர் ஸ்ரீ பி. எஸ். சுந்தரம் குற்றுயிராகக் கீழே விழுந்தார். தியாகி குமரன் இறுதிவரையில் உறுதியுடனிருந்து, தேசியக் கொடியைக் காத்து, கொடியும் கையுமாகக் கீழே சாய்ந்தார்.

அறப்போரில் அமரரான குமரனின் சரித்திரத்தைக் கல்லும் கனிந்து உருகும் வண்ணம் தேசபக்தர் ஸ்ரீ பி. எஸ். சுந்தரம் எழுதியிருக்கிறார். தடியடியினால் கடுமையாகக் காயமுற்றுப் பிறகு சிகிச்சை பெற்று இச்சரித்திரத்தை எழுத முன்வந்த ஆசிரியர், இப்பணியின் மூலம் சிறந்த தேசத் தொண்டாற்றியவராகிறார்.

[பிரசுரம்: தமிழ்ப்பண்ணை, தியாகராய நகர், சென்னை—17. விலை: ரூ. 1—0—0.]

## நிழலும் ஒளியும்

பாகவதர் கோபாலய்யர் பெண் மகாலட்சுமிக்கும், அவரது அம்மாஞ்சியின் பிள்ளை நாராயணனுக்கும் சின்ன வயதிலேயே விவாகம் நடக்கிறது. இதை ஒட்டிக் குடும்ப வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்கள், பந்துக்களுக்குள் உண்டாகும் மனஸ்தாபங்கள், படித்த வாலிபனின் விசித்திர மனப்போக்கு, நண்பர்களுக்குள் ஏற்படும் சோதனை முதலிய நாவல்களுக்கு வேண்டிய எல்லா அம்சங்களுடனும் நன்றாக எழுதப்பட்டிருக்கிறது இந்நூல்.

பாத்திரங்களின் அமைப்பும் அவர்கள் பேச்சும் நடை உடை பாவனைகளும் அவரவர்களின் இயல்புக்கேற்ற முறையில் அழகாகச் சித்திரிக்கப் பட்டிருக்கின்றன.

கவர்ச்சிகரமான அமைப்புடன் புத்தகம் அழகாயிருக்கிறது.

[ஆசிரியை: கி. சரஸ்வதி அம்மாள்; பிரசுரம்: கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை; விலை: ரூ. 4.]

## ஓ! அப்படியா!






"ஆஹா! மின்மினிப் பூச்சி போன்ற உன்னுடைய கண்களும், கிளி மூக்குப் போன்ற உன்னுடைய அதரமும்—ஆஹா!"

## 8. அப்புவின் அபிநயம்!

தன்னுடைய வார்த்தைகளினல் பிரேமாவின் மனது கலங்கிக் குழம்பித் தவறுதலாகத் தன் வலையில் விழுந்து விடுவாளோ என்று அப்பு நினைத்தான். அப்படித்தான் அவன் மனக்கோட்டை கட்டினன். நான்கு நாட்களுக்குப் பிறகு அவளது மனே நிலைமை எப்படி இருக்கிறது என்று அறிந்து கொள்வதில் அவனுக்கு ஒரு துடிப்பு ஏற்பட்டது. ஆடம்பரமாக ஆடையணிந்து சங்கரின் வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த முனுசாமி அவனைக் கண்டதும் புன்னகையுடன் "வாங்க சாமி!" என்று வரவேற்றன்.

"என்னப்பா முனுசாமி! சின்னய்யா இருக்கிருரா!" என்றன் அதிகார தோரணையில் அப்பு.

"இல்லீங்களே! அவங்க இல்லாத சமயம் பார்த்துத்தானே நீங்க வந்திருக்கீங்க!" என்றன் விஷமமாகச் சிரித்துக் கொண்டே முனுசாமி.

"சரிதான்; சின்னம்மா இருக்காங்களா!"

"சின்னம்மாதானே! இருக்காங்க!"

"ரொம்ப சரி!" என்று சொல்லிக் கொண்டே உள்ளே செல்ல யத்தனித்தான் அப்பு.

"கொஞ்சம் நில்லுங்க. ஒரு சங்கதி......" என்று அவனைத் தடுத்து நிறுத்தினன் முனுசாமி.

"என்ன சங்கதி!" என்று வியப்போடு கேட்டான் அப்பு.

"ஒன்றுமில்லீங்க. சின்னம்மா யாரு வந்தாலும் உள்ளே விடக் கூடாதென்று கண்டிப்பாய் உத்தரவு போட்டிருக்காங்க......"

"என்னைக் கூடவா......!" என்றன் அப்பு ஆச்சரியத்துடன்.

"யாராயிருந்தாலும் போகக் கூடாதுதான்!" என்றன் முனுசாமி கண்டிப்பாக.

"ஏன், பிரேமாவுக்கு இப்பொழுது உடம்பு சரியாயில்லையா!"

"உடம்பு சரியாய்த்தான் இருக்குங்க. மனசுதான் சரியாயில்லைன்னு தெரியுது."

"அதைத்தானே கேட்கிறேன்! மனது சரியாய்த்தான் இராது.

அப்புவின் பேச்சு சாதாரணமா! நான்கு நாளாய் அவனுக்கு அப்படித்தா னிருந்திருக்கும். மூனுசாமி, என் பேச்சு நல்லவர்களை எல்லாம் பயித்தியமாக்கி விடும். சில சமயம் பயித் தியம் பிடித்திருக்கிறவர்களை யெல்லாம்கூட நல்லவர்களாக்கி விடும்!'' என்றான் பெருமை யுடன் அப்பு.

''அப்படியா! நீங்க இப்படி வெட்டியா ஊரைச் சுற்றுவதைவிடப் பயித்தியக்கார ஆஸ்பத்திரிக்குப் போகலாங்க......''

''பயித்தியக்கார ஆஸ்பத்திரிக்கா! ஏன்?''

''அங்கே டாக்டரா வேலை ஒத்துக்கலாமே நீங்கன்னு சொல்ல வந்தேன்! நீங்க பேச்சி லேயே பயித்தியங்களை யெல்லாம் சரியாக்கிற தாயிருந்தால் அதுதாங்க நல்லது. இப்படி நீங்க வெளியிலே இருந்து நல்லவங்களோடே யெல்லாம் பழகினால் அவங்க பயித்தியமாகி விடுவாங்களே!''

''அதிலேதான் ஒரு ரகசியம் இருக்கிறது. நல்லவங்களைப் பயித்தியமாய் அடித்துத் தெளிய வைத்தால்தான் அவர்களுக்கு நல்ல உலக அனுபவம் உண்டாகிறது. அதற்காகத்தான் நான் இவர்களோடெல்லாம் பழகுகிறேன்.''

''சரிதான்; இப்பொழுதுதான் எனக்குச் சமாசாரம் விளங்குகிறது'' என்றான் மூனுசாமி.

''சரி, நான் உள்ளே போய்ப் பிரேமாவைப் பார்த்துவிட்டு வருகிறேன். அவன் மனக் குழப்ப மெல்லாம் என்னைக் கண்டதும் பஞ்சாய்ப் பறக்கிறது, பார்!''

''அது எனக்குத் தெரியாதுங்களா! நீங்க உள்ளே போகிறதைப் பற்றி எனக்குத் தடை இல்லே. ஆனால் சின்னம்மா வெளியே மூனுசாமியைப் பார்த்தீங்களான்னு கேட்டா இல்லேன்னு சொல்லிவிடுங்க. என் சம்சாரத் தைப் பார்த்தீங்களான்னு கேட்டாலும் இல்லேன்னு சொல்லிவிடுங்க!''

''இவ்வளவுதானே! இதில் என்ன கஷ்டம்! பயப்படாதே; அப்படியே சொல்லி விடு கிறேன்!'' என்று சொல்லி விட்டு உள்ளே செல்ல ஆரம்பித்தான் அப்பு.

''கொஞ்சம் இருங்க. இன்னொரு முக்கிய மான விஷயம்......''

''என்ன?''

''ஒரு இரண்டு ரூபாய் கை மாத்து இருந் தால் கொடுங்க. என் சின்னப் பையனுக்கு சுரம். மருந்து வாங்கணும்'' என்றான் மூனு சாமி சகஜமான போக்கில்.

அப்பு சட்டைப் பையைத் தடவிப் பார்த் தான். ஒரு தனி ஐந்து ரூபாய் நோட்டுத்தா னிருந்தது. சமயத்தில் என்ன செய்வது! ''அடாடா! என்னிடம் ஐந்து ரூபாய் நோட் டாய் இருக்கிறது. இருக்கட்டும், வைத்துக் கொள். சந்தர்ப்பம் நேர்ந்தபோது பாக்கி மூன்று ரூபாயைத் திருப்பிக் கொடுத்துவிடு!'' என்று சொல்லி அதை அவனிடம் கொடுத்து விட்டு அவன் உள்ளே சென்றான்.

பிரேமா ஏதோ ஒரு புத்தகத்தில் கவனமாய் இருந்தான். அப்பு அந்த அறையில் நுழைந் ததை அவன் கவனிக்கவேயில்லை. அப்பு ஒரு தடவை பலமாகக் கனைத்து விட்டு அங்கிருந்த நாற்காலி ஒன்றில் அமர்ந்தான். ஆனால் பிரேமா புத்தகத்தில் இருந்த கவனத்தைத் திருப்பவே இல்லை. அப்பு மறுபடியும் கனைத்துவிட்டு ''என்ன பிரேமா! என்ன புத்தகம் அது! தன்னை மறந்து அதில் லயித்து விட்டாயே!'' என்றான்.

பிரேமா அப்பொழுதுதான் சட்டென்று தலை நிமிர்ந்தான். அவன் எதிரில் அப்பு உட் கார்ந்திருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டான். ''நீங்கள் இங்கே எப்படி வந்தீர்கள்?'' என்று கேட்டான் ஆச்சரியத்துடன்.

''எப்படி வந்தேனா? வாசல் வழியாக மாடிப் படி ஏறித்தான் வந்தேன்!'' என்றான் அப்பு கேலி கலந்த புன்னகையோடு.

''அது எனக்குத் தெரியும். நீங்கள் கொல் லைப்புறச் சுவர் ஏறிக் குதித்து நூலேணி வழி யாக இங்கே வந்திருப்பீர்கள் என்று நான் நினைக்கவில்லை!''

''ஏன், அப்படியும் செய்யலாம். அன்பும் காதலும் எதையும் செய்யத் தூண்டும், பிரேமா!'' என்றான் அப்பு.

''அன்பு, காதல் என்று பித்துக் குளித்தன மாக இப்படி ஏதாவது செய்கிறவர்களுக்குத் தான் உலகத்தில் நிறைய ஜெயில்கள் ஏற் படுத்தி இருக்கிறார்கள். அது கிடக்கட்டும், வெளியே மூனுசாமி இல்லையா!''

''மூனுசாமி! இல்லையே!''

''அவன் பெண்டாட்டி காமாட்சி!''

''அவளையும் காணோம்.''

''அவர்கள் எங்கே தொலைந்தார்கள் இந்த வேளையில்! யாரா யிருந்தாலும் உள்ளே விடா தீர்கள் என்று அவர்களிடம் நான் சொல்லி வைத்திருந்தேனே!''

''நல்ல வேளையாக அவர்கள் இல்லாத சம யத்தில் நான் வந்தது என் அதிருஷ்டம்தான்! உனக்கு ஏதாவது உடம்பு சரியாய் இல்லையா?''

''உடம்பு சரியாய்த்தான் இருக்கிறது. எனக்கு என்னவோ யாரையும் பார்க்கப் பிடிக்கவே இல்லை.''

''என்னைக் கூடவா!''

''ஆமாம், உங்களைக் கூடத்தான் பார்க்கப் பிடிக்கவில்லை!''

''அடாடா! எனக்குத் தெரியும், இப்படி எல்லாம் வரும் என்று. இந்தக் காதல் நோய் இருக்கிறதே, அது ரொம்பப் பொல்லாதது. உணவு செல்லாது. உறக்கம் கொள்ளாது. நினைவு நிற்காது. எனக்குக் கூடத்தான் சில சமயங்களில் அப்படியெல்லாம் இருக்கிறது. நம் இருவருக்கும் இப்படி இருப்பதிலிருந்து ஒரு உண்மை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெள ளத் தெளிய விளங்கவில்லையா!''

''எனக்கு எல்லாம் தெளிவாகத்தானிருக் கிறது. நீங்கள்தான் எதையோ மனதில் நினைத்துக்கொண்டு தடுமாறுகிறீர்கள்!''

''உனக்குத் தெளிவாகி விட்டதென்றால் நான் நம்பவே மாட்டேன். இதைத்தான் நான் ஆதியிலிருந்தே 'சிந்தித்துப்பார், சிந்தித் துப்பார்' என்று அலறிக்கொண்டு வந்தேன். 'முதலில் உன்னை நீயே சிந்தித்துத் தெரிந்து கொள். பிறகு பிறரையும் சிந்தித்துத் தெரிந்து கொள். கடைசியில் நீ பிறரையும் பிறர் உன்னை யும் ஆராய்ந்து அறியும்படி விட்டு விடு. அப் புறம் நீங்கள் செய்ய வேண்டிய கடமை

இன்னதென்று விளங்கும்' என்று நான் ஹிமாசலத்திற்குப் போயிருந்தபோது ஒரு யோகீஸ்வரர் சொன்னார். அதைத்தான் உனக்கு நான் சொல்லுகிறேன்......''

''நீங்கள் எனக்கு ஒன்றும் சொல்ல வேண்டாம். நான் என்னைப்பற்றிச் சரியாய்த் தெரிந்து கொண்டிருக்கிறேன். உங்களைப் பற்றியும் சரியாய்த் தெரிந்து கொண்டிருக்கிறேன்...''

''ரொம்ப சரி! அதுதான் நல்லது. முதலில் என்னைப்பற்றி என்ன தெரிந்துகொண்டிருக்கிறாய்! சொல்லு பார்ப்போம்......!''

''உங்களைப் பற்றியா! உங்களைப்பற்றித் தெரிந்து கொள்வது சிறிது கடினம்தான். புத்திசாலிகளைப் புத்திசாலி என்று சுலபமாகத் தெரிந்து கொண்டு விடலாம். பயித்தியக்காரர்களைப் பயித்தியக்காரர்கள் என்றும் சுலபமாகத் தெரிந்துகொண்டு விடலாம். ஆனால் உங்களைப் போன்ற இரண்டும் கெட்டான் ஜீவன்களைத் தெரிந்து கொள்வதுதான் கடினம்.''

''நீ நினைப்பது அத்தனையும் தவறு. நான் மூன்று முறை உலகம் சுற்றினவன். அதனால் என்னுடைய பேச்சில் ஒரு பண்பாடு அமைந்து விட்டது. நான் பேச்சினால் என் காரியத்தை மாத்திரம் சாதித்துக் கொள்கிறவனல்ல. பிறருடைய நலனையும் கருத்தில் கொண்டுதான் பேசுவேன். உதாரணமாக நம்முடைய காதல்......!'' என்று இழுத்தான் அப்பு.

''மிஸ்டர் அப்பு! மறுபடியும் இன்னொரு தடவை நம்முடைய காதல் என்று பேசாதீர்கள். அப்புறம் எனக்குக் கடுமையான கோபம் வரும். உங்களுக்கு என்னைப் போன்ற ஒரு பெண்ணிடம் எப்படி மரியாதையாகப் பேசுவது, எப்படி நடந்து கொள்வது என்பது தெரியவில்லை. அதற்காக இன்னும் மூன்று தடவை நீங்கள் உலகப் பிரயாணம் போய் விட்டு வந்தால்கூட நல்லது!'' என்றாள் கோபமும் கேலியும் பொங்க.

''மூன்று தடவை மாத்திரம் என்ன! இன்னும் முப்பது தடவை வேண்டுமானாலும் உலகச் சுற்றுப் பிரயாணம் போகத் தயார்! ஆனால் நீ சொல்லுவது போல் எனக்குப் பெண்களிடம் பேசத் தெரியாது என்று நினைப்பதுதான் தவறு. நான் பாரிஸ் நகரிலிருந்தபோது 'மாடம் லூஸ்' என்ற சீமாட்டியோடு பேசினேன். 'உலகத்திலேயே ஒரு பெண்ணிடம் இங்கிதமாகப் பேசும் ஒரே ஒரு ஆண் பிள்ளையை இப்பொழுதுதான் கண்டேன், கண்டேன்' என்று சொல்லி என்னை மெச்சிக் கொண்டாள் அவள்......''

''பாவம்! அந்த லூஸ் சீமாட்டியிடம் உங்களைத் தவிர இங்கிதமாக வேறொரு ஆண் பிள்ளையும் பேசியதில்லை போலிருக்கிறது. ஆனால் நீங்கள் எல்லோரையும் அந்த லூஸ் சீமாட்டி போல நினைத்துவிடக் கூடாது. அது பயித்தியக்காரத்தனம், மிஸ்டர் அப்பு!'' என்றாள் பிரேமா.

''உன்னை நான் லூஸ் சீமாட்டிக்குச் சமமாக நினைக்கவே இல்லை. ஏனென்றால் அவளுக்கு வயது அறுபதுக்கு மேலிருக்கும். உனக்கு இருபதுதானே இருக்கும்! நீ அவளை விட எவ்வளவோ அழகு. ஆஹா! மின்மினிப் பூச்சி போன்ற உன்னுடைய கண்களும், கிளி மூக்குப் போன்ற உன்னுடைய அதரமும்—ஆஹா! உன் பேச்சில்தான் என்ன இனிமை, உன் பாட்டில் ஒரு உருக்கும் சக்தி இருக்கிறதே!—உன் நடையில் அன்னங்களெல்லாம் பின்னமடைந்து என்னத்திற்காக இந்த வாழ்க்கை என்று தற்கொலை செய்துகொண்டு விடுமே!—உன்னுடைய அலங்காரம் தஞ்சாவூர் முத்துப் பல்லக்குப் போல.........'' என்று தன்னை மீறிய ஆவேசத்துடன் பிரேமாவை வர்ணிக்கத் தொடங்கினான் அப்பு. பிரேமாவுக்கு இதைக் கேட்கக் கேட்க ஆத்திரமும் கோபமும்தான் பீறிக்கொண்டு வந்தன. எப்படியாவது அவனை வெளியேற்றி விட்டால் தேவலாம் போலிருந்தது. ''மிஸ்டர் அப்பு! தயவு செய்து உங்கள் பேச்சைக் கொஞ்சம் நிறுத்துங்கள். இன்னொரு நாளைக்கு சாவகாசமாக உங்கள் வர்ணனைகளைக் கேட்கிறேன். இப்பொழுது தயவுசெய்து வெளியே போய் விடுங்கள். நான் இந்தப் புத்தகத்தில்

---

## இந்தாருங்கள்!



கொஞ்சம் கவனம் செலுத்தலாமென்று நினைக்கிறேன்" என்றாள் தாட்சண்யமும் வெறுப்பும் கலந்த குரலில்.

"புத்தகம் படி — தாராளமாகப் படி !— உனக்குத் தொந்தரவு கொடுக்காமல் இருக்க வேண்டுமென்பதுதான் என் ஆவலும் ஆசையும். புத்தகம் படிப்பதோடு என்னைப் பற்றியும் சிறிது சிந்தித்துப் பார். என் உள்ளம் உன்னைக் கண்டதும் எப்படி உருகுகிறது என்பதையும் யோசித்துப் பார். உலகத்தில் உண்மையான காதலை வளர்ப்பதற்காகத்தான் சில பெண்களையும் சில ஆண்களையும் சந்திக்கச் செய்கிறான் கடவுள். உன் சகோதரன் சங்கரனோடு சினேகிதம் செய்யும்படி அதிருஷ்டவசமாக எங்கோ இருந்த என்னை இழுத்து வைத்தான் கடவுள். அதோடு மட்டுமல்ல ; உன்னைப் பார்க்கும்படி வேறு செய்து விட்டான். உன்னைப் பார்க்கும்படி செய்ததோடு மட்டும் விட்டுவிடவில்லை ; என் இருதயத்தில் இருநூறு ஊசியை ஒரே சமயத்தில் குத்துவதுபோல் அல்லும் பகலும் உன் நினைவிலேயே துடிதுடிக்க விட்டு விட்டான் அந்தப் பொல்லாத கடவுள். காதல் கல்யாணம் இவைகள் இல்லாவிட்டால் கொலை — தற்கொலை செய்து கொள்ள வேண்டியதுதான் பிரேமா ! இந்த கதி எனக்கு மாத்திரம் தானா? உனக்கும் ஒரு நாள்......"

"போதும் நிறுத்துங்கள் ! எனக்கு ஒரு நாளும் அது ஏற்படாது. நீங்கள் கொலையோ, தற்கொலையோ எது வேண்டுமானாலும் செய்து கொள்ளலாம்......"

"நான் ஒரு நாளும் தற்கொலை செய்து கொள்ள மாட்டேன். என்னுடைய நாலு வருஷத் திட்டத்தில், இருபத்தொன்பது அம்சங்களில் பத்து அம்சங்களாவது நிறைவேறாத வரையில் இந்த உடலை மேவிய உயிர் பிரியாது பிரேமா !" என்றான் அப்பு.

"ரொம்ப சந்தோஷம். தற்கொலை செய்து கொண்டாலும் உங்கள் நாலு வருஷத் திட்டத்திற்காகச் செய்து கொண்டால்தான் உலகத்திற்கு உவப்பாக இருக்கும். அல்லது, அந்த நாலு வருஷத் திட்டத்தின் ஞாபகார்த்தமாகவாவது இருக்கும். வீணாகக் கைகூடாத காதலுக்கெல்லாம் உயிரை மாய்த்துக்கொண்டால் உலகம் உங்களைப் பயித்தியக்காரர் என்று எள்ளி நகையாடும். சரி, போய் வாருங்கள் ! நான் கொஞ்சம் படிக்கவேண்டும்" என்று சொல்லிப் பிரேமா புத்தகத்தைப் பிரித்து அதில் கவனத்தைச் செலுத்தலானாள்.

அப்பு சிறிது நேரம் தயங்கி நின்றான். தன் வாய்ப் பேச்சு வலையில் பிரேமா விழுந்து விடவில்லை என்பதை ஆரம்பத்திலேயே அவன் உணர்ந்து கொண்டான். ஆனால் அந்த ஏமாற்றம் அவனுக்குப் பெரிய தோல்வி மனப்பான்மையைக் கொடுத்து விடவில்லை. இன்னும் சிறிது முயற்சி செய்து அவளைத் தன் அபிப்பிராயத்திற்கு இணங்கச் செய்யலாம் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. வேறு வழியில் அவளை அடையும் யுக்திகளைக் கைக்கொள்ள நினைத்தான். "சரி நான் போய் வருகிறேன், பிரேமா !" என்று சொல்லிவிட்டு அவன் வெளியே சென்றான். (தொடரும்)

# மூன்று பேர்

கே. ஏ. அப்பாஸ்

ரயில் தண்டவாளத்தை ஒட்டினாற் போல் மூன்று மாதர்கள் நடந்து சென்று கொண்டிருந்தனர். அவர்கள் எந்த மாகாணத்தவர்கள் என்பதோ, அந்தத் தண்டவாளம் எந்த இரு ஊருக்கும் இடையில் இருந்தது என்பதோ இக்கதைக்கு அவசியமில்லாத விவரங்கள். ஆகவே அதைப் பற்றி இங்கு கூறவில்லை. ஆனால் நடந்து சென்றவர்கள் மூன்று பேர் என்பதுதான் முக்கியம்.

அவர்களில் ஒருத்தி பிச்சைக்காரி. அவள் கந்தல் துணிகளை உடுத்தி யிருந்தாள். அவள் முகத்தில் தூசி, படலம் படலமாகப் படிந்திருந்தது. அவள் தலை மயிர் சடையிட்டிருந்தது. அவள் பாதங்கள் வீங்கிக் குதிகாலில் பித்தவெடி ஏற்பட்டு, இரத்தம் கசிந்தது.

இன்னொருத்தி இள நங்கை. சுமார் இருபது வயது மதிக்கத் தக்க மங்கை. அவள் கண்களில் வசீகரிக்கும் ஒளியிருந்தது. இளமை அங்கந்தோறும் கொப்புளித்துக் கொண்டிருந்தது. நடையில் ஒரு அலட்சிய பாவமும் சுக பாவமும் கலந்து பார்ப்போரை வசீகரிப்பதா யிருந்தது.

மற்றொருத்தி தாய்மை எய்தியவள். பிறந்து ஒரு வாரமான குழந்தையைக் கையில் ஏந்திக் கொண்டு நடந்து போனாள். கந்தல் துணியால் மூடி மறைத்து வைத்திருந்த தன் குழந்தையை அடிக்கொரு தரம் வாஞ்சையுடன் பார்த்த வண்ணம் நடந்து சென்றாள்.

மொத்தத்தில் மூன்று பேரும் மௌனமாக நடந்து சென்றனர். தூரத்தில், ஏதோ ஒரு வண்டி வருவதன் சத்தம் கேட்கவே தலை நிமிர்ந்து பார்த்தனர். ரயில் தண்டவாளங்கள் தொடுவானம் வரை நீட்டிய விரல் போல் காட்சியளித்தன. அந்தத் தொடு வானத்தில் கரும் புகை தோன்றியது.

பிச்சைக்காரி "இன்னும் இரண்டு நிமிஷங்களில் அந்த வண்டி இங்கே வந்து விடும்" என்றாள்.

மற்ற இருவரும் அவள் கூறிய வார்த்தைகள் குறித்த ஆபத்தை யுணர்ந்தனர். "என்ன? என்ன சொன்னாய்?" என்று பீதியடைந்த குரலில் சேர்ந்தாற் போல் கேட்டனர்.




"ஒரு நாளைக்கு நாலு அவுன்ஸ் சாப்பிட வேண்டுமென்றால், யாராலே முடியும்?"
"நீங்க சொல்றது என்னங்க ஆச்சரியமா இருக்கே! ஆறு அவுன்ஸ் போதாதுங்கறாங்க ஊரிலே......"
"அட அதைச் சொல்லவில்லை; நான் சொல்கிறது மருந்துங்க..."

"நான் என்ன சொல்லுகிறேன் என்பது தான் உனக்கு நன்றாகத் தெரியுமே? இன்னும் என்ன கேள்வி வேண்டிக் கிடக்கிறது!" என்றான் அந்தப் பிச்சைக்காரி.

இவ்விதம் கூறிவிட்டு அவன் தொடுவானத்தைக் கூர்ந்து பார்க்கலானான். தொடுவானத்தில் கரும்புள்ளியாகத் தோன்றிய ரயில் இன்ஜின், மெள்ள மெள்ளப் பெரிதாகித் தன் உண்மைச் சொரூபத்தைக் காட்டத் தொடங்கியது. ஆம், விநாடிக்கு விநாடி வெகு வேகமாக ரயில் அவர்களை நோக்கி வந்து கொண்டிருந்தது.

"இந்த ரயில்வண்டி நமது தொல்லைகள், கஷ்டங்கள் எல்லாவற்றையும் தீர்த்து விடும் என்பதுதான் உனக்குத் தெரியுமே? பின் என்ன கேள்வி வேண்டியிருக்கிறது?" என்றான் அந்தப் பிச்சைக்காரி.

"ஆனால் நான் சாக விரும்பவில்லையே! இன்னும் என் இளமை மாறவில்லை; இளம் பருவத்தைக் கடக்கவில்லை. வாழ்க்கையில் பார்க்க வேண்டியவை அனுபவிக்க வேண்டியவை எவ்வளவோ இருக்கின்றனவே!" என்றாள் அந்த இளம் பெண்.

"உன் இளமை எதற்குப் பிரயோஜனம்? இரக்கமற்ற புருஷனுக்குச் சில காலம் உன் இளமையின் காரணமாக நீ விளையாட்டுப் பொம்மையாக இருக்கலாம். பிறகு அவனுக்கு அலுப்பு ஏற்பட்டதும் கொஞ்சம் கூட இரக்கமின்றித் உன்னை தூர எறிந்து விடுவான். ஆதலால் உன் இளமை எதற்குப் பெறும்?"

"சே, சே! அப்படிச் சொல்லாதே! அவரைப் பழித்து ஒரு வார்த்தையும் சொல்லாதே. பாவம்! அவர் என்னை எவ்வளவோ நேசித்தார். நிஜமாகவே என்னைக் காதலித்தார். ஆனால், பாவம், அவரால் தம் பெற்றோர்களை எதிர்த்து ஒரு வார்த்தை கூற முடியவில்லை, அவர்கள் விருப்பத்துக்கு மாறாக நடக்க முடியவில்லை, அவ்வளவுதான்!"

"அப்படியானால் இன்னும் நீ காதல், அன்பு என்பதில் நம்பிக்கை வைத்திருக்கிறாய் என்று சொல்லு! பெண்களைச் சிறைப்பிடிக்க ஆடவன் சிருஷ்டித்த அம்மாய மொழிகளில் இன்னும் மயங்கிக் கிடக்கிறாய் என்று சொல்லு! ஆனால் உன் இளமையைப் பற்றி மட்டும் இப்பவே சொல்லி வைக்கிறேன். உன் இளமை, இன்னும் ஒரு வருஷத்துக்கோ இரண்டு வருஷத்துக்கோதான் இருக்கும். அதன் பலனாக ஒரு சில செப்புக் காசுகள் உடலை விற்றுச்சம்பாதிக்க உதவியாக இருக்கலாம். பிறகு......பிறகு......" என்று சொல்லிக் கொண்டே வந்தபோது பிச்சைக்காரியின் நாக் குழறியது; கண்களில் தீப்பொறி பறந்தன. "பிறகு...ஆம், வெகு சீக்கிரத்திலேயே உன் இளமையை இழந்து விடுவாய். முதுமை தட்டிவிடும். பருகிழவியாகிப் போவாய்! அப்போது சாதாரணமாக மக்கள் ஏழைகளுக்குக் காட்டும் பரிவுகூட உனக்குக் காட்ட மாட்டார்கள். பிச்சை கூடப் போட மாட்டார்கள்."

"ஆயுள் இருக்கும் போது அத்தகைய கேவல வாழ்க்கையாயினும் வாழ்ந்துதான் தீரவேண்டும் என்று தோன்றுகிறது! அதுதான் நல்லது என்றும் தோன்றுகிறது!" என்று வாதாடினாள் அந்த இளமங்கை. ஆனால் அவள் வாதம் பிச்சைக்காரியின் அனல் கக்கும் மொழிகளின் எதிரில் ஒரு கணமும் நிற்கமுடியாமல் மறைந்தது!

அடுத்தாற்போல் அந்தப் பிச்சைக்காரி தாய்மை எய்திய அந்தப் பெண்ணைப் பார்த்தாள். "நீ என்ன சொல்லுகிறாய்? நீ கூடச் சாவதற்குப் பயப் படுகிறாயா?" என்றாள்.

"சாவு என்ற வார்த்தையே சொல்லாதே!" என்று கூவினாள் அந்தத் தாய். "நான் சாக விரும்பவில்லை. என் குழந்தைக்காகவாவது நான் உயிர்வாழ விரும்புகிறேன்" என்றாள்.

பிச்சைக்காரியின் கண்களில் அளவு கடந்த அருவருப்பு காணப்பட்டது. அவன் அந்தக் குழந்தையைச் சுட்டிக் காட்டி, "இந்த மாமிசப் பிண்டமா உன்னைச் சாக வேண்டும் என்ற துணிவிலிருந்து தளரச் செய்கிறது. இது குழந்தையா?—அல்ல! உன் பலவீனத்தின் ஞாபகார்த்தப் பொருள்! உனது வீழ்ச்சியின் நினைவுச் சின்னம். இவ்வுலகம் உனக்கு இழைத்த கொடுமையின், உலகம் வழங்கிய மாபெரும் அநியாயத்தின் உருவமல்லவா இது? இதன்பொருட்டா நீ உயிர் வாழ விரும்புகிறாய்?" என்றான்.

"எனக்குத் தெரியும். இந்த விஷயம் உனக்குத் தெரிந்ததை விட எனக்கு நன்றாகத் தெரியும். எனினும் இக்குழந்தை என் குழந்தை, என்னுடையது, என் உடலின் ஒரு உறுப்பு, என் நிணத்தின் ஒரு பகுதி!" என்றாள் தாய்.

"அட! இதெல்லாம் என்ன பிதற்றல்! கேட்கச் சகிக்கவில்லை! மனப் பிராந்தி இவையெல்லாம். உன்னை உன் தாயாரும் தகப்பனாரும் வீட்டை விட்டு மழையும் புயலுமாக இருந்த ஒரு நாள் விரட்டினார்கள்! அப்பொழுது அவர்கள் உன்னைப் பற்றி, இப்பொழுது நீ உன் குழந்தையைப் பற்றிப் பேசினாயே அப்படியெல்லாம் நினைத்தார்களா? உன்னை அவர்கள் தங்கள் உடலின் ஒருகூறு! தங்கள் நிணத்தின் நிணம் என்று கருதினார்களா?" என்று பொறுமை இழந்து கூறினான் அந்தப் பிச்சைக்காரி.

அதற்கு அந்தத் தாய் சொன்னாள்: "உனக்கு ஒரு விஷயம் சொல்லுகிறேன். நான் சாவதற்குச் சற்றும் தயங்கவில்லை. நான் சாவதானால் இந்த உயிரின் துன்பமாகிலும் தீர்ந்தது என்று இருக்கும் அல்லவா? ஆனால் இந்தப் பச்சிளங் குழந்தையின் கதி என்னவாகிறது? இதை யார் பார்த்துக் கொள்வார்கள்?"

"இந்தக் குழந்தையும் உன்னுடன் சாகட்டும். குறைந்த பக்ஷம் இவ்வுலகை விட்டு ஒரு பிச்சைக்காரனாகிலும் குறைந்தான் என்றிருக்கும். ஆம், இந்தப் பிச்சைப் பிழைப்பைத் தவிர வேறு என்ன பிழைப்பு வருங்காலத்தில் இந்தக் குழந்தைக்கு ஏற்பாடு செய்யப் போகிறாய்?"

தாய் மறுபடியும் தடுத்துப் பார்த்தாள். குழந்தைக்காக மற்றும் ஒரு முறை கெஞ்சினாள். ஆனால் அந்தப் பிச்சைக்காரி தீர்மானித்து விட்டான்; அவன் அந்த முடிவுக்கு வந்துவிட்டான்.

ரயில் என்ஜின் இப்பொழுது வெகு அருகில் வந்துவிட்டது. பயங்கர பூதாகார உருவத்துடன் அண்ட பிண்ட சராசரங்கள் நடு நடுங்க வீலிட்டுக் கொண்டு வந்துவிட்டது.

பிச்சைக்காரி, "சரி, நீங்கள் யாரும் உடன் வரவில்லை என்றால் நான் மட்டுமாகிலும் நிச்சயமாகச் சாகப் போகிறேன். ஆம், நான் எதன் பொருட்டும் உயிர் வாழ வேண்டியதில்லை யல்லவா?" என்றான்.

"நீயின்றி எங்களால் உயிர்வாழ முடியாது என்பது உனக்குத் தெரியும். நீ இறந்து விட்டால், நாங்களும் உயிர் துறக்க வேண்டியதுதான்" என்றாள் அந்த யுவதியும் தாயும் தங்கள் தோழியை வெகு பிரயாசைப் பட்டுத் தடுத்துக் கொண்டே.

*

இப்பொழுது ரயிலுக்கும் அவர்களுக்கும் இடையில் ஒரு கஜ தூரமே இருந்தது. அவ்வளவு நெருங்கி வந்து விட்டது ரயில். அந்தப் பிச்சைக்காரி ரயில் தண்டவாளத்தின்மீது விழச் சென்றபோது என்ஜின் 'கூ' என்று வீலிட்டது. என்ஜின் டிரைவர் பெரு முயற்சி செய்து பிரேக்குகள் போட்டு, ஓடிக் கொண்டிருந்த ரயிலை நிறுத்தினார். நிறுத்தி என்ன புண்ணியம்? என்ன பலன்?

ரயில் என்ஜினில் வேலை செய்து கொண்டிருந்தவர்கள், என்ஜின் சக்கரங்களில் மாட்டிக் கொண்டிருந்த உடலை வெளியே எடுத்தார்கள். அதற்குள் அங்கு ரயில் பிரயாணிகள் கூட்டமாகக் கூடிவிட்டார்கள்.

அவர்களில் ஒருவர், "யாருமில்லை; யாரோ ஒரு பிச்சைக்காரிதான்!" என்றார்.

இன்னொருவர் "பாவம், ஒரு இளம் பெண், பார்க்க அழகாகக் கூட இருக்கிறாள்" என்றார்.

மூன்றாவதாக ஒரு பிரயாணி, "அட பாவமே! ஒரு தாய் அல்லவா இறந்து விட்டாள், கையில் குழந்தையுடன்" என்று அங்கலாய்த்தார்.

இப்படி ஜனங்கள் பேசிக் கொண்டிருந்த போது, அவ்விடத்துக்கு அவசர அவசரமாக வந்தார் ஒருவர். அங்கே கூட்டம் கூடியிருக்கிறதே, என்னவென்று தெரிந்து கொண்டு போக வந்தார். அவரிடம் வேறொருவர், "யாருமில்லை; யாரோ ஒரு பெண்பிள்ளை......" என்று சொல்ல ஆரம்பித்தார்.

ஆனால் அந்தக் கூட்டத்தில் மக்களின் மன இயல்புகளை உணர்ந்த ஒரு வேதாந்தி யிருந்தார். அவர் கண்கள், மற்றவர்களுடைய கண்கள் பார்த்ததை விட அதிகமாகவே பார்த்தன. அதனால் அவர், "இல்லை; ஒரு பெண் பிள்ளையா இறந்தாள்? இல்லையப்பா, மூவர்" என்றார்.

இந்தியாவில்
ஸ்தாபிதம் : 1933

தலைமை ஆபீஸ் :
மதுரை




கிளைகள் :
பம்பாய்
அகமதாபாத்
கல்கத்தா
நாகபுரி

# பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ்

**கம்பெனி, லிமிடெட்**

சிறந்த சேவை செய்து வருகிறது

## நெருப்பு, கப்பல், மோட்டார், விபத்து

முதலிய சகலவித இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள்

மொத்த ஆஸ்திகள் ரூ. 76,00,000

•

பிரதம ஏஜண்டுகள் :

**ஏ. & எப். ஹார்வி லிமிடெட், மதுரை Etc.**



Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392